# தர்மம் மிகு திருப்பறம்பூர்

## ஸ்ரீ சைலபுரம் என்னும் திருப்பறம்பூர் வரலாறு


திருப்பறம்பூர் ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலயம்

பேரா. எஸ். பரதன்

திருமதி மருதேவி பரதன் அறக்கட்டளை,
சென்னை - 600 040.



ஸ்ரீ தர்மதேவி, திருப்பறம்பூர்

## தரும தேவி வணக்கம்

பூமேக மாகநி றைந்தே மலர்சொரி பிண்டியின் கீழ்
நேமீசர் பொற்பாதம் சென்னியின் மேல்நிக ராயணிந்து
தீமேக வல்வினை தீர்த்தே வயலைச் செழித்தவளே
தாமோத ரன்மிசைத் தானேறி வாழ்தாம் தேவதையே!

சிங்கத்தை வாகனமாகப் பெற்று வயலாமூரில் செழித்து வளர்கின்ற தரும தேவியே! மேகக் கூட்டம் போல் அடுக்கடுக்காய்ப் பூத்து விளங்கி மலர்களைச் சொரிகின்ற அசோக மரத்தின் கீழ் எழுந்தருளிய நேமி தீர்த்தங்கரருடைய பொன்போன்ற பாதங்களை முடி மீது சிறக்க அணிந்து, தீமேகம் போல் மக்களைச் சூழும் தீவினையினைப் போக்கி அருளும் உன்னை வணங்குகின்றேன்.

ஞானசாகரர் இயற்றிய இடையாலக் குறவஞ்சி
உரையாசிரியர் புலவர் ஆ.திருமொழி
ஜைன இளைஞர் மன்றம்

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | . | Dharmamigu Thirupparambur (Sri Sailapuram ennum Thiruparambur Varalaru) |
| Author | : | Prof. S. Bharathan, Ph.D , |
| Copy Right | · | Author |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 18.06.2010 |
| Paper Used | : | Maplitho |
| Size of the Book | - | 1/8 Demmy |
| Number of Pages | : | XIV+170 |
| Price | : | Rs.120.00 |
| No. of Copies | : | 1000 |
| Printer | : | Padmavathi Print House,<br>Chennai - 600 005.<br>Ph : 9382102719 |
| Copies can be had from | · | Publisher |
| Type Setting | | Balaji Graphics,<br>Chennai - 5 Cell 9962205888 |
| Publisher | | Thirumathi Marudevi Barathan<br>Arakkattalai,<br>Chennai - 600 040 |
| Publication No. | : | 2 |
| Subject | | History of Village Thiruparambur and Ancient Jain Temple, Biography of Jain saints Sastiris and great Personalities. |
| File Name | . | Thiruparambur. |

**சு. ஸ்ரீபால் IPS (ஓய்வு) FISM**

முன்னாள் தமிழ்நாட்டுக் காவல்துறை

தலைமை இயக்குநர்

---

# அணிந்துரை

பேராசிரியர் எஸ். பரதனின் இந்தப் படைப்பு மிகுந்த பாராட்டுக்கு உரியது. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவைகளைக் கீழே பட்டியல் இடுகின்றேன்.

1. அவருடைய வரலாற்று உணர்வு போற்றத்தக்கது. இன்று உலகத்தில் யாரும் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்குச் சாதனைகளைப் புரிந்து இருக்கும் இந்தியாவும், இந்தியாவிலேயே சில ஆயிரம் பேர்களாக இருக்கும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட சமணர்களும், மொத்த இந்தியாவில் 1/4%க்கும் குறைவாக மக்கள் தொகை உள்ள அனைத்து மொழிப் பேசும் ஜைனர்கள் 30% வருமானவரி செலத்துவதும் போன்ற பல உண்மைகள் வரலாறு இல்லாததால் மறந்து விடும் சூழ்நிலை உள்ளது. இது மாற்றப்பட வேண்டும் என்று அவர் எடுத்த முயற்சி பாராட்டுக்கு உரியது.

2. "ஆன்மிகத் தோட்டத்தில் பூத்த ஒரே சுயமரியாதை மலர் ஜைனம்" என்று உலகுக்கு உணர்த்திய ஜீவபந்து ஸ்ரீபால் போன்றவர் வரலாற்றை எழுதுவது இளைஞர்களுக்கு எழுச்சியூட்டுவதாக அமையும்.

3. எங்கே சென்றாலும் நமக்கென்று ஒரு தனி இடத்தைப் பிடிக்க முடியும் என்று துணிவோடு தமிழ்நாட்டுச் சமணர்களுக்குத் தலைவராக விளங்கி சென்னையில் முதல் ஜைன ஆலயத்தை நிறுவி, இலக்கியச் சமுதாயப் பணிகளுக்கு முன்னோடியாகத்

திகழ்ந்த திரு. தி. ஆதி நயினார் அவர்களின் வரலாறு, அவருடைய தியாகம் நெஞ்சைத் தொடுகின்றன.

4. அறிவியல் இயல்பாக அமைந்து, மனிதனைப் பண்படுத்தித் தெய்வம் ஆக்குவது ஜைனம் என்பதைத் தங்கள் வாழ்க்கையில் நிரூபித்துக் காட்டிய தவப் புனிதர்கள்.

1. ஸ்ரீ தர்ம சாகர்.

2. ஸ்ரீ சுதர்ம சாகர்

3. ஸ்ரீ கஜபதி சாகர்

4. ஸ்ரீ சந்திர சாகர்

ஆகியவருடைய தியாகத் துறவு வரலாறு ஜைனத்தின் சிறப்பை நன்கு விளக்குகிறது.

5. ஜைன நெறிகளைப் பரப்பப் பெரிதும் பாடுபட்ட ஸ்ரீ பரத சக்ரவர்த்தி சாஸ்திரியார், இன்றும் தன்னுடைய 86வது வயதில் ஓயாது பாடுபட்டுவரும், ஆதம்பாக்கத்தை ஆதிபகவான் பாக்கமாக மாற்றிய ஸ்ரீ சிம்மச்சந்திர சாஸ்திரியார் வரலாறுகள் பிறருக்காக வாழ்வதே வாழ்க்கை என்று எடுத்துக் காட்டுகின்றது.

6. ஸ்ரீ சுதர்ம சாகர் நினைவு மண்டபம், ஸ்ரீ தர்ம சாகர் நூல் நிலையம் வரும் தலைமுறையினர் வாழ்வை நெறிப்படுத்தும் மையங்களாகத் திகழும் என்று நான் நம்புகிறேன்.

7. வழிபாடும் விழாக்களும் பகுதி "ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு" என்ற நீதியைப் புகட்டுகின்றது.

8. 'விடுதலைப் போராட்ட களத்தில் திருப்பறம்பூர்' என்ற பகுதி எதற்கும் நாங்கள் சளைத்தவர்கள் இல்லை என்பதைத் தெளிவாக முழக்கமிடுகிறது.

ஒரு நூல் சிறப்பாக அமைய மூன்று தகுதிகள் தேவை. அவை வருமாறு.

1. ஆழமான கருத்துக்கள்

2. குறைவான சொற்கள்

3. புத்தகத்தைக் கையில் எடுத்தால் படித்து முடிக்கும் வரை கீழே வைக்கக் கூடாது என்று படிப்பவரைச் சுண்டி இழக்கும் நடை.

இந்த மூன்றும் இந்தப் புத்தகத்திற்கு அதிகமாகவே உள்ளன. எனக்கு இருக்கும் ஒரு வருத்தம் நான் திருப்பறம்பூரில் பிறக்கவில்லையே என்பதுதான். ஆனால் இருபதாம் நூற்றாண்டின் ஈடு இணையற்ற ஜைனராக வாழ்ந்த திரு தி. ஆதி நயினார் பெண் வயிற்றுப் பேரன் என்பது எனக்குச் சிறிது ஆறுதலைத் தருகின்றது.

ஒவ்வொரு ஊரைச் சார்ந்த ஒவ்வொரு அறிஞரும் இப்படிப்பட்ட உண்மையான வரலாற்று நூல்களை எழுதுவது நமக்கும், நாட்டுக்கும் நலம் பயக்கும்.

நம்மிடையே அறிஞருக்குப் பஞ்சம் இல்லை. எழுதுங்கள். எழுச்சியை உருவாக்குங்கள். நாளை நமதே.

புத்தகம் சிறப்பான முறையில் வெளிவந்து இருப்பதற்குக் காரணமான அனைவரையும் நான் மனமாரப் பாராட்டுகின்றேன்.

சென்னை
2.6.2010

அன்புடன்
சு. ஸ்ரீபால்

## சிறப்புரை

நாம் பல பெரியார்களின் சுயசரிதங்களைப் (Auto-Biography) படித்திருக்கிறோம். அல்லது கேள்விப் பட்டிருக்கிறோம். அதுபோலவே பல சான்றோர்களின் வரலாற்றை, (Biography) பிறர் எழுதப் படித்திருக்கிறோம். மேலும் பல நாட்டின் வரலாற்றையும் பள்ளிப் பாடங்களில் படித்திருக்கிறோம். ஆனால் ஒரு கிராமத்தின் வரலாற்றை, பெருமையை, சிறப்பை, அங்கிருந்த ஆன்றோர்களின் அருமையை முறையாகக் கூறும் நூலை, நாம் படித்திருக்கிறோமா? நாம் அத்தகைய நூல்களைக் காண்பது மிக அரிது.

ஆனால் இன்று நம் கையில் தவழும் "தருமம் மிகு திருப்பறம்பூர்" எனும் நூல், மேன்மைமிக்க திருப்பறம்பூர் கிராமப் பெருமைகளை, அங்கு வாழ்ந்த சான்றோர்களைப் பற்றிக் கூறுவதாகும். சுமார் இரண்டாண்டுகளாக, ஆராய்ந்து, பல இடங்களில் அலைந்து திரிந்து, பலரிடம் கலந்தாலோசித்து, பல நூல்களையும் ஆவணங்களையும் ஆழ்ந்து நோக்கி இந்நூல் உருவாக்கப்பட்டதை நான் தொடக்க முதலே அறிவேன்.

இத்துணை நிர்கந்த மாமுனிகளை, அறிவு சார்ந்த பெரியோர்களை, சமணத்தின் நெறிகளுக்காக வாழ்ந்த சான்றோர்களை, ஆலயங்களும் நூலகங்களும் நிருவிய தர்மவான்களை, தவறுகளை எதிர்த்துப் போராடிய வீரப் பெருமகன்களை, உயரிய பதவிகள் பல வகித்த படிப்பாளிகளை ஈன்றெடுத்த இக்கிராமப் புனித மண்ணின் பெருமையை, இதற்கு முன் நான் முழுதும் அறியேன்.

இந்நூலை ஆராய்ந்து, தன் கடின உழைப்பால் உருவாக்கிய பேராசிரியர் திரு. எஸ். பரதன் அவர்கள், பச்சையப்பன் கல்லூரியில் தாவர இயல் பேராசிரியராகப் பணியாற்றியவர். அத்துறையில் பல

ஆராய்ச்சி கட்டுரைகள் எழுதியவர். இவர், பல்கலைக் கழக மான்யக் குழுவால் (UGC) அமெரிக்காவுக்கு அனுப்பப்பட்டு, அங்கு தன் ஆய்வுக் கட்டுரையை சமர்ப்பித்தவர். நம் சமுதாயத்திற்கு எழுத்தால், பொருள் உதவியால் தொடர்ந்து உதவிட வேண்டும் என்ற உறுதி உடையவர். செடி, கொடிகள், அவற்றின் வேர்கள், இலைகள் பற்றி ஆராய்ந்து எழுதும் தாவர இயல் பேராசிரியரான இவர், இப்பொழுது திருப்பறம்பூரில் வேர்விட்டு வளர்ந்து தழைத்து பிறருக்கு நிழல் தந்த பெரியார்களைப் பற்றி ஆராய்ந்து எழுதியுள்ளார். இவரால் திருப்பறம்பூருக்கு மேலும் பெருமை சேர்க்கிறது என்பதை ஆற்றொழுக்கு போல், கதை சொல்வதுபோல் எளிமையாக, அழகாக அவர் படைத்திருக்கும் இந்த ஆராய்ச்சி வரலாற்று நூலை படிக்கும் நீங்கள் உறுதியாக உணர்வீர்கள். என் அருமைத் தமக்கையின் செல்வனான இவரால், எனக்கும் பெருமையே! இது வெறும் புகழ்ச்சி இல்லை. ஊரெல்லாம் திருப்பனமூராய் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

ஓயாது உழைக்கும் இவர், மேலும் பல நல்ல நூல்களை தமிழ் அன்னைக்கு, ஜின நெறி உயர்வுக்கு தொடர்ந்து தருவார் என்று நிச்சயம் நம்பலாம். ஏனெனில் இவர் தருமம் மிகு திருப்பறம்பூரில் பிறந்தவரல்லவா! நூலை ஆக்கியவர்க்கும், இதனைப் படிக்கக் காத்திருக்கும் உங்களுக்கும் வாழ்த்துக்கள்!

ஜவகர் நகர், சென்னை-82 **கரந்தை அ. சுகுமாரன்**
20.5.2010

# பதிப்புரை

கிராமங்கள் நமது நாட்டின் உயிர்நாடி. அக்கிராமங்களின் வரலாற்றையும், அங்கு வாழ்ந்து, அக்கிராமங்களின் வளர்ச்சிக்கு வித்திட்ட சாதனையாளர்களையும், அவர்கள் போற்றி வளர்த்த ஒழுக்க நெறிமுறைகளையும், விட்டுச் சென்ற இலக்கியம், அறிவியல், கலைச் செல்வங்களையும் நாம் முறையாகப் பதிவு செய்து நமது சந்ததியினருக்குத் தருவது நமது கடமையாகும்.

ஸ்ரீசைலபுரம் என்னும் திருப்பறம்பூர் கிராமம் திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம், திருவோத்தூர் வட்டத்தில், காஞ்சிபுரத்திலிருந்து பதினெட்டு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. அக்கிராமத்தில் அமைந்துள்ள ஸ்ரீ புஷ்பதந்தர் ஜினாலயம் பற்றியும், இவ்வூருக்குப் பெருமை சேர்த்த அருந்தவத்தோர் பற்றியும், சாத்திர வல்லுநர்கள் பற்றியும், நமது வருங்காலச் சந்ததியினர் தெரிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது என்ற நோக்கே 'தர்மம் மிகு திருப்பறம்பூர்' எனும் இந்நூல் எழுதி வெளியிடத் தூண்டுகோலாய் அமைந்தது.

ஒரு கிராமத்தின் வரலாற்றையும்,அக்கிராமத்தில் வாழ்ந்த / வாழ்கின்ற சாதனையாளர்கள் பற்றியும் எழுதுவதில் பற்பல சங்கடங்கள் உள்ளன. குறைபாடுகள், தவறான தகவல்கள் நேராமல் இருக்க அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்ட போதிலும் சிலகுறைகள் காணப்படலாம். அவைகளை எங்களின் பார்வைக்குக் கொண்டு வந்தால் மறுபதிப்பில் அவை நேர் செய்யப்படும் என்று உறுதி கூறுகின்றோம்.

இந்நூல் திருமதி மருதேவி பரதன் அறக்கட்டளையால் வெளியிடப்படும் இரண்டாவது நூலாகும். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து எங்களின் வாழ்விற்கும், உயர்விற்கும் உற்ற துணையாய் இருந்த, திருமதி மருதேவி பரதன் அவர்களின்

நினைவைப் போற்றும் வகையில், முதல் ஆண்டு நிறைவு நாளான 22.7.2008ல் இந்த அறக்கட்டளை துவங்கப்பட்டது. ஆலய நற்பணிகளுக்கு நன்கொடை வழங்குதல், மாணவர்களுக்குக் கல்வி ஊக்கத்தொகை வழங்குதல், விடுதியில் உள்ள மாணவர்களுக்கு திருமதி மருதேவி பரதன் நினைவு நாள் அன்று அன்னதானம் அளித்தல் ஆகியவை அறக்கட்டளையின் குறிக்கோள்களாகும். இதனை 2008 - 2009ல் தக்க முறையில் நிறைவேற்றியுள்ளோம்.

இவ்வெளியீடு இந்த அறக்கட்டளையின் மூலம் வரும் இரண்டாவது நூல் ஆகும். எங்களின் அனைத்து முயற்சிகளுக்கும் உற்ற துணையாகவும், வழிகாட்டுவோராகவும் உள்ள நல்ல நெஞ்சங்களுக்கு எங்களின் மனம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அறக்கட்டளை நிர்வாகத்தினர்

**S. பரதன், B. அருண்குமார், B. அனிதா**

## முன்னுரை

வரலாறு என்பது கடந்த காலத்தையும் நிகழ் காலத்தையும் இணைக்கும் பாலம், எதிர்காலத்திற்கு இட்டுச் செல்லும் பாதையாகவும் இருக்கிறது (அலன் நேவின்ஸ்). இன்று வரலாற்றைப் பற்றிய நோக்கம் விரிவடைந்து "வரலாறு என்பது ஒரு நாட்டின் அல்லது ஒரு அரசின் வரலாற்றைக் கூறுவது என்பது மட்டுமில்லாமல், ஒவ்வொரு ஊரின் வரலாற்றையும், ஊர்மக்களின், தனி மனிதர்களின் ஒரு இனத்தின் வரலாற்றையும் உடன் கொண்டதாகத் திகழ்கிறது". வரலாற்றுக்கான இவ்விளக்கத்தைக் கருத்தில் கொண்டே இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

வரலாற்று ஆசிரியர் திரு. சதாசிவ பண்டாரத்தார் குறிப்பிட்டுள்ளது போல (2007) "முன்னோர் ஒழுகிக் காட்டிய உயர்ந்த நெறிகளையும், அன்னார் கொண்டிருந்த சிறந்த பண்புகளையும் பின்னோர்க்கு நினைப்பூட்டி, அவர்களை நல்வழிப் படுத்துவன நாட்டின் பழைய சரித்திரங்களே." எனவே நாம் பிறந்து வளர்ந்த, நமது தாய் தந்தையர் மகிழ்ந்து குலாவி ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து முடித்த ஊரின் தொன்மையையும், வளர்ச்சியையும், அங்கு வாழ்ந்த மனிதர்களையும், நாம் ஆழ்ந்து கற்று அறிந்து பதிவு செய்வது நமது கடமையாகும். தாய்த் திருநாட்டையும், தாய் மொழியையும், ஈன்ற தாயையும் மறந்த மானிடர் வாழ்வில் மறுமலர்ச்சி என்பது கானல் நீர் ஆகும்.

நான் பிறந்து வளர்ந்த சீர்மிகு ஸ்ரீ சைலபுரம் எனும் திருப்பறம்பூர் அறம்பல வளர்த்த சமண சமயச் சான்றோர்கள் பலர் வாழ்ந்த இயற்கை எழில் கொஞ்சும் அழகான கிராமமாகும். தமிழ்த் தாய்க்கு திருக்குறள், தொல்காப்பியம், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, நாலடியார், வளையாபதி, நீலகேசி எனப் பல அணிகளன்களைப் பூட்டி அழகுபார்த்த சமண சமயச் சான்றோர்கள் வழிவந்தோர் வாழ்ந்த / வாழும் ஊராகும். அடக்கமும் அறிவும், ஆற்றலும், அறமும் செறிந்த அருந்தவத்தோரும், பல்மொழிப் புலவர்களும், ஆச்சாரியர்களும்

(ஸ்ரீ பத்ரபாகு முனிவர், ஸ்ரீ விசாக முனிவர், ஸ்ரீ சமந்தபத்ரா சாரியார், சிவகோடி ஆசாரியர், ஸ்ரீ பூஜ்யபாதர், ஸ்ரீ வஜ்ரநந்தி, ஸ்ரீ மல்லிசேனர், ஸ்ரீபவநந்தி முனிவர், ஸ்ரீ புஷ்பசேன யோகிந்திரர், ஸ்ரீ அகளங்கர், நிஷ்களங்கர்) உலா வந்த திவ்ய திருத்தலமாகும். (ஏகாம்பர நாதன் 1991, 2008 ஸ்ரீபால் 2004, ஜீவபந்து ஸ்ரீபால் 1973, தன்யகுமார் 2007, வெங்கடேசன் 2004)

கல்வெட்டுகளிலும், வரலாற்று ஏடுகளிலும் இன்று கரந்தை என வழங்கும் ஊரையே திருப்பறம்பூர் என்று குறிப்பிட்டுள்ளனர். முனிகிரி எனும் திருப்பறம்பூர் கரந்தை கிராமமாக மாறியதும், அதன் வடக்குப் பகுதி திருப்பறம்பூர் எனப் பின்னர் வரையறுக்கப்பட்டிருக்கலாம் என்று வரலாற்று வல்லுனர்கள் குறிப்பிட்டுள்ளனர். கரந்தை - திருப்பறம்பூருக்கு இடையே இருப்பது இருகிராம மக்களுக்கும் பொதுவான, குடிநீருக்கு ஆதாரமாக விளங்கும் குளம் ஆகும். திருப்பறம்பூரைச் சுற்றி இருந்த பாறைகளைக் கொண்டே இங்குள்ள ஆலயங்கள் கட்டப்பட்டுள்ளன என்று வரலாற்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

ஸ்ரீ சமந்தபத்ராசாரியார் சோழநாடடின் தலைநகரான உறையூரில் கி.பி. 120ல் பிறந்தார் என்றும் கி.பி. 185வரை வாழ்ந்தார் என்றும் சரித்திரப் பேராசிரியர் ஜோதி பிரசாத் ஜைன் குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீ சமந்தபத்ராசாரிய சுவாமிகள் திருப்பறம்பூர் முனிகிரி ஆலயத்திற்கு விஜயம் செய்தார் என்ற வரலாற்றுச் சான்றைப் பார்க்கும்போது இவ்வூர் கி.பி. 1-ஆம் நூற்றாண்டுக்கு முன்னமே சீரும் சிறப்புடன் விளங்கியது என்பதை அறியலாம். மேலும் வட ஆற்காடு மாவட்டம் மாமண்டூரில் (திருப்பறம்பூருக்கு 6 கி.மீ தொலைவில் உள்ள ஊர்) சமண முனிவர்கள் இருந்த குகைகள் இங்கு இன்றும் உள்ளதைக் காணலாம். அங்கு கண்டெடுக்கப்பட்ட பிராமிக் கல்வெட்டுகள் கி.மு. 3-5-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று காலவரையறை நிர்ணயிக்கப்பட்டுள்ளதால் திருப்பறம்பூர் கிராமம் கி.மு. 3-ஆம் நூற்றாண்டுக்கும் முன்னரே சீரும் சிறப்புமாக இருந்திருக்க வேண்டும் என்பதை அறியலாம்.

திருப்பறம்பூர் காஞ்சிபுரத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் வெண்பாக்கம்-பெருங்கட்டூர் வழியாக கலவை-வேலூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இவ்வரலாற்றுச் சிறப்புமிக்க கிராமத்தில் அமைந்துள்ள அழகிய ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலயத்தின் சிறப்பு மற்றும் இவ்வூரில் பிறந்து, இவ்வூருக்கு பெருமை சேர்த்த மூன்று மெய்த்தவத் துறவிகள், நான்கு சமண தத்துவ வித்தகர்களான சான்றோர்கள் ஆகியோரின் வரலாற்றை இங்கு பதிவு செய்கிறோம். நாம் இவர்களின் வரலாற்றைக் கற்று அறிவதன் மூலம் நமது வாழ்க்கை மேன்மை பெறும் என்பது திண்ணம்.

சென்னை-40, **எஸ்.பரதன்**

18.6.10



திருமதி சாரித்திரமதி அம்மையார் திரு.இரா. ஸ்ரீபதி நயினார்

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.

எனும் திருவள்ளுவர் வாக்குக்கு ஒப்ப உழைப்பையே உற்ற துணையாகக் கொண்டு பாடுபட்டு வளம் பெற்ற திருப்பறம்பூர் இரா. ஸ்ரீபதி நயினார், திருமதி சாரித்திரமதி அம்மையார் அவர்களின் நினைவைப் போற்றி இந்நூலை வெளியிடுகிறோம்.

ஸ்ரீ. பரதன், ப. அருண்குமார், ப. அனிதா
திருமதி மருதேவி பரதன் அறக்கட்டளை

அறிவெனப் படுவது துன்பம் துடைத்தல்
செறிவெனப் படுவது மும்மையும் செறிதல்
ஆண்மை எனப்படுவ(து) ஐம்புலன் வெல்லல்
கேண்மை எனப்படுவ கெட்டிடத்(து) உதவல்
அருமை எனப்படுவது அறநெறி வழுவாமை
பெருமை எனப்படுவது பிறனில் விழையாமை
அறம்எனப் படுவது ஆருயிர் ஓம்பல்
உறவெனப் படுவ துற்றழி நிற்றல்
வாய்மை எனப்படுவது வருந்தா துரைத்தல்
தூய்மை எனப்படுவது உள்ளத் தூய்மை
இன்பம் எனப்படுவது ஈறில் இன்பம்
அன்பெனப் படுவது ஆர்வம் உடைமை
தவம் எனப்படுவது ஐம்புலன் வெறுத்தல்
வதம்எனப் படுவது கொல்லா விரதம்

– சீவ சம்போதனை – 88

# பொருளடக்கம்

## இந்நூல் உருவாக உதவியவர்கள்

சு. ஸ்ரீபால், I.P.S. (Retd.) FISM

கரந்தை அ. சுகுமாரன், சென்னை

பேரா. S. சந்திரசேகரன், டி.பி. ஜெயின் கல்லூரி, சென்னை

வாணிபூஷன் A. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார்

புலவர் தோ. ஜம்புகுமாரன், புழல், சென்னை

ப. ஆதிராஜன், திருப்பறம்பூர்

T.M. ஸ்ரீவிஜயபாலன், திருப்பறம்பூர்

பேரா. Dr. கனக அஜிததாஸ், சென்னை

பேரா. சிரே. தன்யகுமார், சென்னை

K.A. சிம்மசந்திரன், ஆதம்பாக்கம், சென்னை

S. சந்தானம், உள்அகரம், சென்னை

P. நாபிராஜன், சூளைமேடு, சென்னை.

J. ரஞ்சித், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை

அனைவருக்கும் எங்களின் இதயம் கனிநத நன்றி!

# 1. திருப்பறம்பூர் வரலாறு

"தொண்டை மண்டலம் சான்றோர் உடைத்து" எனும் ஔவையாரின் முதுமொழிக்கு ஒப்பத் தொண்டை மண்டலத்தில் உள்ள திருப்பறம்பூரின் "இல்லறத்தார், அன்னதானம், மருந்துதானம், அபய தானம், கல்வி தானம் ஆகிய நான்கு வைகத் தானங்களைக் கடைப்பிடித்து தலைச்சிறந்து விளங்கினர்." (ஜீவபந்து ஸ்ரீபால், 1973). திருப்பறம்பூர், திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம், செய்யார் வட்டம், வெண்பாக்கம் உள்வட்டத்தில் உள்ளது. தொன்மையான பெருந்தவத்தோர் வாழ்ந்த கிராமமாகும்.

அருந்தவத்தோரின் உறைவிடமாக இருந்த இவ்வூருக்கு ஸ்ரீ சமந்தபத்ரசாரியர் வந்தார் என்பதும், அவர் வருகைக்கு "முன்னரே சீரும் சிறப்பும் பெற்று விளங்கியது என்பதும் வரலாற்றுச் சான்றுகளால் தெரிய வருகிறது. (ஜீவபந்து ஸ்ரீபால், 1973; ஸ்ரீ சமந்தபத்ராச்சாரியார் சோழநாட்டின் தலைநகரான உறையூரில் கி.பி. 120ல் பிறந்தார் என்றும், கி.பி. 185 வரை வாழ்ந்தார் என்றும் சரித்திரப் பேராசிரியர் ஜோதி பிரசாத் ஜெயின் குறிப்பிட்டுள்ளார் (கஜபதி ஜெயின் 1985, ப.67). இவ்வூரின் தொன்மைக்குஇது ஒரு சான்றாகும். இத்தொன்மையான திருத்தலம் அமைந்துள்ள மாவட்டத்தின் வரலாற்றை அறிவதன் மூலம் இவ்வூரில் வாழ்ந்த மக்கள் வந்த பாதையையும், அவர்கள் சந்தித்த இடர்ப்பாடு களையும், வெற்றிகளையும் நாம் அறிவது சாத்தியமாகும்.

சங்க காலத்தில் (கி.மு.300 முதல் கி.பி. 300 வரை) அருவா நாடு என்று அழைக்கப்பட்ட வட ஆற்காடு மாவட்டம் பின்னர் தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியாக இருந்தது. கி.பி.300ல்

இம்மாவட்டம் பல்லவர் ஆட்சிக்குட்பட்டிருந்தபோது கலை அம்சம் நிறைந்த பல கற்கோயில்களும், குடவரைகளும் அமைக்கப் பட்டன. திருப்பறம்பூருக்கு அருகில் கரந்தையில் உள்ள ஸ்ரீ குந்து நாதர் ஆலயம் பல்லவ மன்னன் 3-ஆம் நந்திவர்மன் காலத்திலோ (கி.பி. 846-864) அதற்குச் சற்று முன்போ தோற்றுவிக்கப்பட்டிருக்கலாம் என்று அக்கோயில் கல் வெட்டுகளை ஆய்வு செய்த திரு. ஏகாம்பரநாதன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார் (1991). பல்லவர்களது தலைநகராக விளங்கிய காஞ்சியை மையமாகக் கொண்டு, சற்றுப் பிற்காலத்தில், கரந்தை, திருப்பறம்பூர், வெண்பாக்கம், ஆர்ப்பாக்கம், சிறுபாக்கம் முதலிய சைனத் தலங்கள் தோன்றின. (ஏகாம்பரநாதன், முக்குடை, நவம்பர், 2005 ப.18) காஞ்சிமா நகரம் ஏறக்குறைய 6 நூற்றாண்டுகள் பல்லவர்கள் ஆட்சியில் தலை நகராக இருந்து வந்தது. அவர்கள் காடு திருத்தி நாடாக்கியவர்கள் என்ற பெயர் பெற்றவர்கள் ஆவர். பல்லவர் ஆட்சிக்குப் பின்னர் சோழர் ஆட்சிக்கு இம்மாவட்டம் உட்பட்டது. முதலாம் இராச இராச சோழன் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றியபின் தன் ஆளுகைக்கு உட்பட்ட நாட்டை செயங்கொண்ட சோழ மண்டலம் என்று பெயரிட்டான். (தென்னார்காட்டின் பெரும்பகுதி, வடஆற்காடு மாவட்டம், செங்கல்பட்டு மாவட்டம், ஆந்திர மாநிலத்தின் சித்தூர் மாவட்டம் அடங்கிய நிலப்பரப்பே ஜெயங்கொண்ட சோழ மண்டலம் ஆகும்.).

திருப்பறம்பூருக்கு அருகில் உள்ள பிரம்மதேசம், முதலாம் குலோத்துங்க சோழனின் தேவி பிரம்மன் சிந்தாமணி அவர்களின் நினைவாக பிரும்மன் ஆலயம் அமைக்கப்பட்டதால் பிரம்மதேசம் என்ற பெயர் பெற்றது. சோழர்கள் ஆட்சி காலத்தில் இம்மாவட்டம் மேலும் சீறும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்தது. பின்னர் ஆட்சிக்கு வந்த இராட்டிர கூடர்கள் காலத்தில் சமணம் மேலும் தழைத்தோங்கியது. அடுத்து ஆட்சிக்கு வந்த விஜயநகரப் பேரரசு (கி.பி. 1351-1526) இம்மாவட்டத்தில் பலகோட்டைகளையும்,

கொத்தளங்களையும் கட்டி முடித்து அனைத்து சமயத்தினரும் அமைதியாக வாழுமாறு ஆட்சி செய்தனர். திரு. ஏகாம்பரநாதன் (1991) அவர்கள் திருப்பறம்பூர் புஷ்பதந்தர் ஆலயம் அக்கால கட்டத்தில் கட்டப்பட்டிருக்கலாம் எனக்குறிப்பிட்டுள்ளார்.

பின்னர் ஆட்சிக்கு வந்த மராட்டியர்கள் (1676-1686) முகமதியர்கள் 1646-1676, 1686-1703) ஆங்கிலேயர்கள் (1703 முதல் 1947 வரை) காலங்களில் இம்மாவட்டம் தொடர்ந்து உள்நாட்டுப் போர்களையும் (வேலூர், ஆற்காடு, செஞ்சி, வந்தவாசி, போர்கள்) சமயச் சண்டைகளையும், உட்பகை பூசல்களையும், கலாச்சார சீரழிவையும் சந்தித்தது. பலகோட்டைகளும், ஆலயங்களும், தரைமட்டமாக்கப்பட்டன. பலர் சுட்டுக் கொல்லப்பட்டனர். மேலும் சோதனையாக 1876-78ல் மாபெரும் பஞ்சம் ஒன்று தோன்றி இலட்சக்கணக்கான மக்களின் உயிரைக் குடித்தது. சென்னை, வடஆற்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் கஞ்சித் தொட்டிகள் நடத்தப்பட்டன.

ஆங்கிலேயர்கள் ஆட்சிக்கு உட்பட்ட பின்னர் 1801-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 31ல் வட ஆற்காடு மாவட்டம் அமைக்கப்பட்டது. 10.7.1806ல் வட ஆற்காடு இரண்டாகப் பிரிக்கப்பட்டு - வட ஆற்காடு, தென் ஆற்காடு என இரண்டு மாவட்டங்களாக உருவாக்கப்பட்டது. பின்னர் 1951ல் வட ஆற்காடு மாவட்டம் இராணிப்பேட்டை, செய்யாறு, திருப்பத்தூர், திருவண்ணாமலை கோட்டங்களைக் கொண்டதாக அமைந்திருந்தது. 30.9.1989ல் இப்போது உள்ள திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம் வட ஆற்காடு மாவட்டத்திலிருந்து பிரிக்கப்பட்டு திருவண்ணாமலையைத் தலைமையிடமாகக் கொண்டு அமைக்கப்பட்டது. தி.ச. மாவட்டம் ஆரணி, செய்யார், வந்தவாசி, போளூர், செங்கம், திருவண்ணாமலை ஆக 6 வட்டங்களையும், 1068 வருவாய் கிராமங்களையும், 860 பஞ்சாயத்து கிராமங்களையும் கொண்டுள்ளது.

இவ்வாறு தொன்மையான வரலாறு உடைய திருப்பறம்பூரில் கி.பி. 16-14ஆம் நூற்றாண்டுகளில் (சம்புவராயர் ஆட்சி காலம் கி.பி. 1306-1317) சமணம், வைணவம், சைவம், பௌத்தம், முகமதியம் ஆகிய மதங்களிடையே எந்தவித வேற்றுமையும் இன்றி வாழ்ந்து வந்தனர். சம்புவராயர் அனைத்து மதத்தினரின் நலனையும் பாதுகாத்து அனைத்து சமய ஆலயங்களுக்கும் தக்க மானியம் அளித்து வந்ததாகத் தெரிகிறது. (ஆர். விஜயன் 2005, ப.114). திருப்பறம்பூர் கிராமம் விவசாயத்தை பிரதானத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வருவோர் இருக்கும் கிராமமாகும். நிலத்தடி நீரை நம்பி வாழ்பவர்கள் ஆவர். கடும் உழைப்பாளிகள். இவர்களின் உழைப்பின் பயனாகக் கிடைக்கும் நெல்லும், வேர்க்கடலையையும் நகரில் வாழ்வோரின் வாழ்வாதாரமாகத் திகழ்ந்து வருகிறது என்பதை யாரும் மறுக்கவோ, மறக்கவோ முடியாது.

“தானமும் தருமமும் சான்றோர் உடைத்து” என்ற ஔவை மூதாட்டியின் மொழிக்கு எடுத்துக்காட்டாக இக்கிராமம் பெருங்குடி மக்களுக்கு வாய்த்த முனிவர் பள்ளியால், அறவோர்க்களித்தலும் அந்தணர் ஓம்பலும், துறவோர்க்கெதிர்தலும், விருந்துபசரித்தலும் ஆகிய இல்லறத்தார் கடமையைத் தவறாது கடைப்பிடித்து இல்லறம் நடத்தி வந்தனர் இன்றும் நடத்தி வருகின்றனர். (டி.எஸ். ஸ்ரீபால், 1973 நல்லறம் ப.2).



2001-ஆம் ஆண்டின் மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி திருப்பறம்பூர் கிராமம் பற்றி அடிப்படைத் தகவல்கள்.

திருப்பறம்பூர் கிராம பஞ்சாயத்துக்கு உட்பட்ட கிராமங்கள் :

1. திருப்பறம்பூர். 2. சேலேரி

# திருப்பறம்பூர்

| | |
|---|---|
| Village Primary Census - CD Block | 00385700 |
| கிராம மொத்த பரப்பளவு எக்டேர் | 862.00 |
| குடும்பங்கள் | 511.00 |
| மக்கள் தொகை | 2202 |
| ஆண்கள் | 1076 |
| பெண்கள் | 1126 |
| படிப்பறிவு | 1205 |
| ஆண்கள் | 692 |
| பெண்கள் | 513 |
| படிப்பறிவு அற்றவர்கள் | 997 |
| ஆண்கள் | 384 |
| பெண்கள் | 613 |
| உழைப்பாளர்கள் | 1236 |
| ஆண்கள் | 705 |
| பெண்கள் | 531 |
| வேளாண்மை உழைப்பாளர்கள் | 451 |
| ஆண்கள் | 208 |
| பெண்கள் | 243 |
| வீட்டு வேலை உழைப்பாளர்கள் | 45 |
| ஆண்கள் | 37 |
| பெண்கள் | 8 |
| மற்ற உழைப்பாளிகள் | 227 |
| ஆண்கள் | 179 |
| பெண்கள் | 48 |
| கிராம பஞ்சாயத்தின் வருவாய் | 3,03,100.00 |
| செலவு | 2,63,300.00 |

நன்றி : மக்கள் தொகை கணக்கெடுப்பு - 2001
இந்திய அரசு

## 2. திருப்பறம்பூர் ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலயம்

தீர்த்தனாம் புஷ்ப தந்தன்
திருவடி சரணம் என்றே
ஆர்த்துமே அடியா ரோடே
அருகடைந்(து) உய்ந்தேன் இல்லை
கார்தொடும் மதில்சூழ் கோயில்
கவினகர் திருப் பறம்பூர்
பார்த்திடச் சென்றி லேனே
பரமனே! என்றி லேனே!

புலவர் திரு. தோ. ஜம்புகுமார் அவர்களால் இயற்றப்பட்ட இப்பதிகம் (தமிழக ஜைன க்ஷேத்திர மாலை - பதிகம் 56) எழில்மிகு திருப்பறம்பூரில் அமைந்துள்ள ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரர் ஆலயத்தின் அழகையும், தீர்த்தங்கரரின் வரலாற்றையும் அழகுற வெளிப்படுத்துவதோடு, நாம் திருப்பறம்பூர் சென்று சுவிதநாதனை (புஷ்பதந்தரை) கண்டு வணங்கிச் சீரும் சிறப்பும் பெறவேண்டும் எனும் எண்ணத்தையும் தூண்டுமாறு அமைந்துள்ளது.


மானத்தம்பம் – சிறு கோயில்

ஸ்ரீசைலபுரம் எனும் திருப்பறம்பூரிலுள்ள ஆலயத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ புஷ்பதந்தர், சிந்துவெளி நாகரிகமும் (தொடக்கம் கி.மு. 7000 சிறப்பு நிலை கி.மு.3200-1800) சமண சமயமும் தழைத்தோங்கிய காலத்தில் இவ்வையகத்துள்ளோர்க்கு நல்வழிகாட்ட தோன்றியவர் ஆவார். (பேரா. அ. சக்கரவர்த்தி நயினார் 1956, 2005, ஸ்ரீபால் 2008). சிந்துவெளி வடக்கே காஷ்மீர்

முதல் தெற்கே குமரிமுனை வரை 2000 மைல் நீளமுடையது. தமிழிய (முந்து தமிழ் / திராவிட மொழி) மொழி பேசுநரும் ஏனைய மொழிபேசுநரும், அதாவது இந்தோ - ஐரோப்பியம், உரால், அல் டாய்க், சப்பானிய மொழி பேசுநர்கள் உடனுறைந்த காலம் கி.மு. 1000க்கு முன்னர் ஆகும். 23-ஆம் தீர்த்தங்கரரான ஸ்ரீபார்சுவநாதரை கி.மு. 817-717 காலத்தவர் என்றும், 24-ஆம் தீர்த்தங்கரரான ஸ்ரீமகாவீரரை கி.மு. 599-527-ஆம் ஆண்டைச் சார்ந்தவர் என்றும் வரலாற்று ஆசிரியர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர் என திரு. சேதுராமன் அவர்கள் (பேராசிரியர், கலை வரலாற்றுத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம்) குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு எனில் 9-ஆம் தீர்த்தங்கரரான ஸ்ரீபுஷ்பதந்தரின் காலம் பல ஆயிரம் ஆண்டுகள் முந்தியதாகவே இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. இவ்வாறு சமண சமயம் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தழைத்தோங்கி மக்களுக்கு நல்வழிகாட்டி வந்த காலத்தவரான ஸ்ரீபுஷ்பதந்தருக்கு திருப்பறம்பூரில், திருப்பறம்பூர் சமணச் சமயச் சான்றோர்களின் முயற்சியால் உருவாக்கப்பட்ட தொன்மையான எழில்மிகு ஆலயம் ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலயம் ஆகும்.



*முக மண்டபம்*
*கல்தூண் சிற்ப வடிவம்*

இந்த ஆலயத்திற்குச் செல்லும் ஒவ்வொருவரும் அக்கோயிலின் அமைப்பையும் கலை அழகையும், நுட்பமான வேலைப்பாடுகள் கொண்ட கல் தூண்களையும் சிற்பங்களையும், கோபுரம், விமானம் ஆகியவற்றில் அமைந்துள்ள அலங்காரக் கலைக் கூறுகளையும் மனம் ஒன்றி கண்ணாரக் காண்பதால் மனத்தெளிவும், புத்துணர்வும் பெறுவர். இச்சூழல் இறைவனைத் தொழுது வணங்கி தியானித்து வழிபட மிகவும் ஏற்றதாகும். அவ்வகையான வழிபாட்டில் ஈடுபட கோயிலின் அமைப்பை அனைவரும் தெறிந்துக் கொள்வது அவசியமாகும்.

கோயில் கட்டடக்கலை நிபுணர்கள், கோயில்களின் கட்டமைப்பைக் கொண்டு மூன்று விதமாக வகைப்படுத்தி யுள்ளனர்.

1. குடவறைக் கோயில்கள் : பல்லவர்கள், சாளுக்கியவர்கள், காலக் குகைக் கோயில்கள், சித்தன்னவாசல், மாமண்டூர்.... ஆண்டிமலை, அழகர் மலை முதலியன.



*ஸ்ரீ சுதர்ம சாகர் மண்டபம்*

2. பாறைச் சிற்பக் கோயில்கள் / கற்றளிகள்: ஒற்றைக்கல் ரதங்கள் (பல்லவர்கள் காலம்) மாமல்லபுரம், பஞ்ச பாண்டவர் மலை, திருநாதர் குன்று முதலியன.

3. கட்டுமானக் கோயில்கள் : பல்லவர்கள் காலத்தில் துவங்கப்பட்டது. சோழர்கள் காலத்தில் வளர்ச்சியுற்றது. தமிழகத்தில் உள்ள பல கோயில்கள்.



*முக மண்டப தூண் சிற்ப வடிவம்*

இம்மூன்று வகைக்கோயில் களை அமைப்பதில் தொன்று தொட்டு சமணர்கள் முன்னோடி களாகவும், தலை சிறந்தவர்களாகவும் விளங்கினர். அதற்கு ஆதாரமாக விளங்குவது சமணர் இயற்றிய **'சினேந்திரமாலை'** என்ற நூல் ஆகும். அந்நூலில் கோயில் கட்டுவதற்கான நிலத்தின் இயல்பை விளக்கிக் காட்டும் சல்லியம் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது.

திருப்பறம்பூர் புஷ்பதந்தர் கோயில் கட்டடக் கலை விதிகளின் படியும்,சமண சமய ஆகம விதிகளின்


கோஸ்ட பஞ்சரம்

படியும், அமைக்கப்பட்ட கோயில் ஆகும். இவ்வாலயம் ஊரின் தென்மேற்கே கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கிராமத்தை நோக்கி அமைக்கப்பட்டிருப்பது மிகவும் உத்தமமானது ஆகும். கோயிலுக்கு தெற்கே இக்கோயிலுக்கான திருக்குளம் அமைந்துள்ளது. இது கரந்தை திருப்பறம்பூருக்கு இடையே அமைந்துள்ளது.

இக்கோயில் கட்டுமானம் திராவிட வகையைச் சார்ந்தது ஆகும். வட இந்தியாவில் உள்ள கோயில்கள் **நாகரம்** என்ற வகையைச் சார்ந்ததாகும். தென் இந்தியாவில் காணப்படும் பெரும்பாலான கோயில்கள் கட்டுமான வகையைச் சார்ந்ததாகும். இக்கோயில் பற்றி தொல்லியல் ஆய்வாளர் திரு. ஏ. ஏகாம்பரநாதன் (1991) அவர்கள் மிக விரிவாக எழுதியுள்ளார். இவரின் கருத்துப்படி இக்கோயில் கி.பி. 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தாகும்.

சமணர்களின் ஆலயங்கள் சமவ சரணத்தைக் கருவாகக் கொண்டு உருவாக்கப்பட்டவை ஆகும். ஸ்ரீபுஷ்பதந்தர் ஆலயம் சுற்றுச்சுவர், (மதில்சுவர்) நுழைவு வாயில், பலிபீடம், மானஸ்தம்பம், முகமண்டபம், மகாமண்டபம், அர்த்த மண்டபம், கருவறை, விமானம், திருவடி மண்டபம், ஸ்ரீபாகுபலி சுவாமி மண்டபம், 24-தீர்த்தங்கரரின் பாதங்கள் ஆகிய அமைப்புகளைக் கொண்டுள்ளது.


முக மண்டப தூண் சிற்ப வடிவம்

**நுழைவு வாயில்** - கோயிலின் நுழைவுவாயில் கருவறைக்கு நேரே கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. காலைச் சூரியன் ஒளிக்கதிர்கள் கருவறையில் பட வேண்டும் என்ற நோக்கோடு கோயிலின் வாயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது.

கோயில் கட்டடக் கலை வல்லுனர் ழுவோ துப்ரூயல் (1999) அவர்கள் கோயிலின் பிரதான வாசல் கீழ்திசையிலேயே அமைக்கப்பட வேண்டும் எனக் குறிப்பிட்டுள்ளார். இக்கோயிலை நன்கு ஆராய்ந்து அறிந்த திரு. ஏகாம்பரநாதன் அவர்கள் இக்கோயிலின் திருசுற்று மதிலும் மூன்றுதளம் கொண்ட கோபுரமும் சீர் கெட்டதால், அவற்றை அகற்றிவிட்டு உயரமான மதில் சுவர் அண்மைக் காலத்தில் கட்டப்பட்டதாக அறிகிறோம் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**பலிபீடம்** : கோயிலின் உள்ளே நுழைந்ததும் நாம்முதலில் காண்பது பலி பீடம் (மானபீடம்) ஆகும். அதற்கு அடுத்து நெடி துயர்ந்து அமைந்துள்ள மானஸ் தம்பத்தைக் காணலாம் (படம்-2) பலி பீடம் கருங்கல்லால் சதுரவடிவில் கோயில் வாயிலுக்கு நேரே திருச்சுற்றுப் (பிரகாரம்) பகுதியில் அமைந்துள்ளது. அது கருவறைக்கு சரிபாதி உயரம் அல்லது மார்பளவு உயரம் உள்ளதாக அமைக்கப் பட்டுள்ளது. மேருமந்தரப் புராணத்தில் 1049 ஆம் பாடல் இதைத் தெளிவாக விளக்கியுள்ளது. பலி பீடத்தின் மீது மலர் தூவி தீபம் ஏற்றி நெடிதுயர்ந்த மானஸ்தம்பத்தை நோக்கி வணங்கி விருப்பு, வெறுப்பு, தான் என்ற செருக்கு ஆகியவை நீங்கி ஒரு நிமிடம் தியானம் செய்து வணங்கிய பின்னரே திருச்சுற்றினைச் (பிரகாரத்தைச்) சுற்றி வருவர்.

*முக மண்டப தூண் சிற்ப வடிவம்*


கும்பலதா

**மானத்தம்பம் (மனத் தூய்மை கம்பம்)** : சமண சமயத்தினரால் கட்டப்பட்ட கோயில்களில் ஒரே கல்லால் ஆன உயரமான கலை வேலைப்பாடுடைய தூண் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். தென்னிந்திய ஜைனக் கோயில்களின் முன்பு காணப்படும் தனித்து நிற்கும் தூண்கள் ஜைன சமயச் சிற்பக் கலையின் தனிப்பட்ட அம்சமாகும். (தன்யகுமார் 1999 ப.7) திருப்பறம்பூர் ஆலயத்திலும் ஒற்றைக் கல்லால் செய்யப்பட்ட உயரமான தூண் கல்லால் ஆன பீடத்தின் மீது பொருத்தப் பட்டுள்ளது. மானத்தம்பத்தின் அடிப்பகுதி நான்கு பட்டையாக தீட்டப்பட்டு நான்கு புறமும் தீர்த்தங்கரரின் திரு உருவம் செதுக்கப்பட்டுள்ளது (படம்) அதற்குமேல் உள்ள தூண்பகுதி நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு 8 பட்டைகளாகவும், அதற்குமேல் பகுதி 16 ஆகவும், அடுத்து 32 முதல் 64 பட்டையாகவும் தீட்டப்பட்டுள்ளது. கம்பத்தின் மேல் கலை அம்சத்துடன் கூடிய ஒரு தாமரை மலர் போன்ற பீடத்தின்மேல் சிறுகோயில் போன்ற அமைப்பு காணப்படுகிறது. அச்சிறுகோயிலின் உட்புறம் நான்கு திசையையும் நோக்கியவாறு நின்ற நிலையில் உள்ள அருகர் உருவம் (சதுர்முகன்) அமைக்கப்பட்டுள்ளது. அச்சிறுகோயிலின் விமானத்தின் உச்சியில் பூரணகும்பம் அமைக்கப் பட்டுள்ளது.


*முக மண்டப தூண் சிற்ப வடிவம்*

மானத்தம்பம் எனும் மனத் தூய்மைக் கம்பம் சமவ சரணத்தின் ஓர்

அங்கமாகும். சமவ சரணம் வட்ட வடிவமானது. மிகவும் விசாலமானது. ஏழு பிரகாரங்களையும் மூன்று மதில்களையும் உடையது. நான்கு புறமும் வாயில்களை உடையது. வாயில்களின் முன்னே மானஸ்தம் பங்கள் நீண்டு உயர்ந்து மிக்கப் பொலிவுடன் நிற்பவையாகும். அவற்றைப் பார்த்த மாத்திரத்தில் பார்ப்பவர்தம் செருக்கு (கர்வம்) யாவும், விலகிவிடும் தன்மை வாய்ந்தது (சுகுமாரன், ஜைனம், 2005. ப. 146)



*விமானம்*

மானத்தம்பத்தின் அழகிய தோற்றத்தை மேருமந்திரப் புராண ஆசிரியர், சமவ சரண சருக்கத்தில், இவ்வாறு விளக்கியுள்ளார்.

வயிரம், நற்படிகம், வயிடூரியம் அடி,
நடுவண், உச்சி
உயரத்தின் பாகமோக்கம், படிகம் மேல்
கீழ வோக்கம்
வெயில்விடு, தாரைக்கீழ்மேல் ஆயிரம்
நடுவிரட்டித்
துயரினைக் கெடுக்கும் சித்தப்படிமை நாற்றிசையும் ஆமே. -1051



*முக மண்டப தூண் சிற்ப வடிவம்*

'அந்த மானத்தம்பங்களின் அடிப் பகுதியில் ஒரு காத உயரம் வயிரத்தினாலும், மையத்தில் இரண்டு காத உயரம் படிகத்தினாலும், மேலே ஒரு காத உயரம் வைடூரியத்தினாலும் அமைந்து கீழும் மேலும் ஆயிரம் ஆயிரம் பட்டைக ளாகவும், மையப்பகுதி இரண்டாயிரம் பட்டைக ளாகவும் அமைந்திருந்தன. மேலும் அடிப்பகுதியிலும் உச்சியிலும் நாற்புறமும் துன்பத்தைப் போக்கும் சித்த பரமேட்டிகளின் பிரதிமைகள் விளங்கின. (மேருமந்தர புராணம். உரை. புலவர் ஜெ. பானுராசனார்)


முக மண்டப தூண் சிற்ப வடிவம்

**திருச்சுற்றுப் பாதை (பிரகாரம்) :** இது மானத்தம்பத்தை அடுத்து கருவறையைச் சுற்றி அமைந்துள்ளது. திருச்சுற்றுப் பாதையின் தெற்குப் பகுதியில் மானத்தம்பத்துக்கு நேரே 3 சமண சமயத் துறவியர்கள் மூவரின் திருவடிகள் கொண்ட மண்டபமும், ஸ்ரீபாகுபலி சுவாமி மண்டபமும் அமைக்கப்பட்டுள்ளன. அன்றாட வழிபாட்டிற்குத் தேவையான மலர்கள் கிடைக்க பிரகாரத்தில் வடக்கு, தெற்குப் பகுதியில் அழகிய நந்தவனம் அமைக்கப்பட்டுள்ளது. பிரகாரத்தைச் சுற்றி வரும் அனைவரின் மனதைக் கவரும் வண்ணம் கருவறை, விமானம், மகாமண்டபம், ஆகியவற்றின் சுவரின் வெளிப்புரத்தில் பலவகையான சிற்பங்களும், அலங்கார அமைப்புகளும் காணப்படுகின்றன.

**விமானம் :** கோயில் கட்டடக் கலை வல்லுனர்கள் கோயிலின் அமைப்பை நின்ற நிலையில் உள்ள மனித அங்கங்களோடு ஒப்பிட்டு அமைத்துள்ளனர். அவை **அதிட்டானம்** (அடித்தளம் /தாங்குதளம்) பாதத்திற்கு ஒப்பாகவும், **பித்தி** (அ) சுவர் கால்களுக்கும், பிரஸ்தம் எனும் கூரை தோளுக்கும், **கிரீவம்** கழுத்துப் பகுதிக்கும், சிகரம் தலைப்பகுதிக்கும், **கலசம்,** முடி (அ) கிரீடத்திற்கும் இணையாகக் கொண்டே அனைத்து ஆலயங்களும் அமைக்கப்பட்டுள்ளன. (படம் 1) கோயிலின் உயரத்தை உயர்த்தவும், அழகிய சிற்பங்களை இடம்பெறச் செய்யவும் அமைக்கப்பட்டது அதிட்டானம் ஆகும். அதிட்டானம் எனும் பகுதி கருவரை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முக மண்டபம் அனைத்தையும் இணைத்து தாங்கும் அடித்தளப் பகுதியாகும். ஆலயத்தின் பாதம், கால், பிரஸ்தரம் (ஒரு பகுதி) வரை கருங்கல்லால் கட்டப் பெற்றுள்ளது. விமானத்தளம், கிரீவம், சிகரம் ஆகியவை செங்கற்கள், சுதை, சுடுமண் ஆகியவற்றால் கட்டப்பட்டுள்ளன. விசயநகர நாயக்கரது காலத்தில் கட்டப்பட்ட கோயில் விமானங்கள் கூரை வரை கல்லினாலும், கூரையின் மேற்பகுதி முழுவதும் செங்கல் மற்றும் சுதையினாலும்

கட்டப்பட்டிருப்பதால் விமானத்தின்மேல் இடம் பெறும் சிற்பங்கள், சுதையினாலான சிற்பங்களாக விளங்கின என அம்பை மணிவண்ணன் என குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீபுஷ்பதந்தர் கோயிலும் இவ்வாறு அமைக்கப்பட்டதாகும்.

அதிட்டானம், உபானம், பத்மம், கம்பு, ஜகதி, முப்பட்டை முகம், கம்பு, கண்டம், கம்பு, பட்டிகை, கம்பு என்ற வரிசையில் பட்டை தீட்டப்பட்டு கருங்கல் அடுக்குகளைக் கொண்டதாகும். (படம் 3) அவை அழகு சேர்க்கும் வகையிலும், தாங்குதளமாக அமையவும் அலங்காரச் சிற்பங்கள் செய்து அழகுப்படுத்தவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. திருப்பறம்பூர் ஆலயத்தில் அதிட்டானத்தின் அனைத்து பகுதிகளும் பட்டை தீட்டப்பட்ட அலங்கார அமைப்புகள் ஏதும் இல்லாத ஒன்றாக உள்ளது. அதிட்டானத்தின் பத்மம், தாமரை மலரின் இதழ்போல் அமைக்கப்பட்டுள்ளதால் இவ்வதிட்டானத்தை பத்ம பந்த அதிட்டானம் என்பர்.

தாங்குதளத்திற்க்கு மேலும் பலம் சேர்க்க அதிட்டானத்தின் மேல் பட்டை தீட்டப்பட்ட கருங்கல் அடுக்கு காணப்படுகிறது. இதைவேதிகை (படம் 3) என்பர். வேதிகையுடன் கூடிய அதிட்டானம் பல்லவர் முத்தரையர் கலைப் பாணியைக் கொண்டதாகும்.

பித்தி (அ) கால் : பித்தி எனும் பகுதி கருவறையைச் சுற்றியுள்ள சுவரைக் குறிக்கும். புஷ்பதந்தர் ஆலயத்தின் பித்தி கருங்கற்களால் ஆனது. அது அழகிய அலங்கார சித்திர வேலைப்பாடுகள் கொண்டதாக உள்ளது.பித்தியை அழகு படுத்துவது அரைத்தூண்கள், கோஸ்டபஞ்சரம், கும்பபஞ்சரம் (கும்பலதா) ஆகியவை, அலங்கார சிற்ப வேலையைப்பாடு களுடன் காணப்படுகின்றன. (படம் 3) இவை அனைத்தும் கருவறையின் தெற்கு, மேற்கு, வடக்கு வெளிச்சுவரில் காணப்படுகின்றன. கோஷ்டபஞ்சரம் பொதுவாக இறைவனின் திருஉருவம் வைப்பதற்கான அமைப்பாகும். இவ்வாலயத்தில் அமைக்கப்பட்டுள்ளது. கோஷ்ட பஞ்சரம் பிந்தைய சோழர்கால

(கி.பி.1100-1350) அமைப்பை ஒத்திருக்கிறது (ழூவோ துப்ருயல் 1999 ப.60) கோஷ்டபஞ்சரத்தில் பாண்டியர் கோயில்களிலும் விசயநகர நாயக்கரது கோயில்களிலும் இறையுருவங்கள் இன்றியே அமைக்கப்பட்டுள்ளன (அம்பை மணிவண்ணன் ப.101).

**பிரஸ்தம் :** கருவறை சுற்றுச் சுவரின் மேல் அமைந்துள்ளது கூறைப் பகுதி பிரஸ்தம் என அழைக்கப்படுகிறது. இதில் பூதவரி கொடுங்கை , யாளிவரி ஆகியவை தேவக்கோட்டத்தின் மேல் பகுதியில் காணப்படும். போதகம் என்பது சிங்கமுகத்துடன் கூடியது ஒரு கூடுபோன்ற அமைப்பாகும். இக்கோயிலில் காணப்படும் கபோதகம் (படம்) பிந்தைய சோழர் கால கபோதக அமைப்பை ஒத்திருக்கிறது. (ழூவோ துப்ருயல் 1999 ப.58) யாளி வரிசை மகா மண்டபத்தின் பிரஸ்தத்தில் அமைந்திருப்பதைக் காணலாம். அலங்கார வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ள கபோதகம் சுவரின் வெளிப்புறம் தள்ளி அமைக்கப்பட்டுள்ளது. இவ்வமைப்பு மழைநீரானது கருவறைச் சுவரின் வெளிப்பகுதியில் படாமாலிருப்பதற்காக அமைக்கப்படுவதாகும்.

**விமானம் :** அதிட்டானம் முதல் ஸ்தூபிவரை உள்ள பகுதியை விமானம் என்பர். விமானம் ஒன்றுமுதல் பல தளங்கள் கொண்டதாக அமையும். ஸ்ரீபுஷ்பதந்தர் கருவறை அமைந்துள்ள விமானம் இரு தளங்களைக் கொண்டது (துவிதள விமானம்) முதலில் ஒரு தளவிமானம் இருந்தது என்றும், 1979ஆம் ஆண்டு புதுப்பிக்கப்பட்டபோது இருதள விமானமாக அமைக்கப்பட்டது என்றும் ஏகாம்பரநாதன் குறிப்பிட்டுள்ளார். இவ்விருநிலை விமானத்தில் காணப்படும் சிற்பங்கள் சுதையினால் செய்யப்பட்டவையாகும். விமானத்தில் ஒவ்வொரு நிலையிலும் அலங்கார அமைப்புகளான சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. கீழ்தளத்தின் நடுவில் உள்ள சாலை அமைப்பில் அருகரின் உருவம் நின்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. அடுத்த தளத்திலுள்ள சாலை அமைப்பில் அருகரின் உருவம் அமர்ந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. வட்ட வடிவில் அமைந்துள்ள விமானத்தின் சிகரம் (வேசர விமானச் சிகரம்) அலங்கார

அமைப்புடன் காணப்படுகிறது.

விமானத்தில் கபோதகம் போன்ற அமைப்பு பெரிய அளவில் அமைந்துள்ளது. இதை மகாநாசி என்பர். இது திசைக்கு ஒன்றாக அமைந்திருக்கிறது. சிகரத்திற்கு மேல் உலோகத்தலான கலசம் ஸ்தாபனை செய்யப்பட்டுள்ளது.

**மண்டபங்கள் :** ஸ்ரீபுஷ்பதந்தர் ஆலயத்தில் கருவரை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், முக மண்டபம் என நான்கு மண்டபங்கள் அமைந்துள்ளன. பல்லவர்களின் காலத்தில் (கி.பி. 600 - 850) கருவறையும் அர்த்த மண்டபமும் மட்டுமே கோயில்களில் அமைந்திருந்தன. கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு சோழ அரசர்கள் ஆட்சிக் காலத்தில்அர்த்த மண்டபத்துக்கு முன் இன்னொரு மண்டபமாக, மகா மண்டபம் அமைக்கப்பட்டது (மயிலை சீனி, வேங்கடசாமி 2008 ப. 13-14).

திருப்பறம்பூர் கோயிலில் கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், மட்டுமின்றி கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் முகமண்டபம் ஒன்றும் புதிதாகக் கட்டப்பட்டுள்ளது. (ஏகாம்பர நாதன் 1991)
**கருவறை (கர்ப்ப கிருகம்) :** திருப்பறம்பூர் பகவான் 1008 ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலயத்திலுள்ள கருவறையில் ஸ்ரீ புஷ்பதந்தரின் உருவச்சிலை அமைக்கப்பட்டுள்ளது. தியான நிலையில் உள்ள தீர்த்தங்கரர் வெண்மை நிறம் உடையவராக சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறார். தீர்த்தங்கரர்களுக்கே உரிய எண்வகை சிறப்புகளுடன் (அஷ்டமாபிராதிகார்யம்) உள்ளவாறு அவரின் திருவுருவம் அமைக்கப்பட்டுள்ளது.

எண்வகைச் சிறப்பை விளக்கும் பாடல் : திருநூற்றந்தாதி

“சுடர்மண்டலம் சுரதுந்துபி தெய்வத் தொனி சிங்கம்
பிடர் மண்டில அணைபிண்டி வெண்சாமரை பெய்மலரின்
அடர் மண்டல மழையும் பொற்குடையும் மும்மையா மடியோம்
இடர்மண்டல கெடுப்பார்கு இமையோர் செய்யும் எண்சிறப்பே”

பொன்னாலான சிம்மாசனமும், அதன்மேல் உள்ள பொற்றாமரை, தலைக்குப்பின் ஒளிவட்டம், முக்குடை,

அசோகமரம் (பிண்டி) தேவர்கள் மலர்மாரி பொழிதல், இருபக்கமும் சாமரை வீசுதல், இருபக்கமும் துந்துபி முழங்குதல், திவ்யத்தொனி ஆகிய எட்டு அமைப்புகளை உடையவராக புஷ்பதந்தர் அமர்ந்துள்ளார்.

கருவறையில் உள்ள பகவானின் சிலையும் மகா மண்டபத்தில் பிரதிஷ்டை செய்துஅன்றாட வழிபாட்டிற்காக வைக்கப்பட்டிருக்கும் கல் திருவுருவமும் எண்வகை சிறப்புகள் நன்கு தெரியுமாறு அமைக்கப்பட்டுள்ளன.

முன்னர் கருவையில் அமைக்கப்பட்டிருந்த கல் உருவச்சிலையின்மேல் சமீபகாலத்தில் சுதைபூசி வெள்ளை நிறம் தீட்டப்பட்டிருப்பதாக கருதப்படுகிறது. புஷ்பதந்தரின் லாஞ்சனமான முதலை சின்னம் பீடத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

அர்த்தமண்டபம் அகலம் குறைவாகவும், சிறியதாகவும் உள்ளது. அர்த்த மண்டபத்தில் அன்றாட வழிபாட்டிற்கான திருவுருவம் ஒரு காலத்தில் அங்கு அமைக்கப்பட்டிருந்தது என்றும் பின்னர் மகா மண்டபத்திற்கு மாற்றப்பட்டது என்றும் அறிய வருகிறோம். அர்த்த மண்டபத்தில் உலோகத் திருவுருவங்கள் ஒருமேடையில் வைக்கப்பட்டுள்ளன.

**மகாமண்டபம் :** மகா மண்டபத்தில் அன்றாட வழிபாட்டிற்காக கல்லால் ஆன ஸ்ரீ புஷ்பதந்தரின் திருவுருவம் ஒரு பீடத்தில் தக்க முறையில் அமைக்கப்பட்டுள்ளது. தீர்த்தங்கரரின் முன் வழிபாட்டிற்குத் தேவையான உலோகத்தாலான எண்வகை மங்களப் பொருள்கள் கெண்டி, ஆல வட்டம் பூரண கும்பம், கொடி, சந்தனபேலா , குடை, கண்ணாடி, சாமரம் ஆகியவை ஒரு மேடையில் வைக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீபுஷ்பதந்தர் விமானத்தில் சுக்ர கிரகம் இருப்பதாக ஒரு நம்பிக்கை. சுக்ர திசை நடப்பவர்கள் இவ்வாலயம் சென்று வழிபட்டு நலம் பெறலாம்.

மகாமண்டபத்தின் வடக்குப் பகுதியில் ஸ்ரீ பார்சுவநாதரின் இயக்கன், இயக்கியரான ஸ்ரீதரணேந்திரர், ஸ்ரீபத்மாவதி ஆகியோரின் கல் திருவுருவச் சிலைகளும், ஸ்ரீசீதளநாதர் இயக்கரான ஸ்ரீ பிரம்மதேவர் கல் திருஉருவச் சிலையும், ஸ்ரீசந்திரப்

பிரபரின் இயக்கியான ஸ்ரீஜ்வாலாமாலினியின் கல் திருவுருவச்சிலையும் வழிபாட்டிற்கு உரிய முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

**முகமண்டபம் :** முக மண்டபம் 16 தூண்களை உடையதாகவும் முக மண்டபத்தின் தரையின் ஒரு பகுதி தரை (பிரகாரம்) மட்டத்திற்குச் சமமாகவும், மற்றொரு பகுதி மகா மண்டபத்தின் தரை மட்டத்திற்கு சமமாகவும் அமைக்கப்பட்டுள்ளது. சுற்றுச் சுவர் முழுவதும் இல்லாமல் திறந்த நிலையில் அமைந்துள்ள முக மண்டபத்தின் தூண்கள் அலங்கார வேலைப்பாடுடையதாகவும், புடைப்புச் சிற்பங்கள் உடையதாகவும் அமைந்துள்ளது.

கனசதுர அமைப்பு கொண்ட தூணின் அடிப் பகுதியில் புடைச் சிற்பங்களாக கணதரர், ஸ்ரீ பிரம்ம தேவர், ஸ்ரீ பார்சுவநாதர், நடனமாதர்கள் ஆகியோர் உருவங்கள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன.

**சாந்தி மண்டபம் :** முக மண்டபத்திற்கு வடக்கே திருமதில் சுவரை ஒட்டி சாந்தி மண்டபம் அமைந்துள்ளது. இங்கு 108 ஸ்ரீ தர்மசாகர் நூல் நிலையம் இயங்கி வருகிறது. இம்மண்டபம் அறச்சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்கும், சமயம் தொடர்பான கலை நிகழ்ச்சிகள் நிகழ்த்துவதற்கும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

*“அகழ் ஆராய்ச்சியில், சிந்து சமவெளி மக்களால் வணங்கப்பட்ட நிர்வாண நிலையில் உள்ள யோகியின் உருவச் சிலைகளும், அக்காலத்திய எருது சின்னம் பொறிக்கப்பட்ட நாணயங்களும், முத்திரைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. ஆதலால் இமயம் முதல் குமரி வரையிலும், தெற்கில் இலங்கையிலும் மக்களிடையே பரவியிருந்த சமய நெறி விருஷப தேவரின் அகிம்சைக் கொள்கையின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது என்று உறுதி கூறலாம்.”*

*அகிம்சை சமயம் 2005*
*பேராசிரியர் அ. சக்கரவர்த்தி*
*தமிழ் ஆக்கம் ஜெ. ஸ்ரீசந்திரன்*
*வர்த்தமானன் பதிப்பகம்*

*மூன்றாவது தீர்த்தங்கரர் சம்பவநாதர் காலத்தில் தொடங்கி 9வது தீர்த்தங்கரர் புஷ்பதந்தர் காலம்வரை சிந்துவெளி நாகரிகம் தழைத்தோங்கியது.*

*ஸ்ரீ ஸ்ரேயாம்ஸநாதர், ஸ்ரீ புஷ்பதந்தர், ஸ்ரீ வாசுபூஜ்யர் ஆகிய தீர்த்தங்கரர்கள் தொடர்புடைய பல செய்திகள் முறையாக ஆராயப்பட்டால், மகாவீரருக்கு முந்திய பல ஆயிரம் ஆண்டுகளுடைய ஜைன சித்தாந்தத்தின் வரலாறு தெளிவாகப் புலப்படும்.*

*சு. ஸ்ரீபால், ஐ.பி.எஸ்.,*
*முக்குடை, நவம்பர் 2008. ப.7-12*

*பூச்சியபாதர் என்பவரின் மாணவரான வச்சிரநந்தி மதுரையில் **திராவிட சங்கம்** ஒன்றை நிறுவினார். (கி.பி. 470) சமண அறத்தைப் பரப்பவும், சமணக் கொள்கைகளை விளக்கக் கூடிய நூல்களைத் தோற்றுவிப்பதுமே இச்சங்கத்தின் நோக்கமாகும். பதினெண்கீழ்கணக்கு நூல்கள் இச்சங்க காலத்தில் இயற்றப் பெற்றவையாம். மணிமேகலையும், சிலப்பதிகாரமும் இக்காலத்தில் எழுந்தவையாகத் தோன்றுகின்றன. நீலகேசி, குண்டலகேசி, யசோதரகாவியம், சீவகசிந்தாமணி ஆகிய காவியங்கள் தமிழில் தோன்றுவதற்குக் காரணமாக இருந்ததும் இத்திராவிட சங்கத்தின் தொண்டேயாகும்.*

*தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும்*
*டாக்டர் கே.கே. பிள்ளை 2000 ப.186*
*உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்*
*தரமணி, சென்னை*



## ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரர் ஆலயங்கள்

ஸ்ரீ புஷ்பதந்தருக்கென தனி ஆலயங்கள் திங்களூர் (11-ஆம் நூற்றாண்டு) தொரப்பாடி (15-ஆம் நூற்றாண்டு) ஆகிய கிராமங்களில் மட்டுமே அமைந்துள்ளன. திருநறுங்கொண்டை அப்பாண்டை நாதர் ஆலயத்திலுள்ள 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த புஷ்பதந்தர் உருவம் இருப்பதையும் மற்றும் உலோகத் திருஉருவங்கள், விழுக்கம், ஏதாநெமிலி, நெல்லியாங்குளம் ஆகிய ஆலயங்களில் இருப்பதையும் திரு. ஏகாம்பரநாதன் (2002) குறிப்பிட்டுள்ளார்.

## ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரர் ஆலயம், தொரப்பாடி

தொரப்பாடி கிராமம், திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம், செஞ்சிக்கு வடமேற்கில் 10 கி.மீ. தொலைவில் மேல்மலையனூருக்கு அருகே உள்ளது. இங்கு கலை அம்சங்கள் நிறைந்த கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலயம் அமைந்துள்ளது. தெற்குநோக்கி அமைந்துள்ள இவ்வாலயத்தில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவை உள்ளன. பத்மபீடத்தில் தியான நிலையில் கருவறையில் அமைந்துள்ள ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரரின் திரு உருவத்துடன் அஜித இயக்கனும், மகாகாளி இயக்கியும் உள்ளனர். பிரபாவளியில் மகரதோரணமும், யாளித்தலையும் உள்ளது (நடன காசிநாதன், மா. சந்திரமூர்த்தி, 2005. ப.258-259, த. ரமேஷ் 2005, ப.55-56). திரு. கிருட்டிணமூர்த்தி (1994) அவர்கள் இவ்வாலயத்தில் பிரம்மதேவர், தருமதேவி உருவச் சிலைகள் இருப்பதையும், மகா மண்டபத்தின் கிழக்குச் சுவரில் நவதேவதை மற்றும் 24 தீர்த்தங்கரர்களின் சிற்பங்கள் உள்ளதையும் குறிப்பிட்டுள்ளார்.

## ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரர் ஆலயம், திங்களூர்

ஸ்ரீபுஷ்பதந்தர் ஆயலம் ஈரோடு மாவட்டம், விஜயமங்கலத்திலிருந்து கோபி செல்லும் சாலையிலுள்ள திங்களூரில் அமைந்துள்ளது. கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இவ்வாலயம் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இவ்வாலயத்தில்

கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவை உள்ளன. சுற்றுச் சுவர் மிகவும் சிதைந்த நிலையில் காணப்படுகிறது. கல்லால் கட்டப்பட்ட கருவறையில் 45 செ.மீ. உயரம் உள்ள ஸ்ரீ புஷ்பதந்தர் திருஉருவம் அமைந்துள்ளது. மகா மண்டபத்தில் உள்ள சிறுஅறையில் நின்ற நிலையில் 1.5 மீட்டர் உயரம் உள்ள பிரம்மதேவர் திருவுருவம் உள்ளது. (செ. இராசு 2005 ப.216, 330) கல்வெட்டுகளில் ஸ்ரீ புஷ்பதந்தரை பூபேந்திரர் என்றும் திங்களூரை சந்திரபுரி மற்றும் சந்திரபஸ்தி (சந்திரவசதி) என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வாலயத்தைப் பற்றியும் அங்குள்ள மூன்று கல்வெட்டுக்களைப் பற்றியும் விரிவாக மக்கென்சி, (1972) திரு. செ. இராசு (2005) மற்றும் திரு. நடன காசிநாதன், மா. சந்திரமூர்த்தி (2005) ஆகியோர் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வரலாற்றுச் சிறப்புமிக்க இவ்வாலயம் இன்று வழிபாடு ஏதும் இன்றி மிகவும் சிதைந்த நிலையில் காணப்படுகிறது.

## சுந்தரம்பள்ளி

சுந்தரம்பள்ளி எனும் கிராமம் வேலூர் மாவட்டம் திருப்பத்தூருக்கு அருகே அமைந்துள்ளது. இக்கிராமத்திலுள்ள புலியாண்ட நயினார் அவர்களின் நிலத்தில் பச்சை நிற கல்லினாலான புஷ்ப தந்த தீர்த்தங்கரர் உருவச்சிலை கண்டெடுக்கப்பட்டுள்ளது (குமார்-2005). இச்சிலை 9-10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது. தியானநிலையில் உள்ள ஸ்ரீ புஷ்பதந்தரின் இரு பக்கமும் சாமரம் வீசுவோரும், தலைக்குப் பின்னால் மிக அழகான பிரபாவளியும், அதற்குமேல் முக்குடையும், மலர்த் தோரணமும், முதலை சிற்பமும் காணப்படுகின்றன.

சிலைக்கு அருகே பல பாறைகளும் செங்கல் துண்டுகளும் காணப்படுவதால் இங்கு சமணர் கோயில் இருந்திருக்க வேண்டும் எனத் தொன்மை இயல் ஆய்வாளர் திரு. குமார் (2005) அவர்கள் குறிப்பிட்டுள்ளார். மேலும் இவ்வூர் சோழ மன்னன் சுந்தரசோழனின் பெயரில் சமணப் பள்ளியாக உருவாக்கப்பட்டது, சுந்தரசோழம் பள்ளியாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.




படம் - 1 விமான அமைப்பும் நின்ற நிலையில் உள்ள மனித உடல் கூறுகளும்.

(நன்றி : திருவாடுதுறை ஆதினம. அம்பை மணிவண்ணன், 1.அதிட்டானம், 2. பித்தி, 3. பிரஸ்தரம், 4. கிரீவம், 5. சிகரம், 6. கலசம்




படம் - 1, ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலய அமைப்பை விளக்கும் படம்




படம்-3 ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலய வெளிச்சுவரில் காணப்படும் அலங்கார சிற்பங்கள்

## 3. அருந்தவத்தோர் :

## 108 ஸ்ரீ தரும சாகர சுவாமிகள்

சமணர்கள் வாழ்ந்த சிற்றூர்களும், தெய்வத் திருக்கோயில்களும், தவப் பள்ளிகளும் சூழ்ந்திருந்த வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர் திருப்பறம்பூர். "ஆன்மீக உணர்வு மின்சார அலைபோல் பரவி" இருந்ததன் பயனால் இங்கு பலர் தவம் புரிந்து அமரத்துவம் அடைந்தனர். ஆனால் அவர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் இல்லாமல் போனது சமணர்களுக்கு நேர்ந்த ஒரு பேரிழப்பாகும். ஆனால் இருபதாம் நூற்றாண்டில் தவமிருந்து சல்லேகனை விரதம் பூண்டு அமரத்துவம் அடைந்த மூவரைப் பற்றிய வரலாறு ஓரளவு நமக்குக் கிடைத்துள்ளது. அம்மூவரில் முதல்வர் 108 ஸ்ரீ தரும சாகர சுவாமிகள் ஆவார். அவரின் வரலாறு முழுமையாகக் கிடைக்காததால், சில குறிப்புகளை வைத்தே நாம் அவரைப் பற்றி அறிய முடிகிறது.



உயர்திரு. வச்சிரபாகு நயினார் அவர்கள் 1870-ஆம் ஆண்டு திருப்பறம்பூரில் பிறந்தார். அவர் திருமதி ருக்மணி அம்மையார் அவர்களை மணந்து இல்லறத்தார் கடைபிடிக்க வேண்டிய அறங்களைக் கடைபிடித்து "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" (50) என்ற வள்ளுவரின் வாக்குப்படி நெறிவழுவாது வாழ்ந்து வந்தார்.

*அவ்விநயம் ஆறும் மும்மூடம் எண்மயமும்*
*செவ்விதின் நீக்கிச் சினம்கடிந்து - கவ்விய*
*எட்டுஉறுப்பின் ஆய இயல்பின்நற் காட்சியார்*
*சுட்டுஅறுப்பார் நாற்கதியின் துன்பு.*

*- அறநெறிச்சாரம் (59)*

ஒழுக்கத்திற்கெதிரான ஆறு பண்புகளையும் (அவிநயம் ஆறும்), உலக மூடம், பாசண்டிமூடம்,தேவ மூடம் முதலான மூன்று மூடங்களையும், அறிவு முதலான எட்டு வகை செருக்குகளையும் தவிர்த்து வாழ்பவரை எப்பிறவியிலும் துன்பம் அணுகாது என்பதை நண்குணர்ந்து நற்காட்சியராய் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு இரு மகள்களும், இரு மகன்களும் பிறந்தனர். அவர்களில் மூத்த மகன் திரு. பார்சுவநாதன் அவர்கள் ஆவார்.

உயர்திரு. வச்சிரபாகு நயினார் அவர்கள் ஆகமங்களையும் சமண சமயத் தத்துவங்களையும் மிக்க ஈடுபாடுடன் கற்று அறிந்து அவ்வழி நடந்து வந்தார். மேலும் அவர், அனைத்து விரதங்களையும் உபவாசங்களையும் நெறி தவறாமல் கைக்கொண்டும், தியானத்தில் ஆழ்ந்தும், ஆன்மீகப் பாதையில் தனது வாழ்க்கையை அமைத்துக் கொண்டு வாழ்ந்தார். ஆனால் அவரின் மனம் துறவறம் பால் குடி கொண்டது. பின் துறவு மேற்கொண்ட அவரை ஸ்ரீ தர்ம சாகர் எனப் பெயரிட்டு அனைவரும் வணங்கிப் போற்றி வந்தனர். சில ஆண்டுகளில் அவர் நிர்வாண தீட்சை பெற்று முற்றும் துறந்த முனிவரானார்.

ஸ்ரீ தர்ம சாகர் அவர்கள் 1924-25 ஆம் ஆண்டுகளில் தீர்த்தயாத்திரையாக பல சமணத் திருக்கோயில்களுக்குச் சென்று தரிசித்தும், சமண சமய மடாதிபதிகளுடன் கலந்துரையாடியும், முனிவர்களின் ஆசியைப் பெற்றும், சம்மேத சிகரம்,இராஜகிருஹம், பாவாபுரி, ஊர்ஜயந்தகிரி, ஆரா ஆகிய நகரங்களில் உள்ள சமணத் திருத்தலங்களைத் தரிசித்தும் மெய்த்தவ வாழ்க்கை வாழ்ந்து வந்த அவரை, வடநாட்டுச் சமண சமயத்தினர் பெரிதும் போற்றி வணங்கி ஆசி பெற்று வந்தனர்.

**சல்லேகனை :** சுவாமிகள் வட இந்திய யாத்திரையை முடித்துக் கொண்டு கர்நாடகாவில் உள்ள திருத்தலங்களையும், மடங்களையும் தரிசித்து தனது ஆன்ம பலத்தை மேலும் மேம்படுத்திக் கொண்டார். தனது இறுதி நாட்களை முற்றும் உணர்ந்த சுவாமிகள், மழைக்காலத்தை சிரவணபெளிகுளத்தில் தங்கி இருக்க முடிவெடுத்தார். அங்கு அவர் 1940 ஆம் ஆண்டில் 25 நாட்கள் தொடர் உண்ணா நோன்பை மேற்கொண்டு சல்லேகனை விரதத்தை ஏற்றார்.

சல்லேகனை விரதம் மேற்கண்ட முனிவரை தரிசிக்கும்பேறு, பெரும் புண்ணியம் செய்த இல்லறத்தார்க்கே கிடைக்கும். அதை உணர்ந்த சமண சமயச் சான்றோர்கள் பெரும் திரளாக வந்து அவரிடம் ஆசி பெற்றனர். சல்லேகனை மேற்கொண்ட 17-ஆம் நாள் ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் (1940-ஆம் ஆண்டு) உயிர் உடலை விட்டுப் பிரிந்தது. அவர் சித்தி அடைந்தார்.

108 ஸ்ரீ தர்ம சாகர முனிவரின் மெய்தவத்தையும் அவரைப் போற்றி அனைவரும் வழிபட்டதையும் நன்கு அறிந்த ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள் 108 ஸ்ரீ தர்ம சாகர முனிவரின் பிறந்த ஊரான திருப்பறம்பூரில் ஒரு நினைவுச் சின்னம் அமைக்க விழைந்தார். கரந்தை - திருப்பறம்பூர் சமண சமயச் சான்றோர்களின் நிறைந்த ஆதரவுடன் திருப்பறம்பூர் புஷ்பதந்தர் கோயிலில் ஓர் நூல் நிலையம் அமைத்து அதற்கு 108 **"ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் நூல் நிலையம்"** என்று பெயரிட்டார். 108 ஸ்ரீ தர்மசாகர சுவாமி அவர்களும், 108 ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமி அவர்களும் தங்களிடம் உள்ள ஆகம சாஸ்திர நூல்களை ஏற்கெனவே அந்நூல் நிலையத்துக்கு அளித்துள்ளனர்.

திருப்பறம்பூர் சமண சமயச் சான்றோர், ஸ்ரீ புஷ்பதந்த சுவாமிகள் ஆலயத்தில் 108 ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகளின் திருவடிகளை பீடத்தில் நிறுவி அனைவரும் வணங்கி வழிபட வழிவகை செய்துள்ளனர்.

திருப்பறம்பூருக்குப் பெருமை சேர்த்த 108 ஸ்ரீ தர்மசாகர சுவாமிகளின் அடி வணங்கி அவர் காட்டிய ஜின தர்மப்படி வாழ முயல்வோமாக.

## 108 ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகள்

ஆகமங்களாலும், வேத மந்திரங்களாலும், துறவற ஒழுக்கத்தில் தலை சிறந்து விளங்கிய முனிவர்களாலும், அருந்தவத்தோராலும், மகான்களாலும் மட்டுமே இயங்கி வருகிறது இம்மனித இனம் என்பது நமது முன்னோர்கள் கண்ட உண்மை. **இப்புண்ணிய பூமியில் எப்போதும் ஏதாவது ஒரு அருந்தவ முனிவரோ அறநெறியாளரோ இருந்து கொண்டே இருப்பார்கள் என்பதை வரலாற்றுச் சான்றுகள் உறுதி செய்கின்றன.** இவை அனைத்திற்கும் இலக்கணமாக அமைந்த திருப்பறம்பூரில் பிறந்து, சமண சமயத் தத்துவங்களை ஆழ்ந்து படித்து, துறவு மேற்கொண்டு, தவம் புரிந்து ஸ்ரீசுதர்ம சாகர சுவாமிகள் என்ற பெயருடன் நிர்வாண தீட்சை பெற்று கஜபந்தாவில் சல்லேகனை விரதம் ஏற்று அமரர் ஆன திரு வ. பார்சுவநாத நயினார் அவர்களின் வாழ்க்கை வரலாறு திருப்பறம்பூர் ஒரு திவ்யபூமி என்பதற்கோர் சான்றாகும்.



திரு. தி.வ. பார்சுவநாத நயினார் அவர்கள் உயர்திரு வச்சிரபாகு நயினார், திருமதி ருக்மணி அம்மையார் அவர்களின் மூத்த மகனாக 1902-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 27 ஆம் நாள் திருப்பறம்பூரில் பிறந்தார். இவரது தந்தையார் திரு. வச்சிரபாகு நயினார் துறவறம் மேற்கொண்டு வீடுபேறு அடைந்த ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் ஆவார். தந்தை வழியிலேயே திரு. பார்சுவநாத நயினார் அவர்களும் இளமை முதலே இறை வழிபாட்டில் அதிக ஈடுபாடு கொண்டவராக விளங்கினார்.

**கல்வி :**

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் ஒன்பதாம் வகுப்பு வரை பயின்றார். மிகவும் ஆர்வமுடன் கல்வி பயின்ற அவரால் மேலும் படிக்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டதால் திருப்பறம்பூர் திரும்பினார். இவரது தந்தை திரு. வச்சிரபாகு நயினார் (ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள்) இவரின் 13-வது வயதிலேயே ஜினதர்ம பற்றும் வைராக்கிய பாவனையும் கொண்டு துறவு பூண்டார். இச்சூழலில் திரு.பார்சுவநாத நயினார் அவர்கள் சமண சமயத் தத்துவங்களை ஆழ்ந்து கற்று அறிவதிலும் ஆகம மற்றும் ஆன்மப் பயிற்சி பெறுவதிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

மனைவாழ்க்கை மாதவ மென்றிரண்டு மாண்ட
வினைவாழ்க்கை யாக விழைப - மனைவாழ்க்கை
பற்றுத லின்றி விடுதல்முற் சொல்லுமேல்
பற்றுதல் பாத்திற வம்

என்ற ஏலாதி (73) பாடல் இல்லறமும் துறவறமும் நல்வினைக்குரிய வாழ்க்கை என்பது எடுத்துக்காட்டுகிறது.

இல்லறத்தோரும் மற்றும் துறவறத்தோரும் பின்பற்ற வேண்டிய ஒழுக்கங்களைச் சமண சமய அறநெறி நூல்கள் மிகத் தெளிவாக வரையறைப்படுத்தியுள்ளன. அவ்வறங்களை நன்கு அறிந்த அவர் இல்வாழ்க்கைக்குத் தேவையான வழிமுறைகளைப் பின்பற்றி வாழ்ந்தார். அவர் குடும்ப நலன் காக்க விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருந்தார். 1945 ஆம் ஆண்டு முதல் சில ஆண்டுகள் கரந்தை திருப்பறம்பூர் ஸ்ரீ அகளங்க ஜெயின் சமஸ்கிருத பாடசாலையில் ஆசிரியராக இருந்து சமண சமயத் தத்துவங்களையும், பாடல்களையும் மாணவர்களுக்குக் கற்பித்து வந்தார்.

## இல்வாழ்க்கை :

இவர் தமது இருபத்தி மூன்றாம் வயதில் திருப்பறம்பூர் கிராமத்தில் வசித்து வந்த திரு. அய்ய நயினார் அவர்களின் மகள் திருமதி குப்பம்மாள் அவர்களை மணந்தார். இவர்களுக்கு இரண்டு மகன்களும், ஒரு மகளுமான திரு. ஆதிராஜ் ஜெயின், திரு. ஜெயக்குமார் ஜெயின், திருமதி சரோஜா ஆகியோர் ஆவார்.

## ஆத்ம சிந்தனையும் தியானமும் :

விளையாமை யுண்ணாமை யாடாமை யாற்ற
உளையாமை யுட்குடைத்தா வென்று - களையாமை
நூற்பட்டார் பூங்கோதாய் நோக்கி னிவையாறும்
பாற்பட்டார் கொண்டொழுகும் பண்பு - ஏலாதி - 13

எவ்வுயிர்க்கும் துன்பம் தராமை, அளவின்றி உண்ணாமை, பயனற்ற சொற்களை உரையாமை, இன்னல்களைக் கண்டு வருந்தாமை, நாணத்தகும் செயல்களைச் செய்யாமை, சிறந்த ஒழுக்கத்தை விட்டு நீங்காமை ஆகிய ஆறும் அறவோர் பண்புகள். இவ் ஏலாதிப் பாடல் அறவோரை விட்டு நீங்காத ஒழுக்கத்தை விளக்குகிறது. திரு. பார்சுவநாத நயினார் அவர்கள் இப்பாடலுக்கு உதாரணமான ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடித்து வந்தார். ஆத்மிகத் துறையில் ஆழ்ந்த பற்றும் பக்தியும் கொண்டு சதுர்தசி, பௌர்ணமி விரதங்களையும், சுருத பஞ்சமி நோன்புகளையும் மேற்கொண்டு உபவாசங்கள் இருந்து ஆத்ம சிந்தனையில் ஈடுபட்டார். பிரம்மசரிய விரதம் ஏற்று தியானத்தில் ஈடுபட்டுத் திருப்பறம்பூர் தீர்த்தங்கரர் ஆலயத்திலே அதிகநேரம் தங்கி இருந்தார்.

சம்பாபுரி,பாவாபுரி, மூடுபத்திரை, சிரவணபெளிகுளம், முதலிய சமண புண்ணியத் தலங்கள் சென்று வழிபட்டு வந்தார். ஒருவேளை மட்டுமே உணவு உண்டு, ஓரங்கி உடுத்தி அருகன் பக்தியில் ஈடுபட்டார். தனது மக்கள் மூவருக்கும் திருமணம் செய்து முடித்தார்.

**துறவு :**

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றின்
போஒய்ப் பெறுவ தெவன் - குறள் - 46

என்ற குறளுக்கு ஒப்ப இல்வாழ்வின் அனைத்துக் கடமைகளையும் முடித்துக் கொண்ட அவர், இல்லறத்தில் இருக்கும்போதே துறவறம் மேற்கொள்வதற்காக தன்னைத் தயார் படுத்திக் கொள்ளத் துவங்கினார். 1965-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 14ஆம் நாள் ஞாயிறு காலை 6 மணிக்குக் கரந்தை ஸ்ரீ குந்து நாத சுவாமி ஆலயத்தில் அகளங்க மண்டபத்தில் **சுல்லக் தீக்ஷை** ஏற்று ஸ்ரீதர்ம சாகர் என்ற பெயர் பெற்றார்.அதற்குத் தேவையான உபகரணங்களான மயில் பிஞ்சம், கமண்டலம் ஆகிய புனிதச் சின்னங்களைக் கொடுக்கும்பேறு திரு. ஆத்மபந்து பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரியார் அவர்களுக்குக் கிடைத்தது.

மெய்வாய் கண் மூக்குச் செவி எனப்பேர் பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக் - கைவாய்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்றல்
விலங்காது வீடு பெறும்.

என்ற நாலடி நானூற்றுப் பாவின்படி ஐம்புலன் வென்று கடுந் தவ வாழ்க்கை மேற்கொண்ட ஸ்ரீ தரும சாகர சுவாமிகள் ஆர்ப்பாக்கம் மற்றும் தமிழகத்தில் உள்ள சமண சமய ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டும், அறவுரை ஆற்றியும் வந்தார்.

1965ஆம் ஆண்டு ஜூன் மாதம் 3ஆம் நாள் திருநறுங்கொண்டை அப்பாண்டை நாதர் ஆலயத்தில் ஐலக் தீட்சை ஏற்றார். பின்னர் தமிழ்நாட்டில் உள்ள சமண சமய ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டு வந்தார்.

அன்னாரின் கடும் தவமும், திடமான ஆத்ம சிந்தனையும், சாந்தமான தோற்றத்தையும், உள்ளத் தூய்மையையும் வெளிப்படுத்தியது.

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக் கொண்டற்று

என்ற குறளுக்கு ஏற்ப அவருடைய அருந்தவ ஒழுக்கம், சமண சமயத்திரிடையே அவரின்பால் பெரும் மதிப்பையும் பக்தியையும் ஏற்படுத்தியது.

வடநாடு சென்ற அவர் தனது 63-ஆம் வயதில் 1966-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 23ஆம் நாள் ஞாயிறு காலை 7 மணிக்கு சோலாப்பூர் **பரமபூஜ்ய சாரித்ர சூடாமணி 108 ஸ்ரீ விமல சாகர சுவாமிகள்** சன்னதியில் நிர்கிருந்த (நிர்வாண) ஜினதீக்ஷையைக் கைக்கொண்டார். அகப்பற்று, புறப்பற்று நீங்க ஆத்ம சுத்தியோடு மேலும் கடும் தவம் புரிந்து வந்தார். முனிவரின் அருந்தவ மேன்மையை அறிந்த சமண சமயச் சான்றோர்கள் அவரைத் தரிசித்து ஆசிபெற பெருந் திறளாகக் கூடினர். ஆனால் அவர் ஆழ்ந்த பக்தி கொண்டவராய் ஆரவாரமற்ற தனிமையில் ஆன்ம தியானத்தில் ஈடுபடுவதையே விரும்பினார்.

ஸ்ரீ தர்மசாகர முனிவரின் எண்ணத்தையும், தீர்க்கமான முடிவையும், அவரின் மனோ உறுதியையும், நன்கு அறிந்த தீக்ஷா குரு ஸ்ரீ விமல சாகர சுவாமிகள், ஸ்ரீசுதர்ம சாகர் சுவாமி அவர்களைத் தனியே தீர்த்தவந்தனை (நற்கதியடைய நற்றவர், தீர்த்தங்கரர் முதலானோர் நின்று தவம் புரிந்த இடங்களைத் தரிசித்து வணங்குதல்) மேற்கொள்ள அனுமதித்தார். வடநாட்டில் உள்ள பல புண்ணிய தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்து ஸ்ரீ கிர்நார் (ஊர்ஜயந்த கிரி) வந்தடைந்தார். ஆன்ம ஞானம் பெற வேண்டும் என்ற அவரது வேட்கை அவர் 1971 ஆம் ஆண்டு போதனபுரத்தில் (பம்பாய்) நடந்த பஞ்ச கல்யாண பெருவிழாவில் பங்கேற்ற பின்னர் தீவிரமடைந்தது.

## கஜபந்தா :

ஸ்ரீ சுதர்ம சாகர் அவர்கள் தேடி வந்த தனிமையும் தவத்திற்கான சூழலும் மகாராஷ்டிர மாநிலத்தில் நாசிக் அருகில் 8

கி.மீ. தூரத்தில் உள்ள சித்த புனித பூமியான ஸ்ரீ கஜபந்தாவில் இருப்பதை உணர்ந்தார். அங்கேயே ஏழு மாதங்கள் தங்கி இருந்து ஆன்ம ஒளிபெறத் தவமிருந்து வந்தார். அங்கு 450 அடி உயர மலைமீது உள்ள கோயிலில் அமைந்துள்ள ஸ்ரீ பார்சுவநாத தீர்த்தங்கரரை தினம் 360 படிகள் ஏறிச் சென்று தரிசித்து அங்கேயே அமர்ந்து தியானம் செய்து வந்தார். மலையிலிருந்து 1 கி.மீ. தூரத்தில் உள்ள மஸ்ரூல் கஜபந்தா சத்திரத்தில் ஆகாரம் எடுத்து வந்தார். முனிவர்களுக்கே உரிய இலக்கணத்தை மெய்ப்பிக்கும் வகையில் அவர் தரிசனம், ஜபம், தவம் மற்றும் கடின விரதம் என ஆன்ம விடுதலைக்கான வழிகளைக் கடைப்பிடித்து வந்தார். அவரின் சீரிய தவத்தையும், மேற்கொண்ட கடுமையான விரதங்களையும் கண்ட சமண சமயப் பெருமக்கள், அவரை வணங்கி ஆசிர்வாதம் பெற்று, ஆகாரதானம் அளித்துப் போற்றி வந்தனர்.

1973-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 13ஆம் நாள் முதல் மூன்று நாட்களுக்கு ஒருமுறை கஜபந்தா சத்திரம் சென்று ஆகாரம் ஏற்று வந்தார். இரவும் பகலும் மலையில் உள்ள ஆலயத்திலேயே தங்கி இருந்தார்.

மழைக்காலம் துவங்கியதும் முனிவர்க்கு ஆகாரம் அளிக்க கிராம மக்கள் மலைமேல் சென்று ஆகாரம் அளிக்க முன்வந்தனர். சுவாமிகள் மழைக்காலத்தில் சத்திரத்தின் அருகே உள்ள குகை போன்ற ஒரு கட்டிடத்தில் தங்கி இருந்தார்.

**'மௌன விரதம் மென்பது ஞான வரம்பு'** எனும் ஔவை அருளிய வாக்குக்கு ஒப்ப சுவாமிகள் மௌன விரதம் மேற்கொண்டு தியானத்தில் ஈடுபட்டு வந்தார்.

## சல்லேகனை :

மாதவம் புரிந்து ஐம்புலன்களையும் வென்று தன் ஆத்மாவைத் தானே அறியும் ஆற்றலைப் பெற்றவருமான ஸ்ரீ

சுதர்ம சாகர சுவாமிகள் உடலைத் தியாகம் செய்து, உயர் சுகமான முக்தியை அடையச் சமண சமய கோட்பாட்டின்படிச் சல்லேகனை நோன்பு ஏற்க முடிவு செய்தார்.9.8.73 முதல் 23.8.73 வரை பால் ஆகாரம் மூன்று நாட்களுக்கு ஒரு முறையும், அடுத்த 15 நாட்களுக்கு நீர் மட்டும் 3 நாட்களுக்கு ஒரு முறையும், 9.9.73 முதல் ஆகாரம் எதுவும் இல்லாமலும் சல்லேகனையைக் கைக்கொண்டார்.

சுவாமிகள் சல்லேகனை விரதம் ஏற்றுத் தவம் இருந்துவந்தபோது 26.8.73 அன்று சுமார் காலை 11 மணி அளவில் ஒரு நாகப்பாம்பு அவர் முன் படம் எடுத்து ஆடி நின்றது. இது 1.30 மணி நேரம் நீடித்தது. ஸ்ரீ விஜயசாகர் என்ற வடநாட்டு முனிவர் அவரைத் தரிசிக்கச் சென்றபோது அக்காட்சியைக் கண்டார். பலர் அக்காட்சியைக் கண்டு வியந்தனர். அப்போது ஒரு சிறுவன் அந்த நாகத்தின் மீது கல்லை எடுத்து வீசினான். அப்போதும் நகராமல் அங்கேயே இருந்த பாம்பைத் தியானத்தில் ஆழ்ந்திருந்த சுவாமிகள் கண் விழித்துப் பார்த்து, தடியுடன் இருந்தவர்களை விலகிப் போகச் சொன்னார். படம் எடுத்து அங்கேயே அசையாது இருந்த பாம்பை நிழற்படம் பிடித்தனர், ஸ்ரீ விஜய சாகர முனிவர் நாகத்தைப் பார்த்து 'போ' (சலோ) என்று கூறினார். நாகம் அகலவில்லை. அச்சமயம் ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகள் தமது மயில் பிஞ்சத்தை "பாம்பின் தலைமீது வைத்து" **"உன்வேலை முடிந்துவிட்டது நீ போகலாம்"** என்றார். அந்த நாகம் வந்த வழியே சென்று விட்டது.

இவ்வரிய நிகழ்ச்சி படத்துடன் பம்பாய் செய்தித்தாளில் வெளிவந்தது. இச்செய்தி காட்டுத்தீப் போல் பரவ, முனிவரைத் தரிசித்து ஆசிபெற ஆயிரக் கணக்கானோர் ஸ்ரீ கஜபந்தாவில் கூடினர்.

சல்லேகனா விரத தாரிகளான, முனிபுங்கவர்களைத் தரிசிக்கும் பாக்கியம் பெரும் புண்ணியம் என்பதை நன்கு அறிந்த சமயணசமயச் சான்றோர்கள் கஜபந்தாவில் கூடி முனிவரைத்

தரிசித்து பிரார்த்தனையில் ஈடுபட்டனர். அங்கே ஆலயத்தில் உள்ள ஸ்ரீ பார்சுவ நாத தீர்த்தங்கரரின் பிம்பத்தை ஸ்ரீ சுதர்ம சாகர் சுவாமிகள் முன்வைத்து சல்லேகனை நன்கு ஈடேறத் தினம் அபிஷேகம் செய்தனர். ஸ்ரீசுதர்ம சாகர் பற்றிச் சொற்பொழிவுகள் நடைபெற்றன.

ஸ்ரீ சுதர்மசாகரின் மூத்த மகனான திரு. ப. ஆதிராஜ் ஜெயின் அவர்கள் குடும்பத்துடன் கஜபந்தா சென்று தந்தையின் சல்லேகனை விரதக் காட்சியைக் காணும் பேறு பெற்றார்.

1973-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 24-ஆம் நாள் திங்கள் காலை 12 மணிக்கு ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகள் ஸ்ரீபார்சுவ நாத தீர்த்தங்கரருக்கு அபிஷேகம் செய்தார். கந்தோதகத்தை எடுத்துக் கொண்டு படுத்திருந்தவர், தாமே எழுந்து 1.15 மணிக்கு வடக்கு நோக்கி அமர்ந்தார். மாலை 1-23 மணிக்கு அவர் சமாதி மரணமெய்தி அமரத்துவம் அடைந்தார்.

அவரது புண்ணிய உடலைக் கடலெனத் திரண்டு வந்த மக்கள் தரிசித்துச் சென்றனர். அரவது புண்ணிய உடல் தியானமாக அமர்ந்த நிலையில் வைக்கப்பட்டு சந்தனக் கட்டைகள் அடுக்கி எரியூட்ட அனைத்து ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. அந்நிலையில் ஒரு நாகம் அக்கூட்டத்தில் நுழைந்து புண்ணிய உடல் இருந்த இடம் சென்று சிறிது நேரம் இருந்து விலகிச் சென்றது. அங்கு கூடியிருந்த மாவட்டக் காவலர் உட்பட பலரும் அந்த அதிசயக் காட்சியைக் கண்டு வியந்து நின்றனர்.

ஸ்ரீ கஜபந்தா ஆலய நிர்வாகியான ஸ்ரீ ராஜேந்திர குமார் பாட்னி அவர்கள் அன்று மேலும் நடந்த சில அதிசய நிகழ்ச்சிகளை எடுத்துரைத்துள்ளார்.

ஸ்ரீசுதர்ம சாகர சுவாமிகள் வீடுபேறு அடைந்த அன்று பெருமழை பொழிந்தது. ஆனால் முனிவரின் உடல் தகனத்திற்காக வைக்கப்பட்டிருந்த இடம் மட்டும் உலர்ந்து இருந்தது.

புண்ணிய உடலுக்கு எரியூட்டிய பின்னர் சிதைக்குக் காவலாக இருந்த இருவர் இரவு சுமார் 12 மணிக்கு ஓர் அதிசய நிகழ்ச்சியைக் கண்டனர். ஸ்ரீ கஜபந்தா மலையிருந்த மூன்று ஒளிச்சுடர் சிதையை நோக்கி வருவதைக் கண்டனர். சிதையிலிருந்து கிளம்பி ஒரு ஒளி கஜபந்தா மலை நோக்கிச் செல்வதையும் கண்டனர். இது ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளின் தவ மகிமையைக் குறிக்கிறது என்று கூறி அனைவரும் வணங்கி மகிழ்ந்தனர்.

திருப்பறம்பூரில் பிறந்த ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளின் மெய்த்தவத்தைக் கண்டு நாடே பக்திப் பரவசம் கொண்டு அவரை வணங்கிப் போற்றி வருவதைக் கண்டு பெருமை கொண்ட திருப்பறம்பூர் கிராம மக்கள் திருப்பறம்பூரில் ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளுக்கு 1973ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 4ஆம் நாள் அவரின் நினைவாக ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலயத்தில் சிறப்பாகப் பூஜை செய்தும், அவரின் திருவுருவப் படத்தை அலங்கரித்துத் திருவீதி உலா எடுத்தும் சிறப்பாகக் கொண்டாடினர். மேலும் ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரர் ஆலயத்தில் ஒரு மண்டபம் கட்டி அதில் 108 ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளின் திருவடிகளை பதித்து அனைவரும் வழிபட வழிவகை செய்துள்ளனர்.

108 ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளின் வரலாற்றைச் சமண சமயத்தினர் அனைவரும் படித்துப் புண்ணியம் பெற்று நன்மையடைவர் என்பது திண்ணம். மேலும் அவர் காட்டிய அறவழி நின்று வாழ்வதே நாம் அவர் நினைவைப் போற்றும் ஒரே வழியாகும்.



# 108 ஸ்ரீ கஜபதி சாகர் சுவாமிகள்

திரு. ச. கஜபதி ஜெயின் அவர்கள் காஞ்சிபுரம் கூரா.சம்பத்ராவ் நைனார், திருமதி மருதேவி அம்மையார் அவர்களின் தவப் புதல்வராக 1913-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 2-ஆம் நாள் பல மெய்தவத் துறவிகளை ஈன்றெடுத்த புனித பவ்ய பூமியான திருப்பறம்பூரில் பிறந்தார். திரு. கஜபதி ஜெயின் அவர்களின் சகோதரர்கள் திரு. S.A. ஜெயின்,M.A.,LT., மற்றும் திரு. S. தன்யகுமார் ஜெயின்,GDA.,FCA., ஆவர். திரு. தன்யகுமார் அவர்கள் தமிழகத்தின் தலைச்சிறந்த தணிக்கையாளராகவும் (Chartered Accountant) மற்றும் ஜைன இளைஞர் மன்றத் தின் செயல்பாடு களிலும், அதன் வளர்ச்சியிலும் மிகவும் ஈடுபாடு கொண்டவ ராகவும் இருந்தவர் ஆவார். தத்துவ வித்தகர் பேராசிரியர் திரு. S.A. ஜெயின் அவர்கள் சிறந்த ஆங்கிலப் பேராசிரியராக சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பணி யாற்றி (1937-1950), பின்னர் மதுரை



தியாகராஜர் கல்லூரியின் முதல்வராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர் (1968) ஆவார். அவர் 'சர்வார்த்த சித்தி' நூலை மிகச் சிறப்பாக (Reality, S.A. Jain, 1960) ஆங்கிலத்தில் தக்க விளக்கங்களுடன் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார்.

## கல்வி :

திரு. கஜபதி ஜெயின் அவர்கள் காஞ்சிபுரம் பச்சையப்பன் பள்ளியில் ஆரம்பக் கல்வியை முடித்து, சென்னை ப்ரேசர்-ராஸ் (M/s. Fraser and Rose) நிறுவனத்தில் சேர்ந்து தணிக்கை பணியில் பயிற்சி பெற்றார்.

## தொழில் :

தணிக்கைப் பணியில் பயிற்சி பெற்ற அவர், நீலகிரியில் உள்ள தேயிலைக் கட்டுப்பாட்டாளர் அலுவலகத்தில் (Office of the Asst. Tea Controller for S.India) சிலகாலம் தலைமை எழுத்தராகப் பணியாற்றினார். பின்னர் அவரது அண்ணன், திரு S. தன்யகுமார் அவர்களின் தணிக்கை நிறுவனத்தில் இரண்டு ஆண்டுகள் பணியாற்றினார்.

தனது வாழ்க்கையை ஒரு தணிக்கையாளராக துவங்கியவர், தனது நேர்மையான உழைப்பால் சொந்தமாக ஒரு மூக்குக்கண்ணாடிக் கடையை (Gajapathy Jain & Co Opticians, Chennai-1) 1947-ஆம் ஆண்டு துவங்கினார். தனது கண்ணாடிக் கடைக்குத் தேவையான நவீன இயந்திரங்களை அமெரிக்காவில் இருந்து இறக்குமதி செய்து தனது நிறுவனத்தை ஒரு முதன்மையான நிறுவனமாக்கிக் கண் மருத்துவர்களின் பாராட்டுதல்களைப் பெற்றார். அவரை நாடி வரும் அனைவருக்கும் தக்க ஆலோசனைகள் நல்கி, முடிந்த அளவு உதவியும் செய்து தனது நிறுவனத்தைச் சிறப்புடன் நடத்தினார். தான் ஈடுபட்ட பணியில் சிறந்து விளங்க, தக்க நூல்களைப் பயின்றும், தொழில் நுட்பத்திற்கான பயிற்சிகள் மேற்கொண்டும், மேலை நாட்டவரும் வியக்கும் வண்ணம் தனது நிறுவனத்தைச் சிறப்புற நடத்தி வந்தார். 19 ஆண்டுகள் தனது நிறுவனத்தைக் கண்போல் காத்து அனைவரும் தேடிவரும் ஒரு புகழ்மிக்க நிறுவனமாக மாற்றினார்.

## ஆன்மீக ஈடுபாடு :

வணிக நிறுவனத்தை மிக்க ஈடுபாடுடன் நடத்தி வந்தாலும் அவரது மனம் ஞான ஒளி பெறும் பாதையை நோக்கியே சென்றது. எனவே சமண சமயத் தத்துவ நூல்களை ஐயம் திரிபறக்கற்று அறிந்து, தெளிவு பெறும் முயற்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார்.

அவருடைய மூக்குக் கண்ணாடிக் கடைக்கு வருவோர் பலரும் அறிவியல் மற்றும் தத்துவம் அறிந்த சான்றோர்களாக இருந்தனர். திரு. ஜீவபந்து ஸ்ரீபால், பேரறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி, திரு. ஊ. ஜயராமன் (தத்துவப் பேராசிரியர் ராவ் பகதூர் ஆ. சக்கரவர்த்தி நைனார் அவர்களின் திருக்குறள் ஆங்கில மொழி பெயர்ப்பின் சிறப்பான முன்னுரையைத் தமிழ்ப்படுத்தி "திருக்குறள் வழங்கும் செய்தி" என்ற தலைப்பில் புத்தகமாக வெளியிட்டவர்) மற்றும் திரு. பரதசக்கரவர்த்தி ஜெயின் சாஸ்திரி ஆகியோருடன் அளவளாவி, அறிவின்பமும், அருளின்பமும் பெறும் வாய்ப்பைப் பெற்றார். சமண சமயத் தத்துவங்களைக் கற்று அறிய வேண்டும் என்ற அவாவினால் தமிழ், இந்தி. வடமொழி ஆகிய மொழிகளில் வெளிவந்த தத்துவநூல்களை. வாங்கி தனியாக ஓர் நூலகத்தை அமைத்துக் கொண்டார். இச்செயல் அவருக்கு சமணத் தத்துவங்களை ஆய்ந்து அறியும் வாய்ப்பை மேலும் வளர்த்தது.

## சிரவண பெளிகுளப் பயணம் :

**சோறுயாரும் உண்ணாரோ! சொல்லியாரும் சொல்லாரோ**
**ஏறியாரும் வையத்துள் ஏறாரோ - தேறி**
**உரியதோர் ஞானம் கற்று உள்ளம் திருத்தி**
**அரிய துணிவதாம் மாண்பு.**

என்ற 'அறநெறிச்சார'க் (186) கூற்றுக்கு ஒப்ப, கற்பதற்குரிய மெய் ஞான நூல்களைக் கற்றுத் தெளிவடைய வேண்டும் என்ற உந்துதலால் 19 ஆண்டுகள் கட்டிக் காத்த தனது கண்ணாடிக் கடையை வேறு ஒருவருக்கு விற்று விட்டு தனது துணைவியாருடன் சிரவண பெளிகுளம் சென்று சமணத் தத்துவங்களைக் கற்று, ஒப்புமைப்படுத்தி, ஆராய்ந்து ஆன்மீகப் பயிற்சி பெற்றார். அவரின் ஆன்மீகத்தேடுதலுக்கு மொழி ஒரு தடையாக இல்லை.

## திகம்பர் ஜெயின் உதாசின் ஆசிரமம் :

பின்னர் வடக்கு நோக்கித் தனது துணைவியாருடன் பயணம் மேற்கொண்டார். பீகார் மாநிலத்திலுள்ள இஸ்ரிபஜார் (Isribazzar) என்னும் இடத்தில் அமைந்துள்ள **"சாந்திநிகேதன் திகம்பர் ஜெயின் உதாசீன் ஆசிரம"**த்தில் ஒன்றரை ஆண்டுகள் தங்கி ஆன்மீக தத்துவ மற்றும் அறிவியல் நூல்களைப் பயிலத் துவங்கினார். அந்த ஆசிரமத்தில் அமைந்துள்ள நூலகம் 2000க்கும் மேற்பட்ட ஆங்கிலம், இந்தி, வடமொழி நூல்களைக் கொண்ட அரியதொரு நூலகமாகும். அந்நூலகத்தில் உள்ள நூல்களை வரிசைப்படுத்தி பட்டியல் தயாரிக்கும் பொறுப்பை ஏற்று மிகச் செம்மையாக செய்து முடித்து, அனைவரின் பாராட்டுதலையும் போற்றுதலையும் பெற்றார். இந்த வாய்ப்பை நன்கு பயன்படுத்தி பல மூல நூல்களையும், மற்றும் வேற்று மொழிகளையும் கற்று அறிந்து பன்மொழி வித்தகர் ஆனார். ஆங்கிலம், தமிழ், வடமொழி, பிராகிருதம், கன்னடம், இந்தி ஆகிய பன்மொழிகளில் புலமையுடையவரானார். மூலசாரம், ஜினேந்திர கோஷ், சமயசாரம், சமணஸுத்தம், Reality ஆகிய நூல்களையும் மற்றும் பல சமண சமய தத்துவ நூல்களையும், அறிவியல் நூல்களையும் (Biology, Physics) ஐயம் திரிபறக்கற்று அறிந்து, அவற்றின் வழி நடக்கவும் துணிந்தார். இது பிற்காலத்தில் சமணத் தத்துவங்கள், அறிவியல் அடிப்படையில் அமைந்துள்ளன என்பதை விளக்கி, உரைஆற்றவும், ஆய்வுக் கட்டுரைகள் எழுதவும் ஏதுவாக அமைந்தது.

## பிரம்மசர்யம் :

ஜின ஆகமங்களையும், சமண சமயத் தத்துவங்களையும், தான்கற்று அறிந்ததோடு நில்லாமல், தனது துணைவியார் திருமதி சுந்தரி அம்மையார் அவர்களுக்கும் விளக்கி வந்தார்.

**"போகமும் பொருளும் எல்லாம் மேகமும் திரையும் போலும்;
சோகமும் துயரு மாக்கும் தொடுகடற் சுற்ற மாகும்
நாகமும் நிலமும் பெற்றால் நாலைந்து நாளில் வேறாம்;
யோகியாய் வினைய வெல்வன் இறைவஎன் றுரைசெய் தானே."**

என்ற 'மேருமந்தர'க் கூற்றும் (728) அவர் கற்றுணர்ந்து பெற்ற ஞானமும் உந்த, இஸ்ரி பஜாரில் (ஸ்ரீ பார்சுவ நாதர் ரயில் நிலையம்) இருவரும் பிரம்மச்சர்ய விரதத்தை ஏற்றனர். இதுவே அவரின் துறவு எண்ணத்தை உறுதிப்படுதுவதற்கான முதல் படியாக அமைந்தது.

பின்னர் மீண்டும் சிரவணபெளிகுளம் சென்று, தன்னை ஆன்மீகப் பாதையில் மேலும் ஈடுபடுத்திக் கொள்ள, அங்குள்ள ஜைன மடத்தில் ஏழு ஆண்டுகள் தங்கி இருந்தார். தனது சொந்த செலவிலேயே துணைவியாருடன் அங்கேயே தங்கி இருந்து சமண சமயச் சான்றோர்களுடன் கலந்துரையாடியும், ஜைன மடத்தில் உள்ள நூல்களைக் பயின்றும் தனது துறவு வாழ்க்கை மலர தன் ஆன்ம பலத்தைச் செம்மைப் படுத்திக் கொண்டார்.

அவரது கடுமையான உழைப்பையும், தத்துவ ஞானத்தையும் கண்ட ஸ்ரீ சிரவண பெளிகுள பட்டாரக பீடாதிபதி ஸ்ரீ சாருகீர்த்தி பண்டிதராசார்யவர்ய மகாசுவாமி அவர்கள் ஆஸ்ரமத்தின் நூல் நிலையத்தில் உள்ள கன்னடம், ஆங்கிலம், இந்தி தத்துவ நூல்களை வரிசைப்படுத்தி பட்டியலிட்டுச் சீர் செய்யும் பணியை, திரு. கஜபதி ஜெயின் அவர்களிடம் ஒப்படைத்தார். மடாதிபதி அவர்கள் இட்ட பணியை மிகச் சிறப்பாகச் செய்து அவரின் பாராட்டுதலையும், நன்மதிப்பையும் பெற்றார்.

அவர் சிரவணபெளிகுளத்தில் தங்கியிருந்த நாட்களில் முனைவர் திரு. வசந்தராஜ், திரு. ஜினசந்திர சாஸ்திரி போன்ற தத்துவ அறிஞர்களுடன் கலந்துரையாடியும், துறவியர் பலரைச் தரிசித்தும், அவர்தம் அறவுரைகளைக் கேட்டும் தனது ஆன்ம

வலிமையினை மேம்படுத்திக் கொண்டார். திரு. கஜபதி ஜெயின் அவர்கள் ஆச்சார்யர் குந்தகுந்தர் பற்றிய கருத்துக்களை எடுத்துரைத்த போது, முனைவர் திரு. வசந்தராஜ் அவர்கள் திரு. கஜபதி ஜெயின் அவர்களின் ஆழ்ந்த தெளிவான புலமையைக் கண்டு வியந்து பாராட்டினார்.

மேலும் அவர் வடநாட்டில் உள்ள பல சமண சமய ஆலயங்களுக்கும் ஆஸ்ரமங்களுக்கும் சென்று அங்கு உள்ள தத்துவ வல்லுநர்களுடன் கலந்துரையாடியும், அவர்களின் அறிவுரையைக் கேட்டும் தனது தத்துவ ஞானத்தை மென்மேலும் வளர்த்துக் கொண்டார்.

## தத்துவமேதை :

தான் கற்று அறிந்த தத்துவங்களையும், ஆகமங்களையும், இலக்கியங்களையும், பாமரர்களும் எளிதில் அறியும் வண்ணம் கட்டுரைகள் மூலமாகவும், அறவுரைகள் மூலமாகவும், எளிமையாகவும், தெளிவாகவும் எடுத்துரைத்தார். தத்துவ அறிஞர்களும் வியந்து பாராட்டும் வண்ணம் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதியும், ஆய்வு அரங்கங்களில் உரையாற்றியும் பங்கேற்றும் பல சான்றோர்களின் பாராட்டுதல்களைப் பெற்றார்.

மைசூர் பல்கலைக் கழக சமண இயல் துறையிலும், சென்னைப் பல்கலைக் கழக சமண இயல் துறையிலும் அவர் ஆற்றிய அறச்சொற்பொழிவுகள், தத்தவஇயல் வல்லுனர்களின் கவனத்தை மிகவும் ஈர்த்தது.

ஆன்மிக விடுதலைக்கான அறிவியல் சமணம் (Jainism is the Science of liberation) என்ற தலைப்பில் அவர் ஆற்றிய சொற்பொழிவு மைசூர் பல்கலைக்கழக சமணவியல் துறைத்தலைவர்களாக இருந்த பேரா. Dr. A.N. உபாத்யாயே, பேரா T.G. கல்கத்தே (Dr.T.G. Kalghathi) மற்றும் திரு. Dr.M.D.

வசந்தராஜ் ஆகியோரால் மிகவும் பாராட்டப்பட்டது. அவரது சமணத் தத்துவக் கட்டுரையை **"பகவான் மாகவீரரின் 2500 நிர்வான மகா உத்சவ சமிதி"** வெளியிட்டு அவரை ஒரு சிறந்த சமண சமய அறிஞராக அங்கீகரித்தது.

A mechanistic view of the Jain Omniscience (Klvala Gnana) கட்டுரையும், 'Key principles of jainism' என்ற கட்டுரையும் 1969-ஆம் ஆண்டு ஜூலை -அக்டோபர் மற்றும் 1973-ஆம்ஆண்டு ஜூலை - 'ஜெயின் ஜர்னல்' ஆங்கில காலாண்டு இதழில் வெளியிடப்பட்டன. அவர் Subject - Object - Relationship in Omniscience பற்றி மிக்க ஈடுபாட்டுடன் பல ஆண்டுகள் ஆய்வு செய்து. ஒரு ஆய்வுக்கட்டுரை எழுதினார். அக்கட்டுரையை சமண சமய தேராபந்தி பிரிவு ஆச்சாரிய துளசி அவர்களின் முயற்சியால் துவங்கப்பட்ட **'ஜைன் விஸ்வபாரதி நிகர்நிலைப் பல்கலைக் கழகம்'** 1987-ஆம் ஆண்டு வெளியிட்டது. அக்கட்டுரை பல தத்துவ ஞானிகளின் கவனத்தை மிகவும் ஈர்த்தது.

திரு. கஜபதி ஜெயின் அவர்கள் "சமண தத்துவங்களை மிகவும் தெளிவாகப் புரிந்து கொண்டவராகவும், எளிய முறையில் விளக்கி எழுதும் ஆற்றல் உடையவராகவும் உள்ளார்" என Dr.A.N உபாத்யாயே (மைசூர் பல்கலைக் கழக சமண இயல் பேராசிரியர்) குறிப்பிட்டுள்ளார்.

திரு. கஜபதி ஜெயின் அவர்கள் 1974 ஆம் ஆண்டு முதல் 1987-ஆம் ஆண்டு வரை பல சமணசமயத் தத்துவங்களை விளக்கும் கட்டுரைகளை "நல்லறம்", "முக்குடை", "அருகன் தத்துவம்", முதலிய மாத இதழ்களில் எழுதியுள்ளார்.

**"உள்பொருள் இதுவென உணர்தல் ஞானமாம்**
**தெள்ளிதின் இப்பொருள் தெளிதல் காட்சியாம்**
**விள்ளற இருமையும் விளங்கத் தன்னுளே**
**ஒள்ளிதிற் திரித்தலை ஒழுக்கம் என்பவே."**

என நற்காட்சி, நல்ஞானம், நல்ஒழுக்கம் என்ற சமண தத்துவத்தின் மேன்மையை சீவகசிந்தாமணி விளக்கும் அறநெறியை நன்குணர்ந்து, பலருக்கும் எடுத்துக் கூறி விளக்கி, வழிகாட்டி வாழ்ந்த திரு. கஜபதி ஜெயின் அவர்களை அனைவரும் **"தத்துவமேதை"** எனப் போற்றிப் புகழ்ந்து பாராட்டி மகிழ்ந்தனர்.

திரு. திருப்பறம்பூர் கஜபதி ஜெயின் அவர்கள் தனது துணைவியாருடன் வட இந்திய தீர்த்தயாத்திரையையும், சமண தத்துவ ஆய்வையும் முடித்துக் கொண்டு 1974-ஆம் ஆண்டு தனது ஜன்மபூமியான திருப்பறம்பூர் வந்தடைந்தார். திருப்பறம்பூரில் அவர் தங்கியிருந்த 14 ஆண்டுகளும் அறச்சொற்பொழிவு ஆற்றுவதிலும், தத்துவ நூல்கள் எழுதுவதிலும், ஆய்வுக் கட்டுரைகள் எழுதி மாத இதழ்களில் வெளியிடுவதிலும் ஒரு தவத்தோர்க்கே உரிய வாழ்க்கை முறையைக் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தார்.

திருப்பறம்பூர் ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரர் கோயிலில் உள்ள ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் நூல் நிலையம், அவரின் ஆய்வுக்கூடமாக அமைந்தது. நூல் நிலையத்தில் உள்ள "பன்மொழி நூல்கள், சுவடிகள், அனைத்தையும் முழுமையாக பயன்படுத்தியது மட்டுமின்றி, நூல்களுக்கான இருப்பு ஏடுகளை மொழி வாரியாக எழுதி நூல் நிலையத்தை சீரமைத்தார்." மேருமந்தரம், திருநூற்றந்தாதி, திருக்கலம்பகம், திருக்குறள், சீவக சிந்தாமணி போன்ற சமணத் தமிழ் இலக்கியங்களை நன்கு ஆழ்ந்து படித்து அக்கருத்துக்களை உலகத்துக்கு எடுத்துரைப்பதையே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். அந்த நூல் நிலையத்தில் பண்டித தெளலத் ராம் அவர்கள் படைத்த பழைய இந்தி உரைநடை "பத்மபுராணத்"தை ''ஸ்ரீ பத்மபுராணம்'' ஆசிரியர் தச்சூர் டாக்டர் T.S. மாணிக்க சாஸ்திரியார் கண்டெடுத்தார். அந்நூலின் மேன்மையையும், அதை தமிழக சமண சமயத்தினர் படித்து அறிய வேண்டியதன் அவசியத்தையும் நன்கு உணர்ந்து அந்நூலை **"ஜைன ராமாயணம்"** என்ற

தலைப்பில் மொழி பெயர்த்து “ஜைன இளைஞர் மன்றம்” மூலம் வெளியிட்டார். இந்நூல் மன்றத்தினரால் 2002 ஆம் ஆண்டு மறுபதிப்பாக நற்காட்சி வெள்ளிவிழா ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது போற்றுதற்கு உரியதாகும்.

1988 ஆம் ஆண்டு”ஜைன இளைஞர் மன்றம்” திரு. கஜபதி ஜெயின் அவர்களின் ஆங்கில ஆய்வுக் கட்டுரைகளை தொகுத்து “Glimpses of Jaina Philosophy” என்ற நூலை வெளியிட்டு சிறப்பு செய்தது.

**மொழிப் பெயர்ப்பின் நோக்கம் :**

*இராம சரித்திரம் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் முழுதுணர் ஞானி வர்த்தமான மகாவீரரால் வெளியிடப்பட்டதாகும். வாய்மொழி இலக்கியமாகத் திகழ்ந்த வரலாற்றையே* ***இரவிசேனர்*** *ஏழாம் நூற்றாண்டில், இராமரது மற்றொரு பெயரான, பத்ம பலதேவர் எனும் பெயரோடு புணர்த்தி* ***“பத்ம புராணம்”*** *எனும் பெயரால் வடமொழியில் பெரும்காப்பியமாக இயற்றினார். கி.பி. 1966-ல் பண்டிதர்* ***தௌலத்ராம் காசிலீவால்*** *வடமொழி பத்ம புராணத்தைப் பழைய இந்தி மொழியில் உரைநடையில் எழுதினார்.*

*- கஜபதி ஜெயின்*
*ஜைன ராமாயணம்*
*(1979) முன்னுரை.ப.IX*

தத்துவமேதை திரு. கஜபதி ஜெயின் அவர்களின் தத்துவ அறவுரையைக் கேட்கவும், தத்துவம் பற்றி அவரிடம் பேசவும், விவாதிக்கவும், தெளிவு பெறவும், புலவர் சிவ. ஆதிநாதன் (**ஸ்ரீ சாகர் சுவாமிகள்**) புலவர் திரு. ஜெ. பானுராஜன், திரு. வி.சி. ஸ்ரீபால், ஆத்மபந்து திரு. தி. பரதசக்ரவர்த்தி சாஸ்திரியார் போன்ற பல

சான்றோர்கள் திருப்பறம்பூர் சென்று வந்தனர். திரு. எஸ். பாகுபலி ஜெயின் அவர்கள் குறிப்பிட்டுள்ளதுபோல் திருப்பறம்பையில் அவர் தங்கியிருந்த பதினான்கு ஆண்டுகளும், **"திருப்பறம்பூர் வரலாற்றில் பொன்னெழுத்தால் பொறிக்கப்பட வேண்டியவை"** ஆகும்.

திரு. கஜபதி ஜெயின் அவர்கள் தான் ஈடுபடும் அனைத்து செயல்களிலும் தனது துணைவியார் திருமதி. சுந்தரி அம்மையாரை உற்ற துணையாகக் கொண்டே செயல்பட்டார். தான் அறிந்த ஆகமக் கருத்துக்களை எல்லாம் தன் துணைவியாருக்கும் விளக்கி வந்தார்.

**வினைகாத்து வந்த விருந்துஓம்பி நின்றான்**
**மனைவாழ்க்கை நன்று தவத்தின் - புனை கோதை**
**மெல்லியல் நல்லாளும் நல்லள் விருந்துஓம்பிச்**
**சொல்எதிர் சொல்லாள் எனில்.**

திருமதி. சுந்தரி அம்மையார் இந்த 'அறநெறிச்சாரப் பாடலுக்கு ஒப்ப (157) மனைத்தக்க மாண்புடைய வாழ்க்கைத் துணைவியாய் வாழ்ந்தார். அவர் தனது கணவர் திரு. கஜபதி ஜெயின் அவர்களின் கருத்திற்கு இசைவாக அவரின் இறுதி மூச்சுவரை உற்ற துணையாக நின்று மங்கையர்க்கோர் எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்தார்.

**சல்லேகனை**

**"ஐந்தாய ஐம்புலன்கள் ஈந்து ஆனந்தபவம்**
**உய்ந்தீங் கொருபவந்தான் உன்தனக்கு - வந்தீங்கு**
**அனந்தசுகம் எய்துநெறி ஆருயிரே யானீங்கு**
**உணர்ந்துரைப்பன் கேளாய்நீ உற்று."**

*("ஐம்புலன்களின் ஆசையால் நாம் பெற்ற பிறவிகள் எண்ணில் அடங்கா. ஆருயிரே! இந்த ஒரு பிறவியைப் பயன்படுத்தி, பெருந்தவத்தினில் மூழ்கி முடிவற்ற பேரின்ப நிலையை எய்த வேண்டும்." வங்கை ஜெ. அப்பாண்டைராசன். சீவ சம்போதனை உரை. ப.87)*

என்ற **'சீவ சம்போதனை'**யின் (221) பாடலுக்கு ஒப்ப தத்துவமேதை திரு. கஜபதி ஜெயின் அவர்கள் தான் பேரின்பநிலையை அடைய தக்க தருணம் வந்தது என்பதை உணர்ந்தார். தனது எழுபத்தைந்தாவது வயதில் மனத்திண்மையால் மரணத்தை வெல்லும் மாபெரும் தவமான "சல்லேகனை"யை 11.10.88 முதல் மேற்கொண்டார்.

அறநூல்களில் உள்ள வழிமுறைகளை முழுமையாகக் கடைப்பிடித்து தனது ஆன்ம விடுதலைப் பயணத்தை முதலில் **கசாய சல்லேகனை**யுடன் துவங்கினார். (மனதளவில் ஆன்ம தியானம் தவிர்த்து வேறு எதையும் எண்ணாமை) கசாய சல்லேகனை காலங்களில் மிகவும் தெளிவுடன் இருந்து சான்றோர்களிடம் தத்துவ விளக்கங்களைக் கூறுவதிலும், ஆன்மீக தியானத்திலும் ஈடுபட்டிருந்தார்.

கசாய சல்லேகனைக் காலத்தில் திட உணவைத் தவிர்த்து, நீர் அல்லது பால் மட்டுமே பருகி வந்தார்.

20.11.88 அன்று அவரை சந்தித்து உரையாட வந்த திரு. டாக்டர் ஜேம்ஸ் ரயன் (Co-ordinator, Philosophy and Religion Programme, California Institute of Integral Studies, San Francisco, USA) அவர்களிடம் நீண்ட நேரம் கலந்துரையாடி, சீவக சிந்தாமணி பற்றிய அவரின் கேள்விகளுக்குத் தக்க விடை அளித்தார். திரு. டாக்டர் ஜெம்ஸ் ரயன் அவர்கள் தமக்குப் பல

வருடங்களாகத் தெளிவு கிடைக்காத கருத்துக்களுக்கு தெளிவு கிடைத்ததாகத் தெரிவித்தார். திரு. டாக்டர் ஜேம்ஸ் ரயன் அவர்கள் சீவகசிந்தாமணியை ஆங்கிலத்தில் மொழிப்பெயர்த்து முனைவர் பட்டம் பெற்றவர் ஆவார். அந்த சந்திப்புக்குப் பின் ஜேம்ஸ் ரயன் அவர்கள் திரு. கஜபதி அவர்களை **"பவ்யஜீவன்"** என்று குறிப்பிட்டார்.

24.10.88 அன்று கசாய சல்லேகனையைத் தொடர்ந்து காய **சல்லேகனை** மேற்கொண்டார். (உடல் தியாகம் - திரவ உணவையும் தவிர்த்தல்) உண்டி சுருக்கி உள் ஒளி பெருக்கும் ஆன்மீக தவத்தில் தன்னை உட்படுத்திக் கொண்டார். சுய ஆத்ம தியானத்தில் ஆழ்ந்துள்ள அவரைக் கண்டு ஆசிபெற சமண சமுதாயமே அங்கு கூடியது.

1988-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31ஆம் நாள் காலை திரு. கஜபதி ஜெயின் அவர்கள்.

"நான் முனி தீட்சை எடுக்கிறேன்."

நான் 'சுதர்ம சாகர்' போல் ஆகப் போகிறேன்."

இனி "கஜபதி சாகர்" என்பதே என் பெயர் என்று திடமாகவும் தெளிவுடனும் அறிவித்தார். முனிதீட்சை ஏற்கும் நிகழ்ச்சியில் திரு. சிவ அதிநாதன் (ஸ்ரீ சாகர சுவாமிகள்) அவர்கள் அறநூல்களில் உள்ள முறைகளைச் சுட்டிக் காட்ட, சமண சமயச் சான்றோர்கள் திரண்டிருக்க திரு. கஜபதி ஜெயின் அவர்கள் நிர்கந்த முனி 108 **ஸ்ரீ கஜபதி சாகர் ஆனார்.**

தாமரை இலை நீர் போன்று பற்றற்று இல்லறத்தில் ஈடுபட்டு கடமைகளை முடித்து இல்லற வழி நின்று, பின்னர் துறவறம் ஏற்று வீடுபேறு அடைவதே சிறந்தது என்று தொல்காப்பியம் காஞ்சித்திணையில் உணர்த்தியுள்ளது (தொல்காப்பியம், சூத்திரம் 51)

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஓமரு சான்ற மக்களோடு துவன்றி
அறம் புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.

இத்தகு அறத்தைப் பின்பற்றி 3-11-88 அன்று வீடுபேறு அடைந்தவர் 108 ஸ்ரீ கஜபதி சாகர சுவாமிகள் ஆவார்.

அவரது நினைவைப் போற்றும் வகையில் திருப்பறம்பூர் ஸ்ரீ புஷ்பதந்தர் ஜினாலயத்தில் இவரது திருவடிகள் பீடங்களில் நிறுவப்பட்டுள்ளன.

சிறப்பீனும் செல்வமும் ஈனும்; அறத்தினூங்(கு)
ஆக்கம் எவனோ உயிர்க்கு - திருக்குறள் 31

உயிர்க்கு ஆக்கம் தருவதும், சிறப்பு தருவதும் அறமே என்ற உண்மையை நமக்கு உணர்த்தி, மெய்த்தவம் இருந்து நற்புகழ் எய்திய 108 ஸ்ரீ கஜபதி சாகர் வழிநின்று நடப்பதே நமது கடமையாகும்.



## சல்லேகனை விதி

ஸ்நேஹம் வைரம் சங்கம் பரிக்ருகம்
சாபஹாய சுத்தம நா :
ஸ்வஜநம் பரிஜந்மபி ச க்ஷாந்த்வா
க்ஷமயேத் ப்ரயை; வசனை.

ரத்னகரண்டக ஸ்ராவகாசாரம்

சல்லேகனை ஏற்று சமாதி மரணம் அடைபவர்கள் மகன், மனைவி, நண்பர் முதலியவர்கள்பால் உள்ள அன்பையும், விரோதிகள்பால் உள்ள வைர பரிணாமத்தையும் வீடு, செல்வம் முதலிய உயிரற்ற பொருள்கள்மேல் உள்ள பற்றையும், எல்லா உடமைகளை (அகம், புறம்)யும் விட்டு சமத்துவ மனம் கொண்டு அன்பு வார்த்தைகளைப் பேசித் தம் குடும்பத்தாரையும், ஏவலாளரையும் மற்றும் அனைவரையும் சமாதானப்படுத்தி, அவர்கள் பால் உள்ள விரோதங்களை மறந்து மன்னிப்புத் தன்மையுடன் இருத்தல் வேண்டும்.

தமிழாக்கம் :
திரு. சிம்ம சந்திர சாஸ்திரி
முக்குடை - திசம்பர், 1988

## IDEAL DEATH OF SRI GAJAPATHI JAIN
## H.H. Charukeerthy Bhattarak Swamiji
## Sharvanabelagola

*On 11th October 1988 Sri Gajapathi Jain "Took to Sallhekhana stoppage of food and control of passions - complete fasting. Four days earlier to his death he removed all his clothes and become a Digamber Muni, people called him Munishri Gajapathi Sagarji Maharaj.*

*"On 3rd Nov. 1988 at about 11 p.m. he left his mortal body with calm and quietness and attained tranquality.This kind of death is not an ordinary death. It is Samathi Marana, in which there is neither fear of death nor desire to be born. This kind of death is not to get comfortable and luxious next birth, but to get freedom from the cycle of births and deaths, and to remain in bliss and immortality.*

- முக்குடை திசம்பர் 1988

**அறம் பரப்பிய ஆசாரியர்கள்**

**தத்துவமேதை கஜபதி ஜெயின்**

**ப. 34-35**

*'சமண' என்ற பாகதச் சொல் தமிழில் சமணம் என்று வழங்குகிறது. வடமொழியில் 'ஸ்ரமண' என்று வழங்குகிறது. 'ஸ்ரம' என்ற சொல்லுக்கு நோற்றல் - முயலுதல் என்று பொருள். வீடு பேறடைய உற்ற நோய் நோற்றலை அது குறிக்கிறது.*

***ஸமஸத்து பந்துவக்கோ ஸமஸுஹா***
***துக்கோ பஸம்ஸ - ணிந்த ஸ்மோ***
***ஸமலோட்ட கஞ்சணோ புண ஜீவிய***
***மரணே ஸமோ ஸமணோ***

*'யார் பகைவர் உறவினர்களிடையே நடுநிலைமை போற்றுகிறாரோ, இன்ப துன்பங்களில் பொது நோக்கு காட்டுகிறாரோ, புகழ்ச்சி இகழ்ச்சிகளில் வேற்றுமை இன்மை பாராட்டுகிறாரோ, இரும்பையும் பொன்னையும் ஒன்றாகக் கருதுகிறாரோ, வாழ்வையும் இறப்பையும் ஒன்றுபோல் ஏற்கிறாரோ அவரே சமணர் ஆவார்.*



## ஸ்ரீ சந்திர சாகர் சுவாமிகள்

இம்மண்ணில் தோன்றி, பிறவியை நீக்கி வீடுபேறு பெறுவதையே நோக்கமாகக் கொண்டு, இல்லற வாழ்க்கையைத் துறந்து துறவு வாழ்க்கை மேற்கொண்டு ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கிச் சல்லேகனை விரதம் பூண்டு இயற்கை எய்தியோர் பலர். பண்டை வரலாற்றுச் சிறப்பு மிக்க திருத்தலமான திருப்பறம்பூரில் இத்தகு மெய்தவத்துறவிகள் பலர் தோன்றி நல்லறம் பரப்பி வாழ்ந்துள்ளனர். ஆனால் அவர்கள் பற்றிய வரலாற்றை நாம் அறிந்து கொள்ள முடியாமல் போனது பேரிழப்பேயாகும்.

திருப்பறம்பூரில் பிறந்த திரு. மே. புஷ்பநாத நயினார் என்பவர் சிலகாலம் திருப்பறம்பூர் ஸ்ரீ தர்மசாகர சுவாமிகள் நூல் நிலையத்தைப் பாதுகாத்து வந்தவர் ஆவார். அவர் துறவுபூண்டு ஸ்ரீ சந்திரசாகர் என்றபெயரோடு வடநாட்டிலுள்ள ஆலயங்கள் சென்று தரிசித்து பலமொழிகளையும் கற்றுச் சாத்திரங்கள் அறிந்த விற்பன்னராகத் திகழ்ந்திருந்தார். பின்னர் தான்பிறந்த திருப்பறம்பூர் வந்தடைந்தார். திருப்பறம்பூர் புஷ்பதந்தர் ஆலய கோபுரத் திருப்பணியில் ஈடுபட்டு அவ்வேலையைச் செவ்வனே செய்து முடித்துள்ளார். பின்னர் வடநாடு சென்று ஸ்தவநிதி என்ற புண்ணியபூமியில் வீடுபேறு அடைந்தார்.

இவரது வாழ்க்கை வரலாற்றை முழுமையாக அறிய முடியவில்லை. இவரது தந்தையார் திருப்பறம்பூர் திரு. அப்பாசாமிநயினார். இவரது சகோதரர்கள் திரு. எம்.ஏ. அய்யநயினார் மற்றும் திரு. ஏ. ராமசாமி நயினார் ஆகியோர் ஆவர். இத்தகவல்களை கொடுத்து உதவியவர் திரு. ஸ்ரீவிஜயபாலன் அவர்கள் ஆவார்.

## 4. புகழ்மிக்க சான்றோர்கள் :

## ஆதிகர்த்தா திரு. தி. ஆதிநயினார்

ஆதிகாலம் தொட்டு சமணப் பெருங்குடியினர் பெரும் செல்வாக்குடன் வாழ்ந்த திவ்ய பூமியான திருப்பறம்பூரில் திரு. அய்ய நயினார். திருமதி கனகமாலை தம்பதியரின் தவப்புதல்வராய் திரு. தி. ஆதி நயினார் அவர்கள் 1868 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் பிறந்தார்.



### கல்வி :

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை (400)

என்ற குறளுக்கேற்பத் திரு. தி. ஆதி நயினார் அவர்களின் பெற்றோர் கல்வியின் மேன்மையை உணர்ந்து அவருக்கு

முறையான கல்வி வழங்கி ஆவன செய்தனர். எட்டாம் வகுப்பு வரை படித்த அவர் தமிழ், ஆங்கிலம், இந்தி, கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். தத்துவ நூல்களைப் பயில வேண்டும் என்ற உணர்வாலும் ஆர்வத்தாலும் அவர் சமண சமயத் தத்துவ மற்றும் இலக்கிய நூல்களை ஐயந்திரிபின்றிக் கற்று அறிந்தார். அதுவே அவர் பின்னர் பதிப்புத் துறையிலும், சமண தத்துவ இலக்கிய நூல்கள் வெளியீட்டுத் துறையிலும் சிறப்பாகச் செயல்பட அடித்தளமாக அமைந்தது. மேலும் அவர் சீவக சிந்தாமணிப் பாடல்களை இசையுடன் இனிமையாக பாடும் திறன் பெற்றிருந்தார்.

## வணிகமும், வாய்ப்பும் :

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு (231)

என்ற குறளின் நெறி தவறாமல், நற்காட்சி, நல்ஞானம், நல் ஒழுக்கம் எனும் மும்மணிகள் வழி நின்று வாழ்ந்த திரு. தி. ஆதி நயினார் அவர்கள் திருப்பறம்பூரில் இருந்து சென்னை சென்று எலுமிச்சம்பழ மொத்த வணிகத்தில் ஈடுபட்டு ஈட்டிய செல்வத்தை சமுதாய நலனுக்காகவும், தான் நன்கு அறிந்த ஆன்மீக நெறியை மக்களிடையே பரப்பவும், செலவு செய்தார். தான் ஈடுபட்ட வியாபார நிமித்தமாகவும், சமண சமய புண்ய க்ஷேத்திரங்களை தரிசிக்க வேண்டியும், வடநாடு மற்றும் கர்நாடகா மாநிலம் முழுவதும் பயணம் மேற்கொண்டு அங்கு உள்ள அருகன் கோட்டங்கள் சென்று வழிபட்டு வந்தார். மேலும் அங்கு அவர் பல சமண சமயச் சான்றோர்களையும், மடாதிபதிகளையும் சந்தித்து, கலந்துரையாடி அவர்களின் ஆசியையும், நன்மதிப்பையும், நட்பையும் பெற்றார். அதுவே அவர் பின்னர் ஆக்கப்பூர்வமாகச் செயலாற்றத் துணிந்த பல சமூக நலத்திட்டங்களுக்கு ஓர் அடித்தளமாக அமைந்தது.

## பதிப்பக நிறுவனர் :

எப்பிறப்பு ஆயினும் ஏமாப்பு ஒருவர்க்கு
மக்கட் பிறப்பின் பிறிதுஇல்லை - அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின்.

என்ற அறநெறிச்சாரத்தின் (72) கூற்றை நன்கு உணர்ந்து சமண சமயத்தினர், சமயம், கலை, அறிவியல் மற்றும் தத்துவ நூல்களைக் கற்று அவ்வழி நின்று பிறவிப் பயனை அடைய வழி காண்பது அவசியம் என்று உணர்ந்திருந்தனர். சமண சமயத்தோரின் முன்னேற்றத்தில் மிக்க ஈடுபாடு கொண்ட திரு. ஆதி நயினார் அவர்கள் அப்பணிக்கு ஓர் ஊடகம் தேவை என்பதை உணர்ந்து 1919-ஆம் ஆண்டு பாலகிருஷ்ணன் சந்து, 27, ஆச்சாரப்பன் தெரு, சென்னை-1ல் **தருமசீலன் அச்சுக்கூடத்தை** நிறுவினார். அவர் வெளியிட்ட முதல்நூல் **"ஸ்தோத்திரச் செய்யுட் கோவை"** என்ற நூலாகும். மேலும் சமணத் தத்துவங்களையும், இலக்கியங்களையும் சமய சமயத்தினர் கற்று அறிய **தத்வார்த்த சூத்திரம், மகாபுராணம், சூளாமணி, சீவகசிந்தாமணி, திருநூற்றந்தாதி, நாககுமார காவியம், சிலப்பதிகாரம்** ஆகிய நூல்களை அச்சிட்டு வெளியிட்டார். அனைவரும் வாங்கிப் படிக்க வகை செய்யும் விதமாக அனைத்து நூல்களையும் மிகக் குறைந்த விலைக்கே வழங்கினார்.

## தருமசீலன் - முதல் சமண சமய மாத இதழ் :

தத்துவ இலக்கிய நூல்களை வெளியிடுவதோடு தமிழகமெங்கும் வாழ்ந்து வரும் சமணர்கள், சமயக் கருத்துக்களைப் படித்துத் தெளிவுறவும், சமயக் கொள்கைகளைப் பரப்பவும், ஆய்வுக் கட்டுரைகளை வெளியிடவும் சமுதாயச் செய்திகளை அறிவிக்கவும் **"தருமசீலன்"** மாத இதழைத்

தொடங்கிச் சமயப் பணியாற்றி வந்தார். இதுவே சமண சமயத்தினரின் முதல் தமிழ் மாத இதழாகும். மிகச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிட்ட இதழுக்கு மிகக் குறைந்த சந்தாவே வசூலிக்கப்பட்டது.

## சென்னை திகம்பர் ஜெயின் கோயில் :

சென்னையில் வாழும் சமண சமயச் சான்றோர்கள் தினம் வழிபட ஓர் ஆலயமும், சென்னைக்கு வருவோர் தங்க ஒரு இடமும் அவசியம் என்பதை உணர்ந்து "தனது சொந்த வீட்டை அடமானம் வைத்து" சுப்பிரமணித் தெரு, ஜார்ஜ் டவுன், சென்னையில் தற்போது உள்ள ஸ்ரீ சந்திரபிரப தீர்த்தரங்கரர் கோயிலையும், சத்திரத்தையும் நிர்மாணித்தார். சிரவணபெளிகுள மடத்தின் அன்றைய தலைவரான பட்டாரக ஸ்ரீ நேமிசாகர வர்ணிஜி அவர்களின் ஆசியாலும் **'ஜைன மித்ரா'** இதழ் ஆசிரியர் பிரம்மச்சாரி ஸ்ரீ சீதளபிரசாத்ஜி அவர்களின் துணையாலும் சமண சமயத்தினரின் நன்கொடையாலும், தனது சொந்தத் தொகையாலும், கோயிலை மிகச் சிறப்பாகக் கட்டி முடித்து (1921), அனைவரும் தினம் ஆலயம் சென்று வழிபடுவதற்கான வாய்ப்பையும் வசதியையும் ஏற்படுத்திக் கொடுத்தார். இன்றும் அவரது நினைவைப் போற்றும் வகையில் அவர் கட்டிய கோயில் புதுப்பிக்கப்பட்டு சென்னையில் வாழும் சான்றோர்கள் தினம் வழிபடுவதற்கேற்றவாறு சிறந்ததோர் ஆலயமாகத் திகழ்ந்து வருகிறது.

திரு. தி. ஆதி நயினார் அவர்கள், சமணர்களுக்கு ஓர் ஆலயத்தை அமைத்ததோடு நில்லாமல் அவ்வாலயத்தில் ஆண்டுதோறும் தசலாக்ஷணிக காலத்தில் திருவிழா நடத்தி நல்வழி காட்டினார். இன்றும் அவர் காட்டிய வழியில் ஆண்டு

தவறாமல் திருவிழா நடைபெற்று வருவது போற்றுதற்குரியதாகும். மேலும் அவர் ஆலயத்தில் அறச்சொற்பொழிவு ஆற்றியும் சமண சமய இன்னிசைப் பாடல்கள் பாடியும் ஆலயம் வருவோரின் கவனத்தை ஈர்த்தார்.

## திருப்பறம்பூர் அகளங்கர் தர்ம சத்திரம் :

தான் பிறந்த மண்ணில் - திருப்பறம்பூரில் - ஒரு தர்மசாலை தேவை என்பதை உணர்ந்தார். கரந்தை - திருப்பறம்பூர் வரும் துறவிகளும், திருவிழாக்காலங்களிலும் மற்ற நாட்களிலும் வரும் வெளியூர் பக்தர்களும் தங்குவதற்கு ஒரு சத்திரம் மிகவும் உதவியாக இருக்கும் என்ற தொலைநோக்கே அவரின் "தர்மசாலை தேவை" என்ற எண்ணத்திற்கு வேராக அமைந்தது.

ஒல்வது அறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல் (472)

என்ற குறளுக்கு ஒப்ப தம்மால் எவ்வளவு முடியும் என்பதை நன்குணர்ந்து, கண், மனம்,வாய், மெய்களை நெறிப்படுத்தி செயல்படுபவரே சான்றோர் அல்லவா? திரு. ஆதி நயினார் அவர்கள் தான் நினைத்தவாறே தம்முடைய சொந்த செலவில் **தர்மசாலைக்கான அடிக்கல் நாட்டிச் சத்திரத்தைக் கட்டி முடித்தார்.** அச்சத்திரத்தில் சில ஆண்டுகள் 1 முதல் 5ம் வகுப்பு வரை சமண சமய மாணவர்கள் பயிலும் 'ஸ்ரீ அகளங்க ஸமஸ்கிருத பாடசாலை" இயங்கி வந்தது. 9.9.73 முதல் சல்லேகனை விரதம் ஏற்று 24.9.73 அன்று ஸ்ரீ கஜபந்தாவில் சமாதி அடைந்த ஸ்ரீ சுதர்ம சாகர முனி மகராஜ் அவர்கள், முன்னர் (1945) பிரம்மசர்ய விரதமேற்று ஒற்றை ஆடையுடன் அப்பாடசாலையில் ஆசிரியராகப் பணியாற்றினார் என்பது குறிப்பிடத்தக்கது.

திரு. ஆதி நயினார் அவர்கள் கட்டிய சத்திரத்தின் "பின் பகுதியில்", கல்கத்தா திரு. மிஸ்ரிசந்த் ஜெயின் அவர்களின் நன்கொடையால் (ரூ.27000) ஸ்ரீ சுதர்ம சாகர மாமுனிவர் நினைவு மண்டபம் கட்டப்பட்டது. அம்மண்டபம் 27.10.1975 அன்று ஜீவபந்து திரு ஸ்ரீபால் அவர்களின் தலைமையில் திருமதி சகுந்தலா மிஸ்ரிசந்த் ஜெயின் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

ஜீவபந்து திரு. தி. ஸ்ரீபால் அவர்கள் திருப்பறம்பூர் ஆலயத்தில் 1922 ஆம் ஆண்டு ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகள் நூல் நிலையத்தை அமைத்தார். அந்நூல் நிலையத்தை திரு. ஆதி நயினார் அவர்கள் திறந்து வைத்துச் சிறப்பித்தார்.

## இல்வாழ்க்கை :

திரு. தி. ஆதி நயினார் அவர்களின் இல்வாழ்க்கை, அவர் மிக்க ஈடுபாடுடன் மேற்கொண்டிருந்த வர்த்தகம், சமயப்பணி, தர்ம சிந்தனை மற்றும் விருந்தோம்பல் அனைத்திற்கும் உற்ற துணையாக அமைந்திருந்தது.

"விருந்தோம்பல் அவருடைய தினசரிக் கடமைகளில் ஒன்றாக இருந்தது" என்று திரு. ஆத்மபந்து பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரியார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். கர்நாடக மாநிலத்தைச் சார்ந்த திரு. வி.எம். நான் அவர்கள் திரு. ஆதி நயினார் அவர்கள் இல்லத்தில் தங்கியிருந்த அனுபவத்தைக் குறிப்பிடும்போது "திரு. ஆதிநயினார் அவர்கள் தமது இல்லத்தையே ஆலயமாக, தர்மசாலையாகக் காணச் செய்ததுடன், சுத்த போஜனத்திற்கும் தம் இல்லத்திலேயே வசதி செய்து உபசரித்தார்." என விவரித்துள்ளார்.

முனிவர்களுக்கு ஆகாரதானம் வழங்குவோர் பிறவியை ஒழித்து நற்கதி அடைவர் என்பதை மிக அழகாக விளக்கிக் கூறுகிறார் முனைப்பாடியார்.

**நீத்து ஆற்றின் நின்ற நிலையினோர் உண்டக்கால்**
**ஈத்து ஆற்றினாரும் உயப் போவார் - நீத்து ஆற்றில்**
**பெற்றிப் புணையன்னார் பேர்த்து உண்ணா விட்டக்கால்**
**எற்றான் உயப்போம் உலகு - அறநெறிச்சாரம் - 173**

இவ் அறநெறியை நண்குணர்ந்த திரு. ஆதி நயினார் அவர்களும் அவரது துணைவியார் திருமதி ருக்மணி அம்மையார் அவர்களும் துறவிகளுக்கு ஆகாரதானம் அளிப்பதை ஒரு கடமையாகக் கருதி, முனிவர்களுக்குத் தக்க பணி செய்து வந்தனர்.

தர்ம சிந்தனையும், மதிநுட்பமும், சமய உணர்வும் கொண்ட திரு. ஆதி நயினார் அவர்களின் வாரிசுகள், அவர் வழி பின்பற்றி வாழ்ந்து வருவது மிகவும் போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியதாகும்.

## சமுதாயப் பணி :

“அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்.” சிலப்பதிகாரம் 71-73

இல்லறத்தாரின் கடமை இவை எனும் இளங்கோவடிகளின் கூற்றுக்குஒப்ப திரு. ஆதி நயினார் அவர்களும், அவர் துணைவியார் திருமதி ருக்மணி அம்மையார் அவர்களும் விருந்தோம்பலுக்கு ஓர் இலக்கணமாகத் திகழ்ந்தனர். முனிவர்களுக்கு ஆகார தானமும், வீட்டிற்கு வருகை தரும் சமணச் சமயச் சான்றோர்களுக்கு நல்விருந்தும் மாணவர்களுக்கு இருக்க இடமும், உண்ண

உணவும் அளித்து இல்லற தர்மத்தைப் போற்றிப் பலருக்கும் எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்தனர்.

சமுதாய முன்னேற்றத்தில் மிகவும்ஈடுபாடுடைய அவர் சமண சமய மாணவர்கள் கல்வியில் சிறந்து விளங்கவேண்டும் என்று பெரிதும் விரும்பினார். ஏழை, எளிய மாணவர்களுக்கு உணவும், உறைவிடமும் கொடுத்து, உதவித் தொகையும் கொடுத்து அவர்களின் வாழ்க்கைக்கோர் வழிகாட்டியாய்த் திகழ்ந்தார்.

"இடுக்கண் வருங்கால்" இன்முகம்காட்டித் தேவை அறிந்து தானே முன்னின்று பலருக்குத் தக்க உதவி செய்வதைக் கடமையாகக் கொண்டிருந்தனர். அவரால் பயனடைந்தோர் பலர்.

சமண தத்துவங்களையும், ஆகமங்களையும் கற்றறிந்த சான்றோர்கள் சமண சமய முன்னேற்றத்திற்கு மிகவும் அவசியம் என்பதை நன்கறிந்து அவ்வாறு படித்த சாஸ்திரிகள் பலருக்கு ஆக்கப்பூர்வமான உதவிகள் செய்து அவர்கள் தமிழ்நாட்டிலேயே தங்கித் தொண்டு செய்யப் பெரிதும் உதவினார்.

சமண சமுதாயம் சென்னையில் வேர் ஊன்றித் தழைக்க உரமிட்டவரும், சமுதாய முன்னேற்றமே உயிர் மூச்சு என வாழ்ந்தவரும், சமணத் தத்துவங்களைக் கற்றறியப் பல நூல்களை வெளியிட்டு அனைவரும் நற்பயன் அடைய வழிவகுத்தவருமான திரு. ஆதி நயினார் அவர்கள் 1950 ஆம் ஆண்டு ஜனவரி திங்கள் 24ஆம் நாள் இயற்கை எய்தினார். அவர் காட்டிய வாழ்க்கை நெறியைப் பின்பற்றி நடப்பதே நாம் அவருக்குச் செலுத்தும் நன்றிக் கடனாகும்.

## ஆவணச் செய்தி

சென்னை, சௌகார்பேட்டை, பதிவாளர் அலுவலகத்தின் 18-10-48 தேதியிட்ட பத்திரம் ஒன்று ஆதிநயினார் அவர்களைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறது.

ஆதி நயினார் மிகச் சிறந்த மனித இனப் பற்றாளர். பிறருக்காக உழைப்பவர். சமணர்களில் முதன்மையானவர். சமணப் பயணிகள் தங்குவதற்கேற்ற சத்திரம் கட்ட வேண்டும் என்ற ஆர்வத்தால் கடுமையாக உழைத்ததோடு மட்டுமின்றித் தம்முடைய சொந்த வீட்டையும் 23.10.24 அன்று ரூபாய் பன்னிரண்டாயிரத்திற்கு (12,000) அடமானம் வைத்துச் சத்திரத்திற்காகச் செலவிட்டார். பின்னர் கல்கத்தாவிலிருந்து வந்த திரு. பைஜீநாத் என்ற செல்வந்தர் ஆதி நயினார் கேட்டுக் கொண்டதற்காக, சுப்பிரமணியத் தெரு, இரண்டாவது மாடியில் ஆலயம் கட்டித் தீர்த்தங்கரர்களின் திருவுருவங்களையும் நிறுவினார்.

டாக்டர் திருமதி சு. சுனந்தாதேவி<br>
பக்கம்14. பகவான் ஆதிநாதர் துதியும்<br>
சென்னை தி. ஆதிநயினார் வரலாறும்.<br>
தொகுப்பாசிரியர் - ஆத்மபந்து தி.ச. பரத சக்கரவர்த்தி சாஸ்திரியார்



## திருப்பறம்பூர் சந்தனம் ஸ்ரீபால்

சமண சமயக்காவலர் என அனைவராலும் பாராட்டப்பட்டவரும், ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகள் சென்னையில் வாழ்ந்து சமணத் தத்துவத்தின் சிறப்பையும், அஹிம்சையின் மேன்மையையும் தமிழர்கள் அனைவருக்கும் உணர்த்தி, அறவழிவாழ வழிவகுத்தவருமான திரு. சந்தனம் ஸ்ரீபால் அவர்கள் 1900-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 5-ஆம் நாள் திருப்பறம்பூரில் பிறந்தார். அவரது தந்தை திரு. சந்தனம் குணபால் நயினார். தாய் திருமதி குழந்தை அம்மாள்.



இருபத்து ஐந்து ஆண்டுகள் தான் பிறந்த கிராமத்தில் இருந்து அக்கிராம மக்களுக்குச் சமண சமயத் தத்துவங்களையும், தமிழ் இலக்கியங்களையும் எளிமையாகப் புரிந்து கொள்ளச் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றியும், இலக்கியமன்றம் மற்றும் நூல் நிலையம் அமைத்தும் ஒரு விழிப்புணர்வை உண்டாக்கினார். பின்னர் சென்னையில் தோற்றுவிக்கப்பட்ட **'தென்னிந்திய ஜீவரட்சகப் பிரசார சபை'**யின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கடைசி மூச்சுவரை சமண சமயக்காவலராக இருந்து,

தன் னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயிர் எல்லாம் தொழும் - 268

என்ற தேவரின் வாக்குக்கு எடுத்துக் காட்டாய் வாழ்ந்தார்.

திருப்பறம்பூர் (1900 - 1926)

திரு. T.S. ஸ்ரீபால் அவர்கள் திருப்பறம்பூரிலும் மற்றும் காஞ்சிபுரத்திலும் கல்வி பயின்றார். தன் இளமைக் காலத்திலேயே சமண சமயத் தத்துவங்களை ஆய்ந்து அறிவதிலும், தமிழ் இலக்கியங்களைக் கற்பதிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டு விளங்கினார்.

## ஆசிரியர் பணி :

திருப்பறம்பூருக்கு அருகில் உள்ள நெல்லி கிராமத்தில் இயங்கி வந்த பஞ்சாயத்து போர்டு பள்ளியில் இரண்டு ஆண்டுகள் (1925-27) ஆசிரியராக ஆர்வத்தோடும், மிகுந்த கடமை உணர்வோடும் பணியாற்றினார். மாணவர்கள் தரமான கல்வி பெறக் கடுமையாகப் பாடுபட்டார்.

## ஸ்ரீதர்ம சாகர சுவாமிகள் நூலகம் :

சமய அறங்களையும், தமிழ் இலக்கியங்களையும் தனது கிராம மக்கள் அனைவரும் கற்று அறிதல் வேண்டும் என்ற எண்ணம் அவரிடம் மேலோங்கி இருந்தது. அதன் வெளிப்பாடாக 1922-ஆம் ஆண்டு பிப்ரவரி 5-ஆம் நாள் கரந்தை - திருப்பறம்பூர் சமணப் பெருமக்களின் அன்பு நிறைந்த ஆதரவுடன் ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் நூலகத்தை அமைத்தார்.

அந்நூல் நிலையம் இருபதாம் நூற்றாண்டில் சமண சமயக் கொள்கைகளை பரப்பவும், வரலாற்றை ஆய்ந்து நூல்களை வெளியிடவும், சமண இலக்கியங்கள், தத்துவக் கலைகளை

விளக்கவும், மிகவும் உதவும் எனக் கருதினார். அந்நூல் நிலையத்தை திறந்து வைக்கத் தகுதியானவர், முதன் முதல் 'தருமசீலன்' என்னும் திங்களிதழை நடத்திச் சமயப்பணி புரிந்து வந்தவரும், சென்னைக்குக் குடிவந்த முதல் சமணருமான திருப்பறம்பூர் ஆதிநயினார் அவர்களே என திரு. T.S. ஸ்ரீபால் அவர்கள் முடிவு செய்தார். அவரின் வேண்டுதலை ஏற்று ஆதி நயினார் அவர்கள் நூல்நிலையத்தைத் திறந்துவைத்துச் சிறப்பித்தார்.

ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் நினைவாக நூல் நிலையம் அமைத்ததைத் திரு. ஸ்ரீபால் அவர்கள், அவ்வமயம் வட இந்தியாவில் ஆரா நகரில் தவம் புரிந்து வந்த ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகளுக்குத் தெரிவித்தார். ஸ்ரீ சுவாமிகள் ஆரா நகரில் உள்ள திரு. தேவேந்திர குமார் ஜெயின் அவர்கள் மூலம் அநேக சமண சமய சாஸ்திரங்களையும், ஆகம நூல்களையும், நூல் நிலையத்திற்கு அனுப்பி வைத்தார்.

ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் நூல் நிலையத்தை திரு. கஜபதி ஜெயின் அவர்கள் (1974-1988) முழுமையாக பயன்படுத்தியது மட்டுமின்றி, நூல்களை மொழி வாரியாக ஒரு பதிவேட்டில் பதிவு செய்தார். மேலும் அவர் பல ஆண்டுகளாக சேகரித்து வைத்திருந்த அரிய நூல்களையும் நூலகத்திற்கு அளித்தார்.

'ஸ்ரீ தர்மசாகர சுவாமிகள் நூலகம்' இன்றும் பலருக்கும் பயன்படும் வகையில் திரு. ப. ஆதிராஜ ஜெயின் (ஸ்ரீ தர்மசாகர் சுவாமிகள் அவர்களின் பேரன், சுதர்ம சாகரின் மகன்) அவர்களால் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

## சமயச் சொற்பொழிவு :

நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம், இவையே சமணர்களின் மூலமந்திரம். "உள்பொருள் இதுவென உணர்தல்

ஞானமாம், தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்" என அறம் உரைத்தலின் சிறப்பைத் தெளிவுபடுத்துகிறது சீவகசிந்தாமணி. எட்டு அங்கங்கள் மூலம் நற்காட்சியைப் பெறலாம். அவற்றில் அறம் உரைத்தல் ஒன்றாகும். **"நமது தீர்த்தங்கரர்கள் முதல், கணதரர், ஆசாரியர்கள் வழியாக இன்றுவரை ஜைன தர்மம் தழைத்து நிற்பது இத்தகு அற உபதேசத்தினாலேயே"** (சுகுமாரன் 74, 2006) என்பதை நன்கு உணர்ந்து, திருப்பறம்பூர் ஜினாலயத்தில் திரு. ஸ்ரீபால் அவர்கள் நாள்தோறும் அறவுரை ஆற்றி கிராம மக்கள் அனைவரும் நற்காட்சி பெற பெரிதும் உதவினார். மேலும் தர்ம சாகர் நூலகத்தின் முழுப் பயனை அனைவரும் அடைய வேண்டும் என்ற அவாவினால் சீவகசிந்தாமணி, சூளாமணி, மேருமந்தரபுராணம் ஆகிய நூல்களை ஆழ்ந்து படித்து, தினம் மாலை 6.30 முதல் 8.00 மணிவரை இலக்கியச் சொற்பொழிவுகள் ஆற்றிச் சாமானிய மக்களும் தத்துவங்களைப் புரிந்துக்கொண்டு அவற்றைப் பின்பற்ற வழிவகுத்தார். தன் திறமையான சொற்பொழிவால் கிராம மக்களின் இதயத்தில் நல்லறத்தின் மேன்மையைப் பதியும்படி செய்தார்.

## காங்கிரஸ் இயக்கம் :

திரு. T.S. ஸ்ரீபால் அவர்கள் சமயத் தொண்டோடு, சமுதாயத் தொண்டிலும் ஆர்வம் உடையவராய் திகழ்ந்தார். 1921-25-ஆம்ஆண்டுகளில் காங்கிரஸ் இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டு நமது நாட்டின் சுதந்திரப் போராட்ட இயக்கத்தில் ஈடுபட்டார். காங்கிரஸ் இயக்கத்தின் தலைவர்களை (வேலூர் திரு. குப்புசாமி முதலியார், சிதம்பரம் திரு. நயினார் பிள்ளை) சுற்றுப்புற கிராமங்களுக்கு அழைத்துச் சென்று பொதுக் கூட்டங்கள் நடத்தி, மக்களிடையே சுதந்திர வேட்கையையும், தேசிய உணர்வையும் உருவாக்கி வெற்றி கண்டார்.

**திருமணம் :**

திரு. ஸ்ரீபால் அவர்கள் 1919-ஆம் ஆண்டு திருப்பறம்பூர் திருமதி மாணிக்கம் அம்மையார் அவர்களை மணந்தார். இவர்களின் மகள் திருமதி. சுசிலாஅம்மையார் அவர்கள் ஆவார்.

**சென்னை - (1926-1981)**

சென்னையில் 1926-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் **"தென்னிந்திய ஜீவரட்சகப் பிரசார சபை"** சில சமண சமய அன்பர்களால் துவங்கப்பட்டது. அந்த சபையின் தலைமைப் பிரசாரகராகப் பணியாற்ற அழைக்கப்பட்டதாலும், சமணசமயக் கொள்கைகளிலும், சமூக சேவையிலும் அதிக ஈடுபாடுடையவராக இருந்ததாலும், அச்சபாவின் தலைமைப் பொறுப்பை ஏற்று 1927 சூலை முதல் 1981-ஆம் ஆண்டு வரை 54 ஆண்டுகள் அயராது உழைத்து அரிய அறப்பணி புரிந்து சமூகத் தொண்டாற்றினார்.

**உயிர்ப்பலி தடைச் சட்டம் :**

சமண சமயக் கோட்பாடுகளில் கொல்லாமை "உயிர்க் கொள்கை ஆகும்." அஹிம்சா பரமோ தர்ம" என்ற அஹிம்சா விரதம் சமண சமயத்தினரின் வேதவாக்கு. சமணர்கள் இல்வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய பத்து ஒழுக்கங்களில் முதலிடம் பெறுவது கொல்லாமையே ஆகும். இதை எடுத்துக்காட்டுகிறது இப்பாடல். (சுகுமாரன் ப.113. 2006)

**"கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, காமத்தை**
**ஒல்லாமை, ஒண்பொருளை வரைதலோ டிவைபிறவும்**
**பொல்லாத புலைசுதேன் கள் இருளுண்ணா நிலைமையோடு**
**நல்லாரைப் பணிவதுவும் நாமுறையே பயனுரைப்பாம்"**

தமிழகமெங்கும் அன்று பரவி இருந்த உயிர்ப்பலியிடும் வழக்கத்தை அகற்றுவதே தமது முதன்மைக் கடன் என்று உறுதி கொண்டு அதற்காக வெற்றி கிட்டும்வரை திரு. ஸ்ரீபால் அவர்கள் போராடினார்.

பெரியபாளையம், திருவொற்றியூர், கடலாடி, தேவக் கோட்டை, பாளையங்கோட்டை (1973) ஆகிய இடங்களில் உள்ள கோயில்களில் நடைபெற்று வந்த உயிர்ப் பலியிடும் வழக்கத்தை நேரில் சென்று பலியை நிறுத்த அவ்வூர்களில் பிரசாரம் செய்தார். உயிர்ப் பலியை கண்டித்து அவர் நடத்திய கூட்டங்களில் தந்தை பெரியார், சுவாமி சுத்தானந்த பாரதியார், சுவாமி அருணகிரி நாதர், காந்திமதி அம்மையார், டாக்டர் எஸ். தருமாம்பாள் ஆகியோர் திரு. ஸ்ரீபால் அவர்களின் அழைப்பை ஏற்று கலந்து கொண்டனர். மேலும் மகாத்மாகாந்தி, பண்டித ஜவஹர்லால் நேரு ஆகியோரின் ஆதரவு நிறைந்த அறவுரைகளைத் தந்தி வாயிலாகப் பெற்றார்.

திரு. மகாத்மா காந்தியடிகள் அனுப்பிய தந்தி :

"Sacrifice of animals in the name of Religion and God is remnant of barbarism."

திரு. ஜவஹர்லால் நேரு அவர்கள் அனுப்பிய அறவுரை :

"I am grieved to learn that it is proposed to offer animal sacrifice in temples. I think that such sacrifices are barbarous and they degrade the name of Religion."

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினை" என்ற தேவரின் வாக்கை மக்கள் நன்கு உணர அஹிம்சை வழியில் போராடினார். கொல்லாமை, ஊனுண்ணாமை, கள்ளுண்ணாமை, ஆகிய நல்லறங்களை மக்களிடையே பரப்பவும்,

அவற்றை பின்பற்ற வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தவும் **'ஜீவரக்ஷகன்'** என்னும் திங்களிதழையும், **'பாலசுந்தரம்' அல்லது 'பலியின் கொடுமை', 'கலியுக பிரகலாதன்'** என்னும் இரு நாடகங்களையும் நடத்தினார். அதன் மூலம் மக்களின் நல்வாழ்த்துக்களையும் வரவேற்பையும் பெற்றார்.

தமிழ்த் தென்றல் திரு.வி. கல்யாணசுந்தரனார், சென்னை சட்டமன்ற மேல்சபை சபாநாயகர் (1977) சிலம்புச் செல்வர், உயர்திரு. ம.பொ. சிவஞானம் மற்றும் பல சான்றோர்கள் உயிர்ப்பலி தடுப்பு இயக்கத்திற்கு மிக்க ஆதரவாகச் செயல்பட்டனர்.

### சமாஜரத்னா :

திரு. ஸ்ரீபால் அவர்களின் 25 ஆண்டு விடா முயற்சியாலும், பல சான்றோர்களின் ஆதரவாலும் தமிழக அரசு 1951-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 18-ஆம் நாள் கோயில்களில் உயிர் பிராணிகளை பலியிடுவதைத் தடை செய்யும் சட்டத்தை "உயிர்ப்பலிதடை மசோதா" **G.O.Ms. 1515 (Home)** கொண்டுவந்தது. உயிரினங்களின் காவலர் T.S. ஸ்ரீபால் அவர்களுக்கு பாரத உதவி ஜனாதிபதி மாண்புமிகு பி.டி. ஜெட்டி அவர்களால் **'சமாஜரத்னா'** என்ற பட்டம் வழங்கப்பட்டது.

South Indian Humanitarian League, ஏப்ரல் 18ஆம் நாள் 1943-ஆம் ஆண்டு சென்னையில் 'மகாவீரர் ஜெயந்தி' கொண்டாடியது. அன்று நடந்த பொதுக் கூட்டத்தில் திரு. ஸ்ரீபால் அவர்களின் தொண்டினைப் பாராட்டி மத்திய நிதி அமைச்சர் ஆர்.கே. சண்முகம் செட்டியார் அவர்கள் **'ஜீவபந்து'** என்ற விருதை வழங்கினார்.

## பிராணிமித்ரா, ஜைன ரத்னா :

'கொல்லாமை நெறி' நிலை பெற அயராது பாடுபட்டு வெற்றி கண்டமைக்காக பாரத ஜனாதிபதி மாண்புமிகு பக்ருதீன் அகமத் அலி அவர்கள் 25.2.1975ல் திரு. ஸ்ரீபால் அவர்களைப் பாராட்டி **'பிராணிமித்ரா'** எனும் பட்டத்தையும், தேசிய விருதையும் அளித்து, தங்கப் பதக்கத்தை அணிவித்துப் பாராட்டினார். மேலும் 1979-ஆம் ஆண்டு ஜைன இளைஞர் மன்றம் **'ஜைனரத்னா'** எனும் பட்டத்தை அளித்துச் சிறப்பு செய்தது.

## திருத்தக்கதேவர் இலக்கிய மன்றம் (1941)

திரு. மயிலை சீனி வேங்கடசாமி (1954) அவர்கள் 'சமணமும் தமிழும்' என்ற நூலின் முன்னுரையில் அந்நூலை தான் எழுதியதற்கான காரணத்தைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

> "தமிழ் நூல்களைப் படிக்கும்போதும் தமிழ் இலக்கிய வரலாற்றை ஆராயும்போதும், சமணசமயத்தினர் தமிழ் மொழிக்குச் செய்திருக்கும் சிறந்த தொண்டுகளைக் கண்டேன். சமண சமயத்தவர் செய்துள்ள தொண்டுபோல அவ்வளவு அதிகமாக தொண்டுகளை வேறு சமயத்தவர் தமிழ் மொழிக்குச் செய்யவில்லை என்பதையும் அறிந்தேன். ஆகவே, பண்டைத் தமிழரின் சமய வாழ்க்கையில் பெரும் பங்கு கொண்டிருந்து, தமிழ் மொழியை வளப்படுத்திய சமணசமய வரலாற்றை எழுதவேண்டுமென்னும் அவாவினால் உந்தப்பட்டு இந்நூலை எழுதினேன்."

சமணசமயத்தினர் படைத்த, தமிழ் இலக்கியங்களையும், இலக்கண நூல்களையும், பல கலைகள் சார்ந்த நூல்களையும் தற்கால சமண சமயத்தவர் மட்டுமின்றி அனைவரும் அறிதல் அவசியம் என்ற அவா திரு. ஸ்ரீபால் அவர்களிடம் தோன்றியது.

அதன் வெளிப்பாடாகத் தோன்றியதுதான் **'திருத்தக்க தேவர் இலக்கிய மன்றம்'** ஆகும். அம்மன்றத்தின் மூலம் வாரம் தோறும் பல புலவர் பெருமக்களின் உதவியுடன் சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், திருக்குறள், சூளாமணி ஆகிய சமண நூல்களை அடிப்படையாகக் கொண்ட இலக்கியச் சொற்பொழிவுகளை நடைபெறச் செய்தார் (1945-52).

ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்றான சீவகசிந்தாமணி ஆசிரியர் **திருத்தக்கதேவரின் உ**ருவப் படத்தை ஓவியர் வாயிலாக வரைந்து, தமிழ் தாத்தா உயர்திரு. உ.வே. சாமிநாத அய்யர் அவர்களிடம் அளித்து சீவகசிந்தாமணி நூலில் இடம் பெறச் செய்தார்.

பேராசிரியர் இராவ்பகதூர்,தத்துவச் சூடாமணி, உயர்திரு. அ. சக்கரவர்த்தி நயினார், M.A.,L.T.,I.E.S., (Retd.) அவர்கள் எழுதிய திருக்குறள் ஆங்கில மொழிப் பெயர்ப்பு நூலுக்கு சிறப்பாக வெளியீட்டு விழா (1954) நடத்தி சிறப்பு செய்தார்.

திருத்தக்க தேவர் மன்றத்தின் சார்பில் செக்கோஸ்லோவேகியத் தமிழ் அறிஞர் டாக்டர் கமில் சுவலேபில் (Dr. Kamil Zuelebil, Oriental Institute, Praha I. Mala Strans. Czechoslovakia) அவர்களுக்கு 1958 மார்ச் திங்கள் இரண்டாம் நாள் கோகலே மண்டபத்தில் வரவேற்பளித்து பாராட்டு விழா நடத்தினார். அவ்வரலாற்றுச் சிறப்பு மிக்க விழா, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் டாக்டர். இரா.பி. சேதுபிள்ளை அவர்கள் தலைமையில் நடந்தது. மேலும் தமிழ்த் தென்றல் உயர்திரு. திரு.வி. கல்யாண சுந்தரனார் அவர்கள் இயற்றிய **'அருகன் அருகே அல்லது விடுதலை வழி'** என்ற அரிய நூலுக்கு வெளியீட்டு விழா நடத்தி சிறப்புச் செய்தார்.

## ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் :

"சமண சமயத் தத்துவங்கள், சமண நெறிகள், உலகுக்கு வழங்கியுள்ள பண்பாட்டுப் பண்டகச் சாலை என்றும், எக்காலத்துக்கும் பொருந்துபவை என்றும்" பல பேரறிஞர்களும், மேதைகளும் போற்றிப் புகழ்ந்துள்ளதை மனதில் கொண்டு திரு. ஸ்ரீபால் அவர்கள் சமண அறநெறிகள் உலகெங்கும் பரவ ஆவன செய்ய வேண்டும் என்று உறுதி கொண்டார். **இன்றைய உலகில் தோன்றியுள்ள சமூகநல இயக்கங்கள், அரசின் கொள்கைகள், சமுதாய நலத்திட்டங்கள், சீர்திருத்தப் பணிகள், அனைத்தும் சமண சமய அறநெறிகளின் அடிப்படையைக் கொண்டவை** எனும் உண்மைகளை ஆதாரங்களுடன் திரட்டி பல நூல்களை வெளியிட்டார். அவற்றில் மிகவும் குறிப்பிடத்தக்கவை : பகுத்தறிவு இயக்கத்தின் பழைமை; ஆதிபகவானும் ஆச்சார்ய விநோபாபாவேவும்; நில உச்சவரம்புக் கொள்கை நமது பண்டைய நாகரீகமே; ஜைனமும் லெனினியமும்; ஜைன நெறிகளும் வள்ளலார் புரட்சியும் ஆகும்.

திரு. ஸ்ரீபால் அவர்கள் எழுதிய '**பகுத்தறிவு இயக்கத்தின் பழைமை**' என்ற நூல் (1975) தத்துவமேதை ராவ்பகதூர் பேரா. ஆ. சக்கரவர்த்தி நயினார், M.A.,I.E.S. (Rtd.); முனைவர் மு. வரதராசனார் மற்றும் புதுவை புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் ஆகியோரால் மிகவும் பாராட்டப்பட்டது.

திரு. ஸ்ரீபால் அவர்கள் அவரது 19வது வயதில் முதன் முதலில் எழுதிய '**அறம்**' என்ற கட்டுரை **தருமசீலன்** (செப்டம்பர், 1919) மாத இதழில் வெளிவந்தது. அக்கட்டுரை அவரின் படைப்பாற்றலை வெளிப்படுத்தும் விடிவெள்ளியாக அமைந்தது.

சமண சமய ஆராய்ச்சிக் கட்டுரைகளையும், நூல்களையும் வெளியிட '**ஜைன இலக்கிய ஆராய்ச்சி மையம்**' (The Jain Litera-

ture Research Society) என்ற அமைப்பையும், சமயக் கட்டுரைகளையும், செய்திகளையும் வெளியிட 'நல்லறம்' மாத இதழையும் துவங்கி நடத்தி வந்தார்.

தந்தை பெரியார் அவர்களின் 'குடியரசு' வார இதழில் (1928-29) மக்களின் அறியாமையை அகற்றும் கருத்துக்கள் புதைந்த கட்டுரைகளை 'தரும பரிக்ஷை' என்னும் தலைப்பில் எழுதி (பழைய ஏட்டுச் சுவடியிலிருந்து பிரதி செய்யப்பட்டது.) பெரியாரின் வாழ்த்தையும், பலரின் பாராட்டையும் பெற்றார்.

## முத்தமிழ் வித்தகர் :

திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள் இயல், இசை, நாடகம் ஆகிய மூன்று துறைகளிலும் வித்தகராகத் திகழ்ந்தார். புகழ்மிக்க நாடகக் கலைஞர் ஔவை டி.கே. சண்முகம் அவர்கள் 'ஜீவபந்து ஒரு கவிஞர், நாடக ஆசிரியர், ஆராய்ச்சியாளர்' எனப் பாராட்டியுள்ளார். மேலும் மாண்புமிகு முதலமைச்சர் கு. காமராஜ் அவர்கள் **"திரு. ஸ்ரீபால் அவர்களை நான் நன்கு அறிவேன். அவர் தம் சேவைக் குறிப்புகள் வருங்கால இளைஞர்களுக்கும், சேவை மனப்பான்மை உடையோருக்கும் ஒரு வழிகாட்டியாக விளங்கு"**மென்று குறிப்பிட்டுள்ளார். (ஜீவபந்து ஸ்ரீபால் அவர்களின் மணிவிழா மலர்.)

**"அருகப் பெருமானைப் போற்றும் இன்னிசைப் பாடல்கள்"** என்ற நூலிலும் **"நற்காட்சியாளர் துதிப்பாடல்கள்"** என்ற நூலிலும் அவர் இயற்றி இசை அமைத்த பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவை இன்றும் அனைவராலும் மகிழ்வுடன் பாடப்பட்டு வருவன என்பது போற்றுதற்குரியதாகும்.

தெய்வத்தின் பெயரால் உயிர்கொலை புரியும் மூட நம்பிக்கைகளைக் கைவிடவேண்டி 1949-ஆம் ஆண்டு அவர்

இயற்றிய **'கிள்ளை விடு தூது'** என்ற பாக்கள் நிறைந்த நூலும் **'ஓர் ஆட்டின் உணர்ச்சி'** என்ற பாடலும் உயிர்ப்பலி தடுப்பு இயக்கத்திற்கு உயிர் ஊட்டியன. உயிர்ப்பலி விலக்குச் சட்டம் கொண்டு வர அந்தப்பாக்களே வழியாக இருந்ததெனில் மிகையாகாது" எனத் திரு. ஸ்ரீபால் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

உயிர் பலியை விலக்க 'பாலசுந்தரம் அல்லது பலியின் கொடுமை' மற்றும் 'கலியுக பிரகலாதன்' ஆகிய இரண்டு நாடகங்களை எழுதி, இயக்கி தமிழ்நாடெங்கும் சிறப்புற நடத்தித் (1932-45) தனது குறிக்கோளில் வெற்றி கண்டார்.

திரு. ஸ்ரீபால் எழுதிய ஆராய்ச்சி நூலான 'தமிழகத்தில் **ஜைனம்' எனும் நூல் "மிகச் சிறந்த ஆய்வுநூல் மட்டுமல்ல.... தமிழகத்தில் பல்கலைக் கழகங்களில் இடம் பெறுவதற்குரிய தகுதி படைத்துள்ள அரிய நூல்" என்று தமிழக முதலமைச்சர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களால்** பாராட்டப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

### சமண சமயக் காவலர் :

சமண சமயத்தைப் பற்றியோ சமண சமயத் தத்துவங்களைப் பற்றியோ தவறாகவோ, இழித்தோ, பேசப்பட்டாலும் அல்லது எழுதப்பட்டாலும் அவற்றிற்கு உடனே தக்க ஆதாரங்களுடன் விளக்கம் கொடுத்து, உண்மை நிலையை அனைவரும் அறிய வைத்தார். எனவே அவருக்கு 'சமயக்காவலர்' என்ற விருது வழங்கப்பட்டது.

தஞ்சைப் புலவர் திரு. வேங்கடசாமி நாடார் அவர்கள் சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் சைவ சமயத்தவர் (1943) என்று எழுதியதை அறிந்து அதற்கு மறுப்பாக **'இளங்கோவடிகள் சமயம் யாது?'** என்ற ஆராய்ச்சி நூலை எழுதி இளங்கோவடிகள் சமணரே என்பதை ஐயம் திரிபற தெளிவுபடுத்தினார்.

1937-ஆம் ஆண்டு சமண சமயத்தைப் பழிக்கும் தன்மையில் இருந்த ‘திருஞானசம்பந்தர் ஞானக்குழந்தை’ என்ற கதையை கல்கத்தா “ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்” நிறுவனம் ஒலித்தட்டாக வெளியிட்டது. திரு. ஸ்ரீபால் அவர்கள் சென்னை ஆளுனர் சபையில் வழக்கு தொடர்ந்தார். அம்முயற்சியால் ஆளுனரின் உத்தரவின் பேரில் அவ்வொலித்தட்டு பறிமுதல் செய்யப்பட்டது.

1978 ஆம் ஆண்டு சென்னை அபிராமி எண்டர்பிரைசஸ் என்ற திரைப்பட நிறுவனம் ‘ஞானக்குழந்தை’ எனும் திரைப்படம் எடுத்து வெளியிட முயன்று வந்தது. தமிழ்நாடு ஜைன சங்க சார்பில் திரு. ஸ்ரீபால் அவர்கள் ‘ஞானக்குழந்தை’ திரைப்படம் வகுப்புக் கலவரத்தை தூண்டும் கதை. ஆகையால் அதை வெளியிடக் கூடாது என்று எதிர்ப்புத் தெரிவித்து திரைப்பட நிறுவனர்க்கும் ‘தினகரன்’, ‘விடுதலை’ இதழ்களுக்கும் கடிதம் அனுப்பினார். அதனால் 1979ஆம் ஆண்டு ஜூன் மாதம் வெளியிடப்பட்ட அத்திரைப்படம் சமண சமயம் சம்பந்தமான நிகழ்வுகள் ஏதுமின்றி அமைந்திருந்தது.

திரு. துரோணன் என்பவர் 1962ல் “ஆனந்த விகடனில்” எழுதி வந்த ‘கலங்கரைத்தெய்வம்’ என்ற தொடர் நாடகத்தில் சமண சமயத்தைப் பழித்திருப்பதை அறிந்து திரு. ஸ்ரீபால் அவர்கள் அந்நாடக ஆசிரியருக்கு அவரின் தவறைச் சுட்டிக் காட்டினார். அந்நாடக ஆசிரியர் தவறை உணர்ந்து நாடகத்தில் தக்க மாற்றங்கள் செய்து வெளியிட்டார்.

“பாண்டிமாதேவி” என்ற நாடகம் சென்னை அண்ணாமலை மன்றத்தில் சென்னை தனலெட்சுமி நாடக மன்றத்தால் நடத்தப்பட்டு வந்தது. அந்நாடகம் சமண சமயத்தைப் பழிக்கும் நோக்கத்துடன் எழுதப்பட்டிருந்தது. அந்நாடகத்தைத் தடை செய்யக் கோரி திரு ஸ்ரீபால் அவர்கள் போராட்டத்தில் ஈடுபட்டார். அரசின் தலையீட்டால் அந்நாடகம் தடை செய்யப்பட்டது.

## அறநெறி பரப்பும் நற்காட்சி

திருப்பறம்பூர், கரந்தை மற்றும் வெண்பாக்கம் ஆகிய மூன்று கிராமங்களிலுள்ள சமண சமயச்சான்றோர்கள் சுமார் 30 பேர் அறநெறிப் பணியில் ஈடுபட முன்வந்தனர். அதற்காக இயல்பாகவே சமணர்கள் பின்பற்றி வரும் 10 அறங்களோடு பல்வேறு நோன்புகளையும், அக ஒழுக்கங்கள், மற்றும் புற ஒழுக்கங்கள் கொண்ட விதிமுறைகளையும் வரையறை செய்தனர். இவ்விவரங்கள் அனைத்தையும் **தத்துவ மேதை திருமிகு. கஜபதி ஜெயின் மற்றும் ஆசிரியர் திரு. சா. பாகுபலிஜெயின்** அவர்களும் விரிவாக எழுதி திரு. ஸ்ரீபால் அவர்களுக்குத் தெரிவித்து அவர் கருத்தினைக் கேட்டிருந்தனர்.

திரு. ஸ்ரீபால் அவர்கள் அந்த "அறநெறி ஆக்கம் பெறும் திட்டத்தினை" வரவேற்று அப்புனித நோன்பினை "நற்காட்சி நோன்பு" என்றும், "அந்நோன்பினைக் கடைபிடிப்போர் 'நற்காட்சியாளர்' என்றும் பெயரிட்டு அழையுங்கள்" என்று பதிலுரைத்தார். மேலும் அப்புனித 'நற்காட்சி' நோன்பினை 48 நாட்கள் கடைபிடிக்க வேண்டும் என்றும் அந்நோன்பினை திருநறுங்கொண்டை கோயிலில் நிறைவு செய்ய வேண்டும் என்றும் ஆலோசனை கூறினார்.

திரு. ஸ்ரீபால் அவர்களின் ஆலோசனையை மகிழ்வுடன் ஏற்றுத் திருப்பறம்பூர், கரந்தை, வெண்பாக்கம் கிராம சமண சமயச் சான்றோர் பலர் நற்காட்சி நோன்பினை 1978ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 16ஆம் நாள் விதிமுறைப்படித் துவங்கினர். அவர்கள் வெவ்வேறு நாட்களில் காஞ்சிபுரம், சென்னை, திருப்பருத்திக்குன்றம், ஆர்பாகை, குந்தகுந்தர் மலை, பொன்னூர், ஆரணி, பூண்டி, கோவிலாம்பூண்டி, திருமலை, மேல்சித்தாமூர் ஆகிய கிராமம் மற்றும் நகரங்களில் உள்ள ஜினாலயங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு, அறவுரையாற்றி வந்தனர்.

அந்நிகழ்ச்சிகளில் தத்துவமேதை திருமிகு. கஜபதி ஜெயின் அவர்களும் திரு. ஸ்ரீபால் அவர்களும் பங்கு கொண்டு சிறப்புரை ஆற்றினர்.

நற்காட்சி நோன்பின் மகிமையை அறிந்த காஞ்சிபுரம், சென்னை, விப்பேடு, ஆரணி, சேவூர் ஆகிய கிராமம் மற்றும் நகரங்களில் வாழும் சமண சமயத்தினர் பலர் நற்காட்சி நோன்பினை மேற்கொண்டனர்.

நற்காட்சியாளர்கள் அனைவரும் 1979-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 2ஆம் நாள் திருநறுங்கொண்டை பகவான் அப்பாண்டை நாதர் எனப்படும் பார்ீஸ்வநாதர் ஆலயத்தில் கூடினர். பகவான் பார்ீஸ்வநாதருக்கும், பகவான் சந்திரபிரப தீர்த்தங்கரருக்கும், பகவான் விருஷப தேவருக்கும் அபிஷேகங்கள் செய்து வணங்கி வழிபட்டனர். மேலும் பல்வேறு சிறப்புப் பூஜைகள் செய்தும், தோத்திரப் பாக்கள் பாடியும், விழா எடுத்தும் நற்காட்சி நோன்பினை நிறைவு செய்தனர் (ஸ்ரீபால், 1980).

வரலாற்றுப் பெருமை கொண்ட நற்காட்சி நோன்பு இயக்கத்தை துவக்கிய பெருமை திருமிகு. கஜபதி ஜெயின் மற்றும் திரு. ஸ்ரீபால் அவர்களையே சாரும். நாம் என்றென்றும் அவர்களின் நினைவைப் போற்றி நற்காட்சி நோன்பினை மேற்கொண்டு அறப்பணியாற்றுவது நமது கடமையாகும்.

## சமூகத் தொண்டு :

திரு. ஸ்ரீபால், தமது பல்வேறு அலுவல்களுக்கிடையேயும் தம்மை நாடிவரும் அனைவருக்கும் சமய பேதமின்றி இயன்ற உதவிகளைச் செய்து வந்தார். மாணவ, மாணவியர்க்குக் கல்வி நிறுவனங்களில் தக்க இடம் கிடைக்க உறுதுணையாய் இருந்தார். அதுமட்டுமல்லாது அவர்களின் தேவைகளை உணர்ந்து இருக்க

இடமும், படிப்பைத் தொடரத் தேவையான உதவித் தொகையும் பெற உதவினார்.

## உத்தமச் சான்றோன் மறைவு :

1981ஆம் ஆண்டு ஜூன் மாதம் 11 ஆம் நாள் சமண சமயக் காவலர் ஜீவபந்து திரு. ஸ்ரீபால் அவர்கள் மறைவால் சமண சமுதாயம் ஈடு செய்யமுடியாத இழப்பைச் சந்தித்துப் பெரும் துயரில் ஆழ்ந்தது.

வாதகேசரி அகளங்கதேவர் வாழ்ந்த மண்ணில் பிறந்து, தமிழக ஜைன சமயத்தின் உயிர் மூச்சாய் வாழ்ந்து, புகழ்ஒளி பரப்பி, தன்னை அச்சமய சேவைக்கே அர்ப்பணித்துக் கொண்ட ஜைன சமயக் காவலர் ஜீவபந்து அவர்களின் நினைவாக 4.10.81ல் ஆச்சார்ய ஸ்ரீகுந்த குந்தரின் புனித மலையில் நடைபெற்ற அஞ்சலி நிகழ்ச்சியில் கரந்தை திரு. S.A. அப்பாண்டை ஜெயின் அவர்கள் (செயலாளர், அகளங்க தேவர் அருங்கலை மன்றம், கரந்தை, வெம்பாக்கம் அஞ்சல், 604 410) **"அமரர் ஜீவபந்து T.S. ஸ்ரீபால் நினைவு அஞ்சலி மலர்'** ஒன்றை வெளியிட்டு சிறப்பு செய்துள்ளார்.

அம்மலரில் **டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் நம்நாடு (13.11.77) இதழில் எழுதியுள்ள மயிலிறகு என்ற** சிறப்புமிக்க, பைந்தமிழ் மணக்கும் சிறுகதை ஒன்றையும் முரசொலி (28.8.81) இதழில் வெளியிட்டுள்ள டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் உரையையும் (உயிர்க் கொலையைத் தடுக்க ஜீவபந்து ஸ்ரீபால்) வெளியிட்டு சிறப்பு செய்துள்ளது மிகவும் பாராட்டுதலுக்கும், போற்றுதலுக்கும் உரியதாகும்.

நவீன அகளங்கர், தர்மபந்து எனப் பலபெயர்களால் பாராட்டப்பட்ட திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்களின் நூற்றாண்டு ஜெயந்தி விழாவை இரண்டாயிரம் ஆண்டு ஜூலை மாதம் "தமிழ்ச்

**சமணர்கள் சங்கம், மதுரை"** மிகச் சிறப்பாகக் கொண்டாடியது. (தலைவர் Er. A. சின்னதுரை, B.E., F.I.E., F.I.V., செயலர் சொ. அனந்தராஜ், பொருளாளர் - ஜீவபந்து சேவாமணி,நேமி சாந்தகுமார் ஜெயின்) மதுரைத் **"தமிழ்ச்சமணர்கள் சங்கம்"** நிறுவிய அறக்கட்டளை வழியாக ஆண்டு தோறும் ஜீவபந்துவின் பிறந்தநாள் விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருவது போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியதாகும்.

"சென்னை ஜைன இளைஞர் மன்றம்" திரு. ஸ்ரீ ஜீவபந்து ஸ்ரீபால் அவர்களின் நினைவைப் போற்றும் வகையில் அவரது நூல்களை மறுபதிப்பாக வெளியிட்டு இன்றைய இளைஞர்கள் படித்துப் பயன்பெற உதவி வருவது பாராட்டுதலுக்குரியதாகும்.

## ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் எழுதியுள்ள நூல்கள்

- சட்டம் பேசுகிறது.
- ஜினர்மலைகள் (அ) அறவோர் பள்ளிகள்
- பாலிடானா யாத்திரை (1937)
- பொன்னுலக நாதனின் பூவுலகத் தொண்டர்கள் (இரண்டாம் பதிப்பு) 1935
- பகுத்தறிவியக்கத்தின் பழமை (1948) மூன்றாம் பதிப்பு (1975)
- பகுத்தறிவும் சமதர்மமும் (1950)
- ஆதிபகவனும் ஆச்சாரிய வினோபாஜியும் (1954)
- எம்மான் கோயில் (1954)
- கோலாப்பூர் ஜைன மடமும் ஸ்ரீசுவாமிகளின் வரலாறும் (1957)
- வானவில் ஆராய்ச்சி (1953)
- நிலவுடமை உச்சவரம்புக் கொள்கை நமது பண்டைய நாகரிகமே (1962)
- வரலாற்றுச் சிறப்பும் இலக்கியப் படைப்பும் அமைந்த விசயமங்கலமும் அதன் சுற்றுப் புறக் கோயில்களும் (1965)
- அருகப் பெருமானைப் போற்றும் இன்னிசைப் பாடல்கள் (1967)

- திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன் (1964)
- திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன் முதற் பதிப்பு (1958)
  ஐந்தாம் பதிப்பு 1972)
- ஐந்தவித்தான் யார்? (1972)
- ஊன் உணவைத் துறந்த உத்தம வேடனும் மரக்கறியின் மாண்பும் (1976)
- ஜைன நெறிகளும் வள்ளலார் புரட்சியும் (1977) இரண்டாம் பதிப்பு, 2008.
- திருக்குறளில் அறிவுத் துறைகள் எனும் நூலில் இவர் எழுதியுள்ள நயினார் கோயில் பின் இணைப்பாகத் தரப்பட்டுள்ளது. (இக்கட்டுரை ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவையின் நான்காவது ஆண்டு மலரில் வெளிவந்தது)
- ஆவி உலகப் பேச்சு ("மெய்ப்பொருள் காண்போன்" என்ற புனைப் பெயரில் எழுதப்பட்டது)
- ஜைனமும் லெனினியமும் (1979)
- நற்காட்சியின் மாட்சி (1980)
- இளங்கோவடிகள் சமயம் (இரண்டாம் பதிப்பு 1979)
  ஜைன இளைஞர் மன்ற வெளியீடு
- தமிழகத்தில் ஜைனம் (இரண்டாம் பதிப்பு 2007)
  ஜைன இளைஞர் மன்ற வெளியீடு
- ஜைன சமயத்தின் தொன்மையும் அருகப் பெருமானைப் போற்றும் தன்மையும் (1967)

நற்காட்சியார் துதிப்பாடல் (1979)

## அருகப் பெருமானைப் போற்றும் இன்னிசைப் பாடல்கள்

அருகப் பெருமானைப் போற்றும் இன்னிசைப் பாடல்கள் என்ற நூல் 1967 ஆம் ஆண்டு **வெண்பாக்கம்** சமணசமய பெருமக்களால் நிறுவப்பெற்ற **"மகாவீர ஜைன இளைஞர்"** மன்ற அன்பர்களால் மிகச் சிறப்பாக விழா நடத்தி வெளியிடப்பட்டது.

இந்நூலில் இடம் பெற்ற இருபத்தி நான்கு பாடல்களும், ஜீவபந்து திரு. டி.எஸ். ஸ்ரீபால் அவர்களால் இயற்றப் பட்டவையாகும். எல்லாப் பாடல்களுக்கும் இராகமும், தாளமும் குறிக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் வாயிலாக ஜீவபந்து திரு. டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் தமிழுலகுக்குச் சிறந்த இசைத்தமிழை வழங்கியுள்ளார் என கலைக்கதிர் (ஜூன் 1967) பாராட்டியுள்ளது.

தமிழன்னை புதிதாக புனைந்துக் கொண்ட அணிகளில் இந்நூலும் ஒன்று. (நித்திலக் குவியல், ஆகஸ்ட் 1967) என்று போற்றப்பட்ட இந்நூலிலிருந்து ஒரு பாடல்.

(அருகப் பெருமானைப் போற்றும் இன்னிசைப் பாடல்கள் இயற்றியவர் - டி.எஸ். ஸ்ரீபால், 1967, ஜைன இலக்கிய ஆராய்ச்சி மன்றம், 34, சுப்பிரமணிய முதலி வீதி, சென்னை-1.) பக்கம் - 19

### நாட்டிலே மிக மேன்மை

இராகம் - ஜோன்புரி தாளம் - ஆதி

நாட்டிலே மிகமேன்மை யானதென்று தேடி-ஓடி
நானலைந்தே னெங்குமொரு பித்தன்போலாடி
கேட்டே நீதிமன்றங்க ளெங்கும்நின்றேன் - அங்கு
கிளத்தினார் சட்டத்தையே விட்டுச் சென்றேன். (நாட்)

ஓதுங் கல்விச்சாலைகளில் நம்பி நுழைந்தேன் - எங்கும்
உரைத்தனர் அறிவென்றே ஒதுங்கி வந்தேன்
தீதுதீ ரறிவுடை யாரிடங் கேட்டேன் - அவர்
தீரமாய்ச் சத்திய மென்றார் திரும்பிவிட்டேன் (நாட்)

அறிவிலா னெதிர்பட்டான் குறை அறைந்தேன் - அவன்
ஆடிக்களி யாட்டமென்றானகம் முறிந்தேன்

சிறந்தபே ரழகிளம் மாதைக் கண்டேன் - புன்
சிரிப்புடன் காதல் என்றாள் வெட்கங்கொண்டேன் (நாட்)

ஆண்மையோ டுலா விவருங் காளையைக்கண்டேன் - அவன்
அழகு அழகு என்றான் அங்கம் வியர்த்தேன்
தூண்போல் தோளுடை படைவீரனைக் கேட்டேன் - அவன்
துணிந்துநல் வெற்றி யென்றான் துன்பங் கொண்டேன்(நாட்)

அரசியல் அறிஞரை அணுகிக் கேட்டேன் - அவர்
ஆழ்ந்து சமதர்மம் என்றார் அயர்ந்து நின்றேன்
விரைவில் தெளிந்துநேரே மடத்தில் சென்றேன் - யாம்
விழைந்திடும் தானம் என்றார் வீழ்ந்து நகைத்தேன் (நாட்)

முனிவர் பெருமானை வணங்கி நின்றேன் - அவர்
முக்தியென் றுரைக்கமுகம் வாடிச் சென்றேன்
இனிபதி லுரைப்பவர் இங்கிலை யென்றே - என்
எழில்மதி வருத்தமா யுரைத்ததன்றே (நாட்)

ஒன்றுந் தோன்றாது கடலோரந் தனிலே - வாடி
உண்மையைச் சிந்தித் திருக்கும் வேளையினிலே
என்றுமி லானந்தத்துடன் உள்ளத்தினின்றே - ஓசை
எழுந்தது அன்பு அன்பு அன்புதானென்றே (நாட்)

எழுந்தேன் தொழுதேன் மிகத்துள்ளிக் குதித்தேன் - அன்பு
என்றெழுதித் தெய்வமென வாழ்த்தித் துதித்தேன்
பொழிந்தே னானந்தக் கண்ணீரெனை மறந்தே - அன்பால்
போற்றுங்க ளெவ்வுயிரையும் மேன்மை யறிந்தே (நாட்)



## ஆத்ம பந்து தி.ச. பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரியார்

திருப்பறம்பூர் சந்தனம் பரத சக்ரவர்த்தி அவர்கள் சமண சமயச் சான்றோர்கள்பலர் பிறந்த அறம்பல வளர்த்த தர்மமிகு திருப்பறம்பூரில் பிறந்தார். அவரது தந்தையார் திரு. சந்தனம் குணபால் நயினார், தாயார் திருமதி அம்மணி அம்மாள். அவர் சமண சமயக் காவலராய்த் திகழ்ந்த திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்களின் இளைய சகோதரர், அவரது பெரிய தந்தையார் சென்னையில் திகம்பர ஜெயினர் களுக்கான ஜினாலயமும், சத்திரமும் அமைத்து நல்லறம் பரப்பி வாழ்ந்த உத்தமரான திரு. தி. ஆதி நயினார் அவர்கள் ஆவார். திரு. ஆதி நயினார் அவர்களை "என் வாழ்க்கை உயர்வுக்கும், விருந்தோம்பலுக்கும், பத்திரிக்கை வெளியீட்டிற்கும், ஜிநாலய அமைப்புக்கும் வழிகாட்டி ஆதி கர்த்தாவாகத் திகழ்ந்தார்" (பரதசக்ரவர்த்தி சாஸ்திரியார் ப.II) என்று நன்றிப் பெருக்குடன் நினைவு கூர்கின்றார் திரு. தி.ச. பரத சக்ரவர்த்தி அவர்கள்.



### கல்வி :

திரு. ஆதிநயினார் அவர்களின் அறிவுறுத்தலின்படி 1940-ஆம் ஆண்டு சிரவண பெளிகுளம் சென்று பூஜ்ய ஸ்ரீ நேமிசாகரவர்ணீஜீ என்று போற்றப்பட்ட சிரவண பெளிகுள பட்டாரக பீடாதிபதி ஸ்ரீ சாருகீர்த்தி பண்டிதராசார்யவர்ய மகாசுவாமிகள் அவர்களின் வழிகாட்டுதலில் வடமொழி, கன்னடம், ஹிந்தி ஆகிய மொழிகளையும், சமண சமயச் சாத்திரங்களையும்,

ஆகமங்களையும் பயின்றார். பின்னர், மேல்படிப்பிற்காக பூஜ்ய சுவாமிகளின் நல்லாசிப் பெற்று, மத்தியப் பிரதேசத்தில் மொரேனா நகரில் உள்ள ஜைன சித்தாந்த வித்யாலய கல்வி நிறுவனத்தில் ஜைன சிந்தாந்தம் மற்றும் ஜிந ஆகமங்களையும் பயின்று "நியாய தீர்த்த" மற்றும் "சாஸ்திரி" பட்டங்களைப் பெற்றார்.

தமிழ், சமஸ்க்ருதம், கன்னடம், ஹிந்தி ஆகிய மொழிகளில் வல்லவராகவும், சமண சமயத் தத்துவங்களிலும், பூஜை விதிகளிலும் தேர்ந்தவராய் சென்னை திரும்பி ஆசிரியப் பணியை மேற்கொண்டார்.

## ஆசிரியப் பணி :

சென்னை ஸ்ரீ அமோலக்சந்து கெலாடா மேல்நிலைப் பள்ளியில் திரு. தி.ச. பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரி அவர்கள் ஆசிரியராக மிகச் சிறப்பாகப் பணியாற்றி (1959) மாணவர்களின் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றிருந்தார்.

சாஸ்திரியார் அவர்கள் சமயச் சொற்பொழிவு ஆற்ற பெங்களூர் சென்றிருந்தபோது, அவரிடம் 20 ஆண்டுகளுக்கு முன் பயின்ற மாணவர் ஒருவர் அவரை அடையாளம் கண்டு பாதங்கள் தொட்டு வணங்கி "நான் (சாந்திலால்) புதிய இல்லம் ஒன்று அமைத்துள்ளேன். அதில் தங்கள் பாதம் பதிய வேண்டும். மறுப்புக் கூறாமல் வருகை தர வேண்டும்" என்று வற்புறுத்தி அழைத்துச் சென்று, தமிழில் ஆன்மீக நூல்கள் வெளியிட நன்கொடையாக ரூ.1001/-ம் கொடுத்து மகிழ்ந்தார். இந்நிகழ்ச்சியே அவர் ஓர் சிறந்த ஆசிரியராகத் திகழ்ந்தார் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்,

## சமணசமய தத்துவ விளக்கச் சொற்பொழிவுகள் :

சமணசமயம் "பலமுனைத் தாக்குதலுக்குப் பிறகும், அன்று போல் இன்றும், அதே பொலிவுடன் தலைநிமிர்ந்து நிற்கிறது என்றால் அதன் தகர்க்க இயலாத அடிப்படை உண்மைத்

**தத்துவங்களே காரணம்"** (பரதசக்ரவர்த்தி 1995 ப.1) என்பதை அனைவரும் அறிவர். ஆனால் இன்று கிராமப்புறங்களில் வாழும் பெரும்பாலான சமணர்கள் சமண சமயத் தத்துவங்களை அறியாமலும், அறிவதில் ஆர்வம் இல்லாமலும் இருப்பதற்கான காரணம், அதற்கு வேண்டிய அடிப்படை வாய்ப்பும், தேவையான நூல்களும், சிறந்த அறச் சொற்பொழிவு நிகழ்வுகளும் இல்லாமல் போனதே ஆகும். இதை உணர்ந்த குந்த குந்தர் மலை அடிவாரத்தில் அமைந்துள்ள **"ஆசாரியர் குந்தகுந்தர் கல்வி நிறுவனத்தினர்"** 1980-ஆம் ஆண்டு (பகவான் பாகுபலி சுவாமி மகாமஸ்தாபிஷேகம்) பல திட்டங்களை வகுத்து ஆக்க வேலையில் ஈடுபட்டனர். இவைகளில் இரண்டு திட்டங்கள் சிறிய - பெரிய தத்துவ நூல்களை வெளியிடுவது, மேலும் தத்துவ விளக்கக் கூட்டங்கள் கிராம மக்கள் பயன்படும் வகையில் நடத்துவது என்பதாகும். இத்திட்டத்தில் பங்கேற்றுச் சிறப்பாகத் திரு. பரத சக்ரவர்த்தி அவர்கள் பணியாற்றினார்.

அறம் கூறும் வழக்கு சமணர்களிடையே தீர்த்தங்கரர்கள் காலம் தொட்டு இருந்து வந்த மிகத் தொன்மையாக வழக்கமாகும். அறம் கூறத் தகுதியானவர் யார்? அறம் கேட்கத் தகுதியானவர் யார்? என்று எடுத்துரைக்கிறார் **அறநெறிச்சார (4)** ஆசிரியர் முனைப்பாடியார்.

> அறம்கேட்டு அருள்புரிந்து ஐம்புலன்கள் மாட்டும்
> இறங்காது இருசார் பொருளும் - துறந்துஅடங்கி
> மன்னுயிர்க்கு உய்ந்துபோம் வாயில் உரைப்பானேல்
> பன்னுதற்குப் பாற்பட் டவன்.

அறம் கூறும் தகுதி உடையவர், கற்று அறிந்த சான்றோர் வாயிலாக அறம் கேட்டு அறிந்தவராகவும், ஐம்புலன்களை அடக்கி ஆளும் வல்லமைக் கொண்டவராகவும், பற்றற்றவராகவும், நற்கதிக்கு வழிவகுக்கும் திறன் உடையவராகவும் இருத்தல் வேண்டும் என்கிறார் முனைப்பாடியார். இத்தகுதிகள் அனைத்தும்

பெற்ற திரு. பரதசக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரி அவர்கள் பல இடங்களில் ஆகம மற்றும் சமண தர்மத் தத்துவப் பயிற்சிகள் நடத்தி தமிழக சமண இளைஞர்களிடையே ஆன்மீக உணர்வு வளர வித்திட்டார். அவர் அறவுரை ஆற்றிய சமண சமயத் திருத்தலங்கள் பலவாகும்.

குந்த குந்தர் கல்வி நிறுவனத்தின் சார்பில் திரு. பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரி அவர்கள் சுமார் இரண்டரை ஆண்டுகள் **"சமயசார பரமாகமத்தை"** எழுத்துரையாக வழங்கி தூய ஆன்ம தத்துவத்தை எளிமையாக சாமானிய மக்களும் புரிந்துக் கொள்ள வழிவகுத்தார்.

வளத்தி கிராமத்தில் இயங்கி வந்த **"ஜைன இளைஞர் மன்றத்தினரின்"** வேண்டுகோளை ஏற்று மூன்றாண்டுகள் மாதம் ஒரு முறையாக அங்கு சென்று ஆகமக் கருத்துக்களை அறிமுகப்படுத்தி, தத்துவ விளக்கம் அளித்து உரையாற்றினார். தத்துவ விளக்கத்திற்காக எடுத்துக் கொண்ட நூலிற்கு (**திரவிய சங்கரம்**), தமிழில் விரிவாக உரை எழுதிக் கூட்டத்திற்கு வருகை தந்தவர்களுக்கு வழங்கியதோடு மட்டுமின்றி, அந்நூல் புத்தக வடிவிலும் வெளியிடப்பட்டது. அந்நூலுக்குத் தேவையான படம் வரைந்துக் கொடுத்தவர் தச்சூர் திரு. தமிழ்மாறன் அவர்கள் ஆவார்.

**"காஞ்சிபுரம் ஜைன தர்ம பிரசார சார்பில்"** திரு. பரத சக்ரவர்த்தி அவர்கள் 'சிராவக தர்மம்' என்ற தலைப்பில் ஏறக்குறைய நான்கு ஆண்டுகள் வகுப்புகள் நடத்தினார். அதன் நினைவாக 'ஸ்வரூப சம்போதனம்' 'சந்திரபிரப வாசுபூஜ்ய ஸ்துதி' 'கிரியா புத்தகம்' ஆகியவை வெளியிடப்பட்டன.

திரு. பரத சக்ரவர்த்தி அவர்கள் ஒவ்வொரு மாதமும் கடைசி ஞாயிறுகளில் ஆலகிராமம், கள்ளகொளத்தூர், பெரணமல்லூர் ஆகிய கிராமங்களில் தொடர்ந்து சமணசமய தத்துவங்களை

விளக்கிக் கிராம மக்கள் பெரிதும் பயன்பெறும் வகையில் சொற்பொழிவாற்றி ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினார்.

சென்னை இராமலிங்கபுரத்திலுள்ள **"ஸ்ரீ அகளங்க தேவர் அநேகாந்த மன்றத்தினர்"** அழைப்பை ஏற்று 1994-ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் 1995-ஆம் ஆண்டு ஜூலை மாதம் முடிய ஓர் ஆண்டு திரு. பரத சக்ரவர்த்தி அவர்கள் **'சிராவக தர்மம்', 'பதார்த்த சாரம்'** எனும் இரு நூல்களை விளக்கி சொற்பொழிவு ஆற்றினார். பல தத்துவ ஆர்வலர்கள் கலந்து கொண்ட அக்கூட்டம் 3ஆம், 4ஆம் ஞாயிறுகளில் காலை 10 மணி முதல் மதியம் 1 மணிவரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. மன்றத்தின் ஆண்டு நிறைவு நினைவாக **"அநேகாந்தமும் ஸ்யாத்வாதமும்"** என்ற ஜைன சித்தாந்தை தாங்கிய திரு. பரதசக்ரவர்த்தி அவர்களால் எழுதப்பட்ட நூல் வெளியிடப்பட்டது.

திரு. சாஸ்திரியார் அவர்கள் "அநேகாந்தமும், ஸ்யாத்வாதமும்" என்ற தலைப்பு மிகவும் நுட்பமானது, ஆழமானது. அதேசமயம் உறுதியானதும் கூட, அதைச் சரியான அடிப்படையில் புரிந்து கொள்ள வேண்டும். இல்லையேல் தவறுகள் நிகழ்வதைத் தடுக்க முடியாது" என்று குறிப்பிட்டுள்ளார்.

அண்மையில் (2002) 'அநேகாந்தவாதம், சியாத்வாதம்' என்ற நூல் **"ஜீவன் விக்யான் அகாடமி"**யினரால் வெளியிடப்பட்டுள்ளது. அந்நூலின் பதிப்புரையில் திரு. பிரேம் குமார் மனோத் அவர்கள் **"உண்மை பற்றிய பன்முக அணுகுமுறையே சமண சமயத்தின் உயர் தனிச் சிறப்பாகும். நனி சிறந்த நானிலத்திற்குச் சமண சமயம் புதுமையாக அளித்திட்ட பன்மிய அணுகுமுறைதான் அநேகாந்தவாதம். சமண சமயத்தின் அளப்பரிய அளவையியல் தத்துவம் இது"** என்று குறிப்பிட்டுள்ளார். அவ்வாறே திரு. எம். பி. மராதே அவர்கள் **சியாத்வாதம்** அல்லது **சப்தபங்கி** சமண சமயத்தின் மையக் கோட்பாட்டை விளக்குவதிலும், எடுத்துக் காட்டுவதிலும் மிக முக்கிய பங்கு வகிக்கிறதென்ற உண்மையைப் பல அறிஞர்கள்

ஏற்றுக் கொள்ளுகின்றனர் என்று தெளிவுபடுத்தியுள்ளார் (ப.414). திரு. சூரி ஹரிபத்ரா அவர்கள் மகாவீரரை **சியாத்-வாத-தேஷகா** (சியாத்வாத ஆசிரியர்) என்று குறிப்பிடுகின்றார். சமண சமயத்தின் ஆணிவேரான இத்தத்துவத்தை பரத சக்ரவர்த்தி அனைவரும் மிக எளிதில் புரிந்துக் கொள்ளும் வண்ணம்திரு. சாஸ்திரி அவர்களின் நூல் அமைந்துள்ளது பாராட்டுதலுக்குரியதாகும்.

## பயனடைந்தோர் :

சாஸ்திரி அவர்கள் சுமார் 56 ஆண்டுகள் சமண சமயத் தத்துவ விளக்கச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். அதன் பயனை அவரே கண்கூடாகக் காண முடிந்தது. அவர் ஆற்றிய சொற்பொழிவுகள் பல ஆகம தத்துவ நூல்களாகத் தமிழில் வெளியிடப்பட்டன. அதன் பயனாக :

- பலர் சமண சமயத் தத்தவத்தை அறிவதில் ஆர்வம் பெற்று ஆன்மீக நூல்களைப் பயின்றனர்.
- கிரந்தம், ஹிந்தி ஆகிய மொழிகளில் உள்ள பல தத்துவ நூல்கள், அவரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுத் தெளிவுரையுடன் வெளியிடப்பட்டன. (24 நூல்கள்)
- பல கிராமங்களில் பலர் தினம் ஜிநதரிசனம் செய்வதுடன் இரவு உண்ணாமையை கைக்கொண்டனர்.
- பலர் இரவு பால், பழம் மட்டும் ஏற்போம் என்று விரதம் ஏற்றனர்.
- மகளிர் பலர் பட்டு சேலை வாங்குவதையும, உடுத்துவதையும் விலக்கிவிட்டனர்.

## நூல்கள் வெளியீடு :

“ஆத்ம தர்மம்” என்ற இந்தி இதழின் தமிழ் பதிப்பின் நிர்வாக ஆசிரியராகப் பொறுப்பேற்று (1978) மிகச் சிறப்பாகப்

பணியாற்றினார். அவர் இயற்றிய "தர்மத்தின் பத்து லக்ஷணங்கள்", "இல்லற நெறி" ஆகிய இரு நூல்கள் சமண சமயத்தினரால் படித்து அறிந்து கொள்ள வேண்டிய தத்துவங்கள் அடங்கிய கருத்துக் கருவூலங்கள் ஆகும்.

திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள் தலைமையில் இயங்கி வந்த தமிழ்நாடு ஜைன சங்கத்தின் இதழான **'நல்லறம்'** மற்றும் ஜைன இளைஞர் மன்றம் நடத்தி வரும் **'முக்குடை'** ஆகிய இதழ்களில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

## சாஸ்திர விற்பன்னர் :

பிரதிஷ்டா சிரோமணி, வித்வத்ரத்ன, ஆத்மபந்து எனப்பல சிறப்புகளைப் பெற்று, தன்வாழ்நாளின் கடைசிவரை ஆன்மீக அற இலக்கிய, தத்துவப் பிரசாரத்திலேயே ஈடுபட்டு வாழ்ந்த திரு. தி.ச. பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரி அவர்கள் 1999-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 3-ஆம் நாள் சென்னையில் சுகதிபேறு அடைந்தார். அவர் நினைவைப் போற்றும் வகையில் ஜைன இளைஞர் மன்றம் **"ஜைன சமய வரலாறும் படைப்புக் கோட்பாடுகளும்"** என்ற நூலை வெளியிட்டுச் சிறப்பு செய்தது.

அவரது ஜென்ம பூமியான ஸ்ரீசைலபுரம் எனும் திருப்பறம்பூர் கிராமம், பல கவிஞர்கள், பேரறிஞர்கள், இலக்கிய மேதைகள், மெய்த்தவத் துறவிகள், சாஸ்திர விற்பன்னர்கள் போன்ற பல்வேறு துறை மேதைகளை ஈன்றெடுத்த புண்ணிய பூமி ஆகும். இப்பெருமைக்கு மேலும் சிறப்புச் சேர்த்த திரு. T.S. பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரி அவர்கள் என்றும் நம்நினைவில் வாழ்பவராவார். அவர் போற்றி போதித்த தத்துவங்களை நாம் கடைப்பிடிப்பதே நாம் அவருக்குச் செலுத்தும் சிறந்த அஞ்சலி ஆகும்.

## பிரதிஷ்டா சிரோண்மணி, வித்வத்ரத்ன ஆத்மபந்து
## தி.ச. பரதசக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரி அவர்களின் நூல்கள்

1. சாமாயிக பாடம்
2. தர்மத்தின் பத்து லக்ஷணங்கள்
3. உண்மையைத் தேடி...
4. சிந்தனை விருந்து
5. பாலபோத பாடமாலா I, II, III
6. யுக புருஷர் கான்ஜி சுவாமி
7. பிருஹத் திரவிய சங்க்ரகம் (தமிழ் வடிவம்)
8. அஷ்டபாகுடம் (தரிசனபாகுடம்)
9. வீதராக விஞ்ஞானம்
10. சுகம் எங்கே?
11. சந்திரபிரப சுவாமி தோத்திரம்
12. குந்துநாதாஷ்டகம்
13. பகவான் ஆதிநாதர்துதியும் சென்னை ஆதிநயினார் வரலாறும்
14. சமாதி சதகம் - 1989 (மூலமும் விளக்கமும் தமிழில்)
15. கிரமபத்த பர்யாயம்
16. ஸ்வரூப சம்போதனம்
17. கல்யாண மந்திர தோத்திரம்
18. பகவான் பாகுபலி
19. அர, மல்லி, முனிசுவிரத நாதர் துதி
20. மந்தாசலா தோத்திரம்
21. இஷ்டோபதேசம்
22. பூஜ்ய 108 சுதர்மசாகர்ஜி மகராஜ்
23. அநேகாந்தமும் சியாத்வாதமும் (நிமித்தம், உபாதானம்)-1995
24. சமயக் தரிசனம் (நற்காட்சி) 1996

வாணி பூஷன், பிரதிஷ்டாசாரியார்

## அ. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார்,

காவ்ய தீர்த்த, சாகித்ய இரத்தின, பிரவீன்




திரு. அ. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார் அவர்கள் மெய் தவத் துறவிகளும், அறநெறிச்சான்றோர்களும் வாழ்ந்த திவ்வியப் பதியான திருப்பறம்பூரில் 1924-ஆம் ஆண்டு அக்டோபர் 16-ஆம் நாள் திரு. அ. அப்பாண்டை பண்டிதர் திருமதி. சுவர்ணம்மாள் தம்பதியர்க்கு இரண்டாம் மகனாகப் பிறந்தார்.

இவர் ஆன்மீகச் சேவையில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு சமண தத்துவம் பூஜைமுறைகள், நோன்பு விதிமுறைகள், ஆகியவற்றை அனைவரும் எளிமையாகப் புரிந்து கடை பிடிக்கக்கூடிய விதத்தில் அறச்சொற்பொழிவுகள் ஆற்றியும், தமிழில் பல அறநூல்கள் எழுதி வெளியிட்டும் தொண்டாற்றி வருகிறார். மேலும் பல ஜிநாலய பிரதிஷ்டை விதிகளை நடத்தி, ‘சம்யக் ஞான பிரசார சங்கம்’ என்னும் ஒரு அமைப்பை ஏற்படுத்தியும் 60 ஆண்டுகளுக்கு மேலாக அறப்பணி செய்து வருகிறார்.

**கல்வி :**

இவர் இளம் வயதில் பிருதூர் கிராமத்தில் இவர்தம் பாட்டியார் வீட்டில் வளர்ந்தர். அங்கு ஆரம்பக் கல்வியை அவ்வூர் திரு. சாந்திநாத நயினாரிடத்தில் கிரந்த எழுத்தின் மூலம் பயின்றார். அதன் பின் திருப்பறம்பூரில் அரசினர் ஆரம்பப் பள்ளியில் பயின்றார். அதன்பின் கரந்தை கிராமத்தில் பிரம்மசாரி திரு. K. சூர்ய கோட்டி நயினார் அவர்கள் தூண்டுதலால் கரந்தை ஜிநாலயத்தில் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீ அகளங்க பாடசாலையில் அறபோதகராக இருந்த நெல்லியாங்குளம் திரு. நாபிராஜ் ஜெயின் அவர்களிடம் சமண சமயத் தத்துவங்களைப் பயின்றார். அதன் பின் வெண்பாக்கம் அரசினர் பள்ளியில் 8-ஆம் வகுப்புவரை பயின்றார். பின்னர் சென்னை திரு. ஆதி நயினார் மற்றும் அகளங்க பாடசாலை ஆசான் பண்டித் திரு. நாபிராஜ் ஜெயின் ஆகியோர் தூண்டுதலாலும் வழிகாட்டுதலாலும் சிரவணபெளிகுளம் சென்று (1938) கோமட. வித்யா பீடத்தில் சமண சமய தத்துவங்களைப் பயின்றார் (1940)

சமண தத்துவங்களையும், சாஸ்திரங்களையும் கற்று அறிந்தவர்கள் தமிழகத்திற்குத் தேவை என்ற எண்ணமுடைய திரு. ஆதி நயினார் அவர்களின் முயற்சியின் பயனாய் திரு. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார் அவர்களும் திரு. பரதசக்கரவர்த்தி ஜெயின்அவர்களும் சிரவணபெளிகுள பட்டாரக பீடாதிபதி ஸ்ரீ சாருகீர்த்தி பண்டிதராசார்யவர்ய மகாசுவாமிகளிடமும் திரு. சுப்பையா சாஸ்திரியார், திரு. அனந்தராஜ் சாஸ்திரியார் ஆகியோரிடமும் சமண சமய கல்வி பயிலச் சிரவணபெளிகுளம் சென்றனர் (1940) அங்கு வடமொழி, கன்னடம், இந்தி மற்றும் தர்ம நூல்களைப் பயின்றார்.

திரு. சாஸ்திரியார் அவர்கள் சமண சமய தத்துவங்களையும், சாத்திரங்களையும் மேலும் கற்று அறிய வேண்டும் என்ற ஆவல் மேலோங்கியதால் மத்திய பிரதேசத்தில் மொரைனா நகரில் உள்ள ஸ்ரீ கோபால் திகம்பர ஜையின சித்தாந்த வித்யாலயத்திலும், பின்னர்

சாகர் நகரில் உள்ள ஸ்ரீ கணேசவர்ணி திகம்பர் ஜெயின் வித்யாலயத்திலும் சேர்ந்து தனது கல்விப் பயணத்தைத் தொடர்ந்து 'காவ்யதீர்த்தா,' 'சாகித்ய ரத்னா', 'சாஸ்திரி' (வடமொழி) ஆகிய பட்டங்களைப் பெற்றார்.

மேலும் எஸ்.எஸ்.எல்.சி., வித்வான், இராஷ்டிரபாஷா, பிரவின் பிரசாரக் பயின்று தனது கல்வித் தகுதியை மேம்படுத்திக் கொண்டார். சென்னை, தட்சிணபாரத் இந்தி பிரச்சாரசபாவில் இந்தி ஆசிரியராகப் பயிற்சி பெற்றார்.

## ஆசிரியர் :

தாம் இன் புறுவ(து) உலகின் புறக்கண்டு.
காமுறுவர் கற்றறிந் தார் - 399.

எனும் குறளுக்கு ஒப்ப தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற நோக்கோடு திரு. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார் அவர்கள் இந்தி பயிற்றுவிக்கும் ஆசிரியர் பணியை மேற்கொண்டார். அழியாச் செல்வமான கல்விச் செல்வத்தை சிறுவர்க்குப் புகட்டுவது கற்றோர் இயல்பு ஆகும். 1949-ஆம் ஆண்டு முதல் சென்னையில் உள்ள ஜெயின் இந்தி ஆரம்பப் பள்ளியிலும், சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியிலும், சங்கரலிங்க நாடார் உயர்நிலைப் பள்ளியிலும் மற்றும் ஏ.ஜி. ஜெயின் உயர்நிலைப் பள்ளியிலும் ஆசிரியராகச் சிறப்பாகப் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

## ஆன்மீகச் சேவை :

திரு. சாஸ்திரியார் அவர்களின் தாத்தா திரு. நேமிச் சந்திர பண்டிதர், தந்தை திரு. அப்பாண்டை பண்டிதர் ஆவார்கள். பூஜை, பிரதிஷ்டை விதிகளின் கர்த்தாக்களான பண்டிதர்களின் மரபில் வந்ததால் திரு. சாஸ்திரியார் அவர்கள் அறப்பிரசாரத்திலும், பூஜைகள், பிரதிஷ்டைகள் செய்து வைப்பதிலும் மிக்க ஈடுபாடுடையவராக விளங்கி வருகிறார்.

இவர் கர்நாடகம் மற்றும் வடநாடு சென்று அங்குள்ள பல ஜினாலயங்களில் பஞ்ச கல்யாணக விதிமுறைகளை நடத்தியுள்ளார். **பர்யூஷண பர்வம்** என அழைக்கப்படும் தசலக்ஷணிக பருவ நாட்களில் மத்திய பிரதேசம், உத்தரப்பிரதேசம் முதலிய மாநிலங்களில் உள்ள சமண மக்கள் அழைப்பின்பேரில் அங்கு சென்று 10 நாட்கள் தங்கி அறவுரை ஆற்றி வருகிறார்.

சமண சமயத் துறவி பூஜ்ய **நிர்மல சாகர்** மகராஜ், பூஜ்ய **ஆர்ஜவ சாகர்** மகராஜ், சமண பெண் துறவி பூஜ்ய ஞானமதி மாதாஜி (ஹஸ்திநாபுரம்) பூஜ்ய பிரதம கணிணி ஆர்யிகா விஜயமதி மாதாஜீ, பூஜ்ய சுப்ரகாசமதி மாதாஜீ, பூஜ்ய சுபூக்ஷணமதி மாதாஜீ ஆகியோர் இந்தி மொழியில் உரைத்த அறத்தைத் தமிழில் மொழி பெயர்த்துக் கூறும் பணியை மேற்கொண்டும் சமயப் பணி ஆற்றியுள்ளார்.

1964ஆம் ஆண்டு ஹஸ்தினாபுரத்திலிருந்து புறப்பட்டு இந்தியா முழுவதும் சுற்றுலா வந்த **"ஜம்பூத்தீப ஞான ஜோதி"** என்கிற சுற்றுலா ஊர்தியுடன் கர்நாடகம், தமிழ்நாடு ஆகிய இரண்டு மாநிலங்களில் உடன் இருந்து அறப்பிரச்சாரம் செய்தார்.

பல கிராமங்களில் ஜினாலயம் கட்டுவதற்காக பூமிபூஜை செய்து, அந்த ஜினாலயம் உருவான பிறகு அதன் பஞ்சகல்யாணக விதிமுறைகளையும் நடத்தி வைத்தார். இவர் நல்ல கைராசிக்காரர். பூஜாவிதி, பிரதிஷ்டா விதி, அறப்பிரசாரம் ஆகியவைகளில் கைதேர்ந்தவர். அறநூல் எழுதுவதிலும் இவர் திறமைசாலி ஆவார்.

## நூல்கள் வெளியீடு :

திரு. சிம்மசந்திர சாஸ்திரியார் அவர்கள், **'சம்யக்ஞான பிரசார சங்கம்'** மற்றும் **'இரத்தின திரய மாதர் சங்கம்'** மூலம் பல தத்துவ நூல்களையும், வரலாறு மற்றும் வழிபாட்டு நூல்களையும், சிறுவர், சிறுமியரிடையே இறை உணர்வையும், ஆலய வழிபாட்டு வழக்கத்தையும் ஊக்குவிக்கும் நோக்கோடு, **'பாலர் மலர்'** (12+3)

என்ற நூலையும் வெளியிட்டு அவர்களிடையே சமணசமயத் தத்துவங்களையும், நெறிகளையும் அறிந்து கொள்ளும் வாய்ப்பினை ஏற்படுத்தினார்.

அவர் இயற்றிய சமண நெறியும் வழிபாட்டு முறையும், ஸ்ரீசித்த சக்ர விதானத்தின் மகிமை, பிரதிஷ்டை பிரபந்தம் ரத்தினத்திரய விதானம் - ஆகிய நூல்கள் பூஜைகள், பிரதிஷ்டைகள், விதானங்கள் செய்வோர்க்கு ஒரு வழிகாட்டி நூல்களாக அமைந்தன.

எனவே ஏறத்தாழ 60 ஆண்டுகள் ஆன்மீகச் சேவையில் ஈடுபட்டும், சமணத் தத்துவங்களை விளக்கி அறச் சொற்பொழிவுகள் ஆற்றியும், பல ஆலயங்களில் நடந்த ப்ரதிஷ்டைகளை ஆகம வழிமுறைகள்படி மிகச் சிறப்பாகச் செய்துவைத்தும், சமயப்பணி செய்து வருகிறார்.

ஆகமக் கருத்துக்கள், சமய தத்துவங்கள், பூஜா விதிகள், விதான வழி முறைகள் ஆகியவற்றை அனைவரும் புரிந்துக் கொண்டு வழிபடுவதே சிறப்புடையது என்பதை உணர்ந்து, வடமொழி கிரந்தம் ஆகிய தமிழ் அல்லாத வேற்று மொழியில் இருந்த பூஜா, விதான, ஆகம நூல்களை அழகுறத் தமிழ்ப் படுத்தி அனைவரும் ஈடுபாடுடன் இறைவனை வழிபட வழி வகுத்தார்.

திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள் தலைமையில் இயங்கி வந்த **'தமிழ்நாடு ஜைன் சங்கத்தி'**ன் துணைச் செயலாளர் மற்றும் பொருளாளர் என்ற முறையில் சங்கத்தின் அனைத்து செயல்களிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டு செயலாற்றினார். இன்னும் சமண சமயக் கருத்துக்களை மிகத் தெளிவாக அனைவரும் புரிந்து கொள்ளும் விதமாக தொடர்ந்து **'நல்லறம்'** மற்றும் **'முக்குடை'** இதழ்களில் கட்டுரைகள் எழுதி அனைவரிடையேயும் ஆன்மிக உணர்வைச் மேம்படுத்தப் பாடுபட்டுவருகிறார்.

## ஆதி பகவன் ஆலயம் :

சென்னை ஆதம்பாக்கம் பகுதியில் 100க்கும் அதிகமான சமண சமயச் சான்றோர்கள் குடியிருந்து வருகின்றனர். அவர்கள் நித்திய ஆலய வழிபாடு செய்ய, கோயில் ஒன்று அமைக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டு ஜைனப் பெருமக்களின் உதவி பெற்று அதற்கான முயற்சியில் ஈடுபட்டு வெற்றியும் கண்டார். அவரால் உருவாக்கப்பட்ட ஸ்ரீ ஆதிநாத பகவன் ஆலயம் இன்று சிறுவர், சிறுமியர், இளைஞர்கள், சமண சமயச் சான்றோர் அனைவரும் நித்திய ஆலய வழிபாடு செய்யவும், முனிவர்கள் தங்கி தினம் அறவுரை ஆற்றவும் தக்க இடமாக அமைந்துள்ளது.

### சாகித்ய ரத்னா திரு. அ. சிம்மசந்திர ஜைன் சாஸ்திரியார் இயற்றிய நூல்கள் :

1. ஜைன தோத்திர மாலை
2. பாவ சாகரோத்ரண நோன்பும் கதையும்
3. பாலர் மலர் பாகம் 1, 2, 3.
4. தத்துவார்த்த சூத்திரம் (உரையுடன்) 1992. சம்யக்ஞான பிரசார சங்கம், சென்னை-88.
5. பக்தாமர ஸ்தோத்திர ஞானதீபிகை 1. பூஜையும் யந்திரங்களும்.
6. பக்தாமர ஸ்தோத்திர ஞானதீபிகை 2. சுலோகங்கள் உரையுடன்.
7. பக்தாமர ஸ்தோத்திர பக்திக் கதைகள். 1989 சம்யக்ஞான பிரசார சங்கம், சென்னை-88.
8. சமண சமய நோன்பு - விதிமுறைகளும் கதைகளும்.
9. கர்வத்தை விடு, தியானத்தைச் செய். (மொழி பெயர்ப்பு)
10. உண்மை சுகத்திற்கு வழி.

11. பேரழகர் கோமடேஸ்வர பாகுபலி, 2006 சம்யக்ஞான பிரசார சங்கம், சென்னை-88.
12. க்ஷேத்திர பாலகர் பூஜையும் வரலாறும்.
13. சமண நெறியும் வழிபாட்டு முறையும்.
14. சமண சமய திகம்பரத் துறவியரின் ஒழுக்கமும் வரலாறும்.
15. உயிர்மீது கருணையும் தாவர உணவின் பெருமையும் (மொழிபெயர்ப்பு)
16. ஆதிபகவான் முதற்றே உலகு (தொகுப்புக் கட்டுரை)
17. ஸ்ரீசித்த சக்ர விதானத்தின் மகிமை.
18. பத்தற விளக்கம்.
19. பிரதிஷ்டை பிரபந்தம்.
20. பஞ்சகல்யாண விஞ்ஞான ஆய்வு (மொழி பெயர்ப்பு).
21. சமணர் வாக்கு - கதையுடன் (மொழி பெயர்ப்பு).
22. சமண தத்துவ விளக்கம் (பிரவசன நிர் தேசிகா).
23. எக்ஞோபவீதம் (பூணூல்) பற்றிய ஆய்வு (இருமுறை பதிப்பு 2006).
24. ரிஷி மண்டல விதானம்.
25. ரத்னத்ரய விதானம்.
26. ஆதித்ய வார நோன்பும், கதையும், பூஜையும்.
27. ஸ்ரீ விருஷப ஸ்வாமி அஷ்டோத்தர சதநாம தோத்திரம்.
28. ஸ்ரீபகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு.
29. அட்சயத் திருதியை வரலாறு.
30. சமண நெறியில் திருமணச் சடங்கு.

31. நல்லறச் சிந்தனைகள்

32. ஜைன தீர்த்தவந்தனை

33. தமிழ்நாடு ஜைன் குகாலய (இந்தி)

34. தமிழ்நாடு கேப்ரமுக ஜைன் தீர்த்த ஒர்மார்க தர்ஸந் (இந்தி)

35. நீதிக்கதைக் கொத்து (மொழி பெயர்ப்பு)

36. ஆசார்ய குந்த குந்தரும் தென்னிந்திய கலாசாரமும் (மொழி பெயர்ப்பு) கட்டுரை முக்குடை, அக் 1988)

37. ரக்ஷாபந்தன் பருவ வரலாறு (1990).

38. நித்திய நியம பூஜை.

39. நிரஞ்ஞனத் துதி
(கன்னட மொழியிலிருந்து மொழி பெயர்ப்பு)

40. நந்தீஸ்வர அஷ்டானிக பூஜா விதானம்

41. ஆகம விளக்கம் (முக்குடை 1979)

42. சிந்தனைச் சோலை. (ஸ்யாத்வாத பாலர் பயிற்சி)

43. ஸ்ரீ சந்திரநாதாஷ்டகம், ஸ்ரீஅகளங்காஷ்டகம் - 1995.

44. பால விஞ்ஞானம் (மொழி பெயர்ப்பு)



# உண்மை சுகத்திற்கு வழி

**அ. சிம்ம சந்திர ஜெயின் சாஸ்திரியார் ப.146-147**

## உண்மை சுகம் எது?

*- ஆசை நிறைவேறுவதால் உண்மை சுகம் இல்லை. ஆசையைக் குறைப்பதிலும், ஆசை அடியோடு இல்லாமலிருப்பதாலும்தான் உண்மை சுகம் உண்டு.*

*-மனைவி, மக்கள், நண்பர் உற்றார் உறவினர் மற்றும் புறப் பொருட்கள் ஆகியவற்றில் ஆசை இல்லாமலிருப்பது மட்டுமல்லாமல் தனது உடலையே தனது எனக்கருதாது நடுநிலை வகிப்பதிலேயே உண்மை சுகம் உண்டு.*

*- எந்தச் சுகத்தை அனுபவிப்பதில் தனக்கும் பிறருக்கும் துன்பம் ஏற்படாதோ அதுவே உண்மை சுகமாகும்.*

*- எந்த சுகத்தை நிரந்தரமாக அனுபவிப்பதில் மனம் சலிப்படையாதோ அதுவே உண்மை சுகம்.*

*- எந்தச் சுகம் பிற பொருளைச் சார்ந்து இருப்பதில்லையோ நடுநிலையிலும் சுதந்திரமாகவும் உள்ளதோ அதுவே உண்மை சுகம்.*

*- உண்மை சுகத்தை எவராலும் எவருக்கும் கொடுக்க முடியாது.*

*- உண்மை சுகம் பொருளைக் கொண்டோ வேறு சாதனையினாலோ விலை கொடுத்து வாங்க முடியாது.*

*- உண்மை சுகத்தைப் பெறுவதில் வேறு மனிதன் இடையூறு விளைவிக்க முடியாது.*

*- உண்மை சுகம் தன்னில், தன்னுடைய ஆன்மாவில் தான் பெற முடியும்.*

**- எந்த சுகம் இத்தகு கோணங்களில் உண்மையை விளக்குகிறதோ அதுவே நிரந்தரமான சரியான சுகம் ஆகும்.**

## திரு. எசோதர சாஸ்திரியார்

ஸ்ரீசைலபுரம் எனும் திருப்பறம்பூர் கிராமம் கவிஞர்கள், பேரறிஞர்கள், இலக்கிய மேதைகள், மெய்த்தவத்துறவிகள், சாஸ்திர விற்பன்னர்கள் போன்ற பல்வேறு துறை மேதைகள் ஈன்றெடுத்த புண்ணிய பூமி. (ஆத்மபந்து திரு, பரத சக்ரவர்த்தி சாஸ்திரியார் 1988). கடந்த இரு நூற்றாண்டுகளில் இல்லறத்தாருக்கு நல்லறம் காட்டி துறவறம் மேற்கொண்டு விண்ணுலகு எய்தியோர் பலர். இங்கு எழுதப்பட்ட வரலாறுகளை விட எழுதப்படாமல் விடுபட்ட வரலாறுகளே அதிகம். திருப்பறம்பூர் திரு. எசோதரசாஸ்திரி அவர்கள் தமிழ், வடமொழி ஆகியவற்றில் வல்லவராக விளங்கியவர் ஆவார். ஆனால் அவரைப் பற்றிய குறிப்புகள் ஏதும் நமக்கு கிடைக்காமல் போனது ஒரு பேரிழப்பாகும். அறிஞர் எசோதர சாஸ்திரியார் அவர்களால் இயற்றப்பட்ட சமண சமயப் பாடல்கள் சிலவற்றை திருப்பறம்பூர் ஆசிரியர். திரு. ஜே. தரணேந்திரன் அவர்கள் (ஆலயப் பணிகளில் இவரைப் போற்றாதவர் இல்லை' என்று திரு. கஜபதி ஜெயின் அவர்களால் பாராட்டப்பட்டவர்) திருப்பறம்பூர் ஆலயத்தில் உள்ள பழைய ஏடுகளில் இருந்து எடுத்து, தொகுத்து 'பழம்பெரும் சமண பாடல்கள்' (1983) என்ற தலைப்பில் அச்சிடப்பட்டு வெளியிட்டுள்ளார். அத்தொகுப்பிலிருந்து ஒரு பாடல் அவர் நினைவைப் போற்றும் வகையில் இங்கு பதிவு செய்யப்பட்டுள்ளது.

பாடல் - 14

அப்பா பறம்பை நகர்வாசா

எனக்கார் துணை புஷ்பதந்தேசா

செப்பினாய் யாவும் நேசா - உந்தன்

மலரடி பணிந்தேன் ஜினேசா (அப்பா)

சீலம் எட்டுடை யரு கேசா-சதுர்

கதிகளை வென்றாய் புனிதேசா

மேலே வானவர் போற்றும் ஈசா

உந்தன் திருவடி பணிந்தேன் ஞானேசா (அப்பா)

மதியில்லா மூடர் தம்மால் கெட்டு

உந்தன் மகிமை அறியாமல் நான் விட்டு

பெரியோர் தர்மத்தை காதில் கேட்டு

உந்தன் எழிலடி பணிந்தேன் ஸ்ரீபாலா (அப்பா)

பழம்பெரும் சமணப் பாடல்கள்
ஜி. தரணேந்திரன், திருப்பறம்பூர் (1982)



## 5. 108 ஸ்ரீ தரும சாகர சுவாமிகள் நூல் நிலையம்

ஜீவபந்து திரு. டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் திருப்பறம்பூரில் தங்கி இருந்தபோது (1900-25) திருப்பறம்பூர், கரந்தை, வெண்பாக்கம் கிராம மக்கள் சமண தத்துவங்களையும் இலக்கியங்களையும் அறிந்துக் கொள்ளவும் அவர்களிடையே சமணசமய நூல்களைப் படிக்கும் ஆர்வத்தை வளர்க்கவும், மேலும் பல அரிய நூல்களைப் பாதுகாக்கவும் ஓர் நூல் நிலையம் அமைக்க விழைந்தார். அக்காலத்தில் (1922) தமிழகத்தில் நூல் நிலையங்களின் அவசியத்தை உணர்தவர்கள் மிகச் சிலரே. அந்தக் காலக்கட்டத்தில் மிகுந்த தீர்க்க தரிசனத்தோடு நூல் நிலையம் அமைக்க முனைந்த அவரின் முயற்சிக்கு கிராம மக்கள் நிறைந்த ஆதரவு அளித்தனர்.

திருப்பறம்பூரில் பிறந்தவரும், ஆன்மீகத்தில் ஆழ்ந்த பற்று கொண்ட பெருமான் ஸ்ரீ தர்ம சாகர சுாவமிகள் 1924-25 ஆம் ஆண்டுகளில் வடநாடு சென்று தவமிருந்து வந்தார். அவர் சமணர்களிடையே மிக்க வணக்கத்திற்குரியவராகவும், போற்றுதலுக்குரியவராகவும் இருந்தார். எனவே அவரின் நினைவைப் போற்றும் வகையில் சுவாமிகளின் பிறந்த ஊரில் துவங்கப்போகும் நூல்நிலையத்திற்கு **'ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் நூல் நிலையம்'** என்று பெயர் வைக்க முடிவு செய்தார். முதன் முதலில் சமணருக்கென சென்னையில் ஒரு கோயில் கட்டியவரும், திருப்பறம்பூரில் பிறந்தவருமான திரு. தி. ஆதி நயினார் அவர்களை அழைத்து நூலகத்தின் திறப்புவிழாவை 1922ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 5ஆம் நாளன்று மிக விமரிசையாக நடத்தி வைத்தார்.

ஆரா நகரில் தவம்புரிந்து கொண்டிருந்த ஸ்ரீ தர்மசாகர் சுவாமிகள், திரு. குமார் தேவேந்திர பிரசாத் ஜெயின் (சென்ட்ரல் ஜெயினா பப்ளிஷிங் ஹவுஸின் மேலதிகாரி) அவர்கள் மூலம் 1923-ஆம் ஆண்டில் அவரிடம் இருந்த வடமொழி, இந்தி, கன்னடம், மராத்தி, குஜராத்தி நூல்களை இந்நூல் நிலையத்திற்கு அனுப்பி வைத்தார். முனி ஸ்ரீ தர்ம சாகர் அவர்களின் குமாரரான முனி ஸ்ரீ சுதர்ம சாகர் அவர்களும் இந்நூல் நிலையத்திற்கு பல அரிய நூல்களை அன்பளிப்பாக அளித்துள்ளார் (1974).

திரு. தி.மே. புஷ்பநாத நயினார் அவர்கள் ஸ்ரீசைலபுரமென்னும் திருப்பறம்பூர் தருமசாகர் சுவாமிகள் சங்கத்தின் காரியதரிசி ஆவார். (தருமசீலன் பிப்ரவரி, 1920) சில ஆண்டுகள் திருப்பறம்பூர் திரு. தி.மே. புஷ்பநாத நயினார் அவர்கள் இந்நூல் நிலையத்தை நன்கு பாதுகாத்து வந்தார். பல மொழிகளை நன்கு அறிந்தவராகத் திகழ்ந்த அவர் ஸ்தவநிதி க்ஷேத்திரம் சென்று அங்கேயே சுகதிபேறு அடைந்தார்.

1925ல் திருப்பறம்பூர் கிராம முன்சீப்பாக இருந்த திரு. தி.ந.. அப்பாவு ஜெயின் அவர்கள் திரு. தேவேந்திர ஆர்யா எனும் இந்திமொழி வல்லுனரைக் கொண்டு கிராம சிறுவர்களுக்கு இந்தி வகுப்புகள் நடத்திச் சமண சமயம் குறித்த இந்தி நூல்களை சிறுவர்கள் கற்று அறிய வழிவகை செய்தார். இந்த நூல்நிலையத்தின் வளர்ச்சியில் துவக்க காலங்களில் மிகவும் ஈடுபாட்டுடன் செயல்பட்ட திரு. அழகப்ப நயினார் அவர்கள் தமிழ், ஆங்கிலம், அறிந்தவர் ஆவார்.

1976-ஆம் ஆண்டு திருப்பறம்பூர் பகவான் புஷ்பதந்த தீர்த்தங்கரர் கோயிலுக்கு வருகை தந்த ஸ்ரீ சாஹு சாந்தி பிரசாத் ஜெயின் அவர்கள், இந்நூல் நிலையத்தையும் பார்வையிட்டார். அவர் ரூ.1500 பெறுமானமுள்ள பாரதீய ஞானபீட வெளியிட்டு நூல்களை இந்நூலகத்திற்கு அறநூல் கொடையாக வழங்கினார்.

இந்நூல் நிலையத்தில் உள்ள தமிழ், இந்தி, வடமொழி ஓலைச்சுவடிகளையும், நூல்களையும் பயன்படுத்திப் பல எழுத்தாளர்களும், ஆராய்ச்சியாளர்களும் பல அரிய நூல்களை வெளியிட்டுள்ளனர்.

## "ஸ்ரீ ஜினாநந்தம்" பகவான் ஸ்ரீ மகாவீரரின் வரலாறு :

திரு. யோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள் திருப்பறம்பூருக்கு வருகைத் தந்து சில நாட்கள் தங்கியிருந்து **'ஸ்ரீ ஜினாநந்தம்'** (மகாவீரரின் வரலாறு) எனும் கவிதை நூலை இயற்றினார். இந்நூல் ஸ்ரீ தரும சாகர சுவாமி நூல் நிலையத்தின் நிதியிலிருந்து அச்சிடப்பட்டு திரு. தி. ஆதிநயினார் அவர்களால் (1928) வெளியிடப்பட்டதாகும்.

இந்நூல் நிலையத்தில் இருந்த ஏட்டுச் சுவடிகளையும், நூல்களையும் பயன்படுத்தி காஞ்சிபுரம் திரு. அனந்தநாத நயினார் அவர்கள் **"திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைனசமய சித்தாந்தமும்"** என்ற ஆய்வு நூலை 1932-ஆம் ஆண்டு வெளியிட்டார். அவ்வாறே தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் வல்லுனரான தத்துவமேதை பேராசிரியர் திரு. எஸ்.ஏ. ஜெயின் அவர்கள் **'மெய்மை' (Reality)** என்ற ஆங்கில நூலை வெளியிட இந்நூல் நிலையம் அடித்தளமாக அமைந்தது.

இந்நூல் நிலையத்தின் ஓலைச்சுவடியில் இருந்து **"அடிமதிக்குடி அய்யனார் பிள்ளைத் தமிழ்"** என்னும் நூலை சென்னைப் பல்கலைக் கழகம் (1976) வெளியிட்டது. இந்நூல் முதல் முதலாக பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்ட ஒரு சமண தமிழ் நூலாகும். இந்நூல் வெளியிடுவதற்கு தேவையான ஓலைச்சுவடியை வழங்கிய "ஸ்ரீ தரும சாகர சுவாமிகள் நூல் நிலையத்தைப்" பல்கலைக் கழகப் பதிப்பாளர்கள் பாராட்டி நன்றி தெரிவித்துள்ளனர்.

திருப்பறம்பூர் தத்துவமேதை திரு. ச. கஜபதி ஜெயின்

அவர்கள் 1974-ஆம் ஆண்டு முதல் திருப்பறம்பூரிலேயே தங்கியிருந்த காலங்களில் ஸ்ரீ தரும சாகர நூல் நிலையத்தை முழுமையாகப் பயன்படுத்தியது மட்டுமின்றி, நூல்களுக்கான இருப்பு ஏடுகளை - மொழிவாரியாக எழுதி நூல் நிலையத்தைச் செம்மைப்படுத்தினர். மேலும் அவர் சேகரித்து வைத்திருந்த அரிய நூல்களையும் இந்நூலகத்திற்கு அளிக்குமாறு பணித்துச் சென்றார்.

திரு. ச. கஜபதி ஜெயின் அவர்கள், ஸ்ரீ தர்ம சாகர ஸ்வாமிகள் நூல் நிலையத்தில் **பண்டித தௌலத் ராம் காச்லீவால்** அவர்கள் படைத்த இந்தி உரைநடையில் அமைந்த '**பத்மபுராண**'த்தைக் கண்டெடுத்தார். அந்நூலை அழகுறத் தமிழ்ப்படுத்தி, '**ஜைன ராமாயண**'த்தைப் படைத்தார். அனைவரும் போற்றும் வகையில் அமைந்த அந்நூலை 1979-ஆம் ஆண்டு மிகச் சிறப்பாக 'ஜைன இளைஞர் மன்றம்', வெளியிட்டு சிறப்பித்தது.

திரு. ச. கஜபதி ஜெயின் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய "History of Thirupparambur Shree Dharma Sagara Swamigal Library" என்ற நூல், திரு. சு. சம்பந்தம் அவர்களால் தமிழ் ஆக்கம் செய்யப்பட்டு, நூல் நிலையத்தின் 55-ஆம் ஆண்டு நிறைவு விழாவின் போது, திருப்பறம்பூர் சிராவக சிராவிகளால் வெளியிடப்பட்டது.

'சன்டே ஸ்டாண்டர்டு' ஆங்கில இதழிலும் (25.09.1977) 'தினமணி சுடர்' தமிழ் இதழிலும் (25.09.1977) இவ்விரு சிறப்புக் கட்டுரைகளின் மறுபதிப்பை பக்கத்தில் காணவும். இந்நூல் நிலையம் பற்றி சிறப்புக் கட்டுரைகள் வெளியிட்டுள்ளன. "**ஸ்ரீ தர்ம சாகர சுவாமிகள் நூல் நிலையம் ஜைன சாஸ்திர பொக்கிஷமாக விளங்கி மக்களுக்கு அறிவு விருந்து அளித்து வருகின்றது**" என்ற திரு. ஜீவபந்து ஸ்ரீபால் (முக்குடை 1973 நவம்பர் ப.8) அவர்களின் கூற்றை மெய்ப்பிப்பதே இந்நூல் நிலையத்தைத் தோற்றுவித்தவர்களுக்கு நாம் செலுத்தக் கூடிய நன்றிக் கடனாகும்.

## 6. 108 ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகள் நினைவு மண்டபம்

### (அகளங்கர் திகம்பர் ஜெயின் சமஸ்கிருத் பாடசாலை)

வரலாற்றுச் சிறப்பு மிக்க கோயில்களும், பல மாமுனிவர்களும், அறநெறிச் சான்றோர்களும் தோன்றிய புகழுக்குரியதுமான கரந்தை - திருப்பறம்பூர் கிராமங்களை நோக்கி, பல ஊர்களிலிருந்து சமண சமயத்தினர் ஆலய வழிபாட்டிற்கு வருகை தருவது வாடிக்கை. அவ்வாறு வருவோரை வரவேற்றுத் தங்கும் இடமும், உண்ண உணவும் அளித்து வழியனுப்பி வைப்பது இல்லறத்தார் கடமை ஆகும். இதை நன்கு உணர்ந்த திரு. தி. ஆதி நயினார் அவர்கள் தனது பிறந்த ஊரான திருப்பறம்பூரில் ஒரு தர்மசாலை நிறுவ முடிவு செய்தார். அவ்வாறே அவர் தனது சொந்த செலவில் திருப்பறம்பூர் குளத்தருகில் ஒரு தர்மசாலையைக் கட்டி முடித்தார். அந்தத் தர்மசாலையில் சில ஆண்டுகள் 'ஸ்ரீ அகளங்க சமஸ்கிருத ஜெயின் பாடசாலை' செயல்பட்டு வந்தது. அங்கு 1-5 ஆம் வகுப்பு மாணவர்களுக்குப் பொதுக் கல்வியுடன் சமண சமயத் தத்துவங்களும், பாடல்களும் கற்பிக்கப்பட்டன. சாத்திரங்கள் கற்று அறிந்த வல்லுனர்களான திரு. பண்டிட் நாபிராஜ் ஜெயின் அவர்களும், திரு. பார்சுவநாத ஜெயின் (பின்னர் தீட்சைஷ பெற்ற, ஸ்ரீ சுதர்ம சாகர முனி மகராஜ்) அவர்களும் அங்கு ஆசிரியர்களாகப் பணியாற்றியவர்கள் ஆவர். வாணிபூஷன், பிரதிஷ்டாசாரியார், சாகித்யரத்னா திரு. அ. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார் அவர்கள் திரு. நாபிராஜ் அவர்களிடம் ஆரம்பக் கல்வி பயின்றவர் ஆவார். திரு. பார்சுவநாத

ஜெயின் அவர்கள் பிரம்மசர்ய விரதம் ஏற்று, ஓர் உடை மட்டுமே உடுத்தி ஆசிரியராகப் பணியாற்றியபோது (1945 - 48) இந்நூலாசிரியராகிய யான் அவரிடம் கல்வி பயின்ற பேறு பெற்றவன் ஆவேன்.

### நினைவு மண்டபம் :

திரு. தி. ஆதி நயினார் அவர்கள் கட்டிய சத்திரத்தின் பின் பகுதியில் மெய்த்தவத்தால் இயற்கை எய்திய ஸ்ரீ 108 சுதர்ம சாகர முனிவரின் நினைவாக ஒரு புதிய மண்டபம் கட்டப்பட்டது. அம்மண்டபத்தின் திறப்பு விழா 1975 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 27-ஆம் நாள் மிகச் சிறப்பாக நடைபெற்றது. முனிவரின் நினைவாக அமைக்கப்பட்ட அம்மண்டபத்தின் உருவாக்கம் "கற்பனைக்கு அப்பாற்பட்ட சில சம்பவங்களை" அடிப்படையாகக் கொண்டது.

### திரு. மிஸ்ரிசந்த் ஜெயின், கல்கத்தா :

திரு. மிஸ்ரிசந்த் ஜெயின் அவர்களும் அவர் துணைவியார் திருமதி. சகுந்தலா தேவி ஜெயின் அவர்களும் 1964-ஆம் ஆண்டில் கல்கத்தாவில் குடியிருந்தனர். அவர்களுக்கு இரண்டு ஆண் குழந்தைகளும், ஒரு பெண் குழந்தையும் பிறந்தன. இம்மூவரும் சிறப்பாக வளர்ந்து வந்தனர். திரு. மிஸ்ரிசந்த் ஜெயின் அவர்கள் பிளைவுட் வியாபாரம் செய்து வந்தார். அவர் பொருளீட்டும் ஆர்வம் உடையவராகவும், சமயப்பற்றில்லா தவராகவும், கம்யூனிஸ்ட் கட்சியில் ஈடுபாடு கொண்டும் வாழ்ந்து வந்தார். ஆனால் அவரது துணைவியாரோ, ஸ்வேதாம்பர ஜெயின் கொள்கையைப் பின்பற்றி மிக்க பக்தியுடையவராகத் திகழ்ந்தார்.

அவர்களின் வாழ்க்கைப் பயணத்தை மாற்றும் சம்பவம் 1966-ஆம் ஆண்டில் நடைபெற்றது. திருமதி சகுந்தலா தேவி ஜெயின் அவர்கள் தாங்க முடியாத தலைவலியால் துன்புற்றார். 24

மணி நேரமும் வலியுடன் போராடுவதே அவரின் ஓயாத துன்பமாகிவிட்டது. இரவு பகல் தூக்கமே இல்லாமல் துன்புற்றார். அதன் காரணமாகக் குடும்பத்தில் அமைதி குலைந்துவிட்டது. பல நகரங்களில் உள்ள சிறந்த மருத்துவர்களிடம் சிகிச்சைப் பெற்றும் அவரது நோயில் எந்தவித மாற்றமும் இல்லை.

## கனவும் காட்சியும் :

திருமதி. சகுந்தலா தேவி ஜெயின் அவாகள் 1966-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20-ஆம் நாள் நடுப்பகல் தூக்கத்தில் ஒரு கனவு கண்டார். அக்கனவில் **"அவர் ஒரு கிராமத்திலுள்ள ஒரு ஜினாலயத்தின் முன் நின்றிருப்பதையும், அருகில் உள்ள குகையில் திகம்பர் ஜெயின் முனிவர் தவமிருப்பதையும், அப்போது ஒரு பக்தர் திருமதி. சகுந்தலா ஜெயின் அவர்களைப் பார்த்து "நீங்கள் இம்மகானைத் தரிசித்தால் உங்கள் துன்பம் நீங்கும்" என்று கூறுவதையும் கேட்டு, அவர் அம்முனிவரை பக்தியுடன் தரிசிப்பதையும் கண்டார்."** எல்லாம் கனவில்தான். தூக்கம் கலைந்து விழித்தவுடன் அவர் கனவில் கண்ட அனைத்தும் அவர் நினைவுக்கு வந்தன. ஆனால் அதிசயிக்கும் விதமாக இதுநாள் வரை அவரை வாட்டிய நோய் சிறிதும் இல்லாமல் போய்விட்டது. இந்நிகழ்ச்சி அவர்கள் ஆர்வத்தை தூண்டியது. அந்த கோயில் எங்கு உள்ளது? அந்த முனிவர் யார்? என்ற கேள்விகளுக்கு விடை அறியத் துடித்தார்.

அவர் கனவு கண்ட மூன்று நாட்களுக்குப் பின் பம்பாய் செய்தித்தாளில் (20.09.1973) 'நாசிக் அருகில் உள்ள மகசரூள் என்ற கிராமத்தில் முனி ஸ்ரீ **108** சுதர்ம சாகர் தவ நிலையில் இருக்கும் போது அவர் எதிரில் ஒரு கொடிய கருநாகம் படம் எடுத்து நின்றது. சுவாமிகள் தமது மயில் பிஞ்சத்தால் நாகத்தை ஆசிர்வதித்து "உன் வேலை முடிந்தது. இனி நீ செல்லலாம்" என்றதும், அந்நாகம் சென்று மறைந்தது' என்ற செய்தியை படத்துடன் வெளியிட்டிருந்தது. அச்செய்தியைக் கண்ட திருமதி.

சகுந்தலா ஜெயின் அவர்கள் வியப்பில் ஆழ்ந்தார். அவரது கனவில் தோன்றிய முனிவரும், செய்தித்தாளில் கண்ட முனிவரும் ஒருவரே என்பதை உணர்ந்தார்.

குடும்பத்தினர் அனைவரும் முனிவரை தரிசிக்க12.10.1973 அன்று நாசிக் அருகில் 8 கி.மீ. தூரத்தில் உள்ள கஜபந்தா சென்று அந்த அதிசயம் நிகழ்ந்த இடத்தை அடைந்தனர். திரு. சகுந்தலா ஜெயின் அவர்களின் கனவில் கண்ட கோயிலும், குகையும் அங்கு இருப்பது கண்டு 'என்னே அதிசயம்!' என்று வியந்தனர். அவர் கனவில் தோன்றிய பக்தர் அந்த கோயில் நிர்வாகியான ஸ்ரீ ராஜேந்திரகுமார் பாட்னி என்பதையும் அறிந்தார். திரு. பாட்னி அவர்கள், "உங்கள் முன் தோன்றிய மகான் ஸ்ரீ சுதர்ம சாகர்" என்றும், "அவர் 24.9.73 அன்றே ஆன்ம விடுதலைப் பெற்றார்" என்றும் கூறினார். மேலும் அவர் பூஜ்ய மாமுனிவர் மறைந்த அன்று நிகழ்ந்த அதிசய நிகழ்ச்சிகளை விவரித்துக் கூறியபோது கணவன் மனைவி இருவரும் மெய்மறந்துப் பக்தி பரவசமாயினர்.

***பூஜ்ய மாமுனிவர் மறைந்த அன்று நிகழ்ந்த அதிசய நிகழ்ச்சி.*** *அன்று பெருமழை பொழிந்து கொண்டிருந்தது. திடீரென்று மழை ஓய்ந்துவிட்டது. இவ்வளவு மழைக்கிடையிலும் முனிவரின் பூத உடல் தகனம் செய்ய குறிப்பிட்ட இடம் உலர்ந்தே காணப்பட்டது. தகனத்திற்கான எல்லா ஏற்பாடுகளும் தயாராகி விட்டன. பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடியுள்ளனர். அவ்வமயம் சுமார் 6அடி நீளமுள்ள நாகம் ஒன்று சிதைக்குள்ளிருந்து வெளிவந்து, சிதையை மும்முறை வலம் வந்து மறைந்து விட்டது. இந்த அதிசயத்தைக் கண்ட மக்கள் மெய்மறந்து பக்திப் பரவசமாயினர்.*

*- ஸ்ரீ 108 சுதர்ம சாகர முனிவர் நினைவு மண்டபத் திறப்புவிழா மலர். நல்லறம் 1975*

***- திருமதி சகுந்தலா ஜெயின்***

நாசிக்கிலிருந்து வீடு திரும்பிய பின்னர், அவர்கள் வீட்டிலும் சில அதிசயங்கள் நடந்ததோடு, சகுந்தலா ஜெயின் அவர்களின்

கனவில் "அதிசய க்ஷேத்திரங்களான மாகவீரஜீ மற்றும் பத்மபுரிஜீ ஆகிய இரு க்ஷேத்திரங்களை தரிசித்து வாருங்கள்" என்ற செய்தியும் வந்தது. அவ்வாறே அவ்விரு புனித இடங்களையும் தரிசித்து வந்தனர். பின்னர் ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளின் தீட்க்ஷாகுருவான பரம பூஜ்ய சாரித்ர சூடாமணி 108 ஸ்ரீ விமல சாகர சுவாமிகளையும் தரிசித்து ஆசி பெற்றனர்.

## ஆன்மீகச் சிந்தனை :

தங்களின் குடும்பத்தினர்க்குப் பிணி நீங்கி, குடும்பத்தில் அமைதி ஏற்படக் காரணம் "ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகள் தவமிருந்த பூமியை தரிசித்து வந்ததால்தான்" என்பதை உணர்ந்தனர். இந்நிகழ்ச்சிகள், மதப்பற்றில்லாதவராக இருந்த திரு. மிஸ்ரிசந்த ஜெயின் அவர்களைத் தர்மசிந்தனையுள்ள ஆத்திகராக மாற்றியது. தம்பதிகள் இருவரும் சுவேதாம்பர் கொள்கையை விட்டுத் திகம்பர் கொள்கையைக் கடைபிடிக்க முடிவெடுத்தனர். ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளின் தவமேன்மையையும், அவர் தவம் இருந்த போது நடந்த அதிசயங்களையும் அனைவரும் அறிய வேண்டி ஸ்ரீ சுதர்ம சாகர முனிவரின் உருவப்படத்தைப் பலவண்ண அமைப்பில் அச்சிட்டு நாட்குறிப்பு ஒன்றைத் தயாரித்து அனைவருக்கும் வழங்கினர். மேலும் ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகளின் ஜன்ம பூமியான திருப்பறம்பூர் சென்று அவருக்கு ஒரு நினைவு மண்டபம் கட்டவும் முடிவு செய்தனர்.

## நினைவு மண்டபத் திறப்பு விழா :

திரு. மிஸ்ரிசந்த் ஜெயின், திருமதி சகுந்தலா ஜெயின் அவர்களின் நன்கொடையால் திருப்பறம்பூரில் திரு. ஆதி நயினார்அவர்கள் கட்டிய சத்திரத்தின் பின்பகுதியில் 108 ஸ்ரீ சுதர்ம சாகர சுவாமிகள் திருப்பெயரால் மிக அழகான நினைவு மண்டபம் கட்டி முடிக்கப்பட்டது. அம்மண்டபம் 27.10.1975-ஆம் ஆண்டு

திருமதி. சகுந்தலாதேவி ஜெயின் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. மிகச் சிறப்பாக நடந்த அந்த எழுச்சிமிகு விழாவிற்கு ஜீவபந்து திரு. டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் தலைமை தாங்கினார். இவ்விழா மேல்சித்தாமூர் மடாதிபதி ஸ்வாமிகள் தவத்திரு லக்ஷ்மிசேன பட்டாரக பட்டாச்சார்யவர்ய ஸ்வாமிகள் முன்னிலையில் நடைபெற்றது.

ஸ்ரீ மிஸ்ரிசந்த் ஜெயின் மற்றும் அவர் துணைவியார் திருமதி. சகுந்தலா ஜெயின் அவர்களின் வள்ளல் குணத்தையும், ஆன்மீக ஈடுபாட்டையும் பாராட்டி, நன்றி தெரிவித்து தத்துவ மேதை திரு.எஸ். கஜபதி ஜெயின் (ஸ்ரீ 108 கஜபதி சாகர்) சிந்தாமணி நாவலர் திரு. என். சாந்தகுமார் ஜெயின், திரு. கே.ஜே. அகஸ்தியப்ப ஜெயின், திரு. சிம்மசந்திர சாஸ்திரியார் மற்றும் தஞ்சை அறம் வளர்த்த அன்னை திருமதி ராஜலக்ஷ்மி அம்மையார் ஆகியோர் பேசினர்.

நினைவு மண்டபத்தைக் கட்டி முடிக்கும் பணியை செவ்வனே நிறைவேற்றிய கரந்தை S.A. அப்பாண்டை ஜெயின் திரு. சுயங்கர நயினார், திரு. சொர்ணபத்திர நயினார், திரு. சந்தனகீர்த்தி நயினார், திரு. பா. ஆதிராஜ் ஜெயின், திரு. டி. ஜீவேந்திர நயினார் மற்றும் திரு. வி. விஜயகீர்த்தி நயினார் அனைவரையும் நாம் என்றும் நன்றியுடன் நினைவு கூர்வது நமது கடமையாகும்.

அவ்விழாவின் நிகழ்வுகளைப் பதிவு செய்து 'நல்லறம்' (டிசம்பர், 1975) ஒரு சிறப்பு மலர் வெளியிட்டு சிறப்பு செய்துள்ளது.

இன்றும் அவ்வெழில்மிகு நினைவு மண்டபம் முனிவர்கள் தங்கவும், விழாக்காலங்களில் அனைவருக்கும் விருந்தளிக்கவும், திருமணங்கள் நடத்தவும், சமயச் சொற்பொழிவுகள் ஆற்றவும், ஏற்ற இடமாக திருப்பறம்பூர் சமண சமயச் சான்றோர்களால் செம்மையாக பராமரிக்கப்பட்டு வருகிறது என்பது மிகவும் போற்றுதற்குரிய நற்செய்தியாகும்.

## கரந்தை - திருப்பறம்பூர் ஸ்ரீ அகளங்க சமஸ்கிருத பாடசாலை (7.12.1973)

இப்பாடசாலை சிறுவர், சிறுமியர்கள் சமண சமயத் தத்துவங்களையும், நூல்களையும் கற்று அறிய கரந்தை - திருப்பறம்பூர் மற்றும் தமிழகத்தைச் சார்ந்த சமண சமயத்தினரால் 7.12.1973ல் கரந்தை முனிகிரி ஆலயத்தில் தொடங்கப்பட்டது. (இப்பாடசாலை திரு. தரணேந்திரன் என்பவரால் 1924ல் துவங்கப்பட்டு பொருளுதவியின்றி நடைபெறாமல் நின்று விட்டது) இப்பாடசாலைக்கு திரு. ஏ. ஸ்ரீபதி நயினார் (கவர்மெண்டு பென்ஷனர்) அவர்களைத் தலைவராகவும், திரு. டி. ஆதிநயினார் மற்றும் திரு. கே. சூரியகோடி நயினார் ஆகியோர்களைச் செயலாளர்களாகவும் மற்றும் கரந்தை திருப்பறம்பூர் சமண சமயத்தினர்ரை உறுப்பினர்களாகவும் கொண்டு 1950வரை செயல்பட்டு வந்துள்ளது. திரு. பண்டித் டி. நாபிராஜ் ஜெயின் (விசாரத்), திரு. அப்பாண்டை நயினார் (பிராத்மிக்) மற்றும் திரு. ப. பார்சுவநாத நயினார் (108 ஸ்ரீ சுதர்ம சாகர்) ஆகியோர் ஆசிரியர்களாகப் பணியாற்றியுள்ளனர். ஆத்மபந்து திரு. டி.எஸ். பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரியார், மற்றும் திரு பிரதிஷ்டாசாரியர் சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார் ஆகியோர் இங்கு பயின்றவர்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இப்பாடசாலையின் நிர்வாகச் செலவுக்காக திரு. கூடலூர் ஸ்ரீமதி சுயம்பிரபை அம்மையாருடைய குமாரர்களான திரு. சி.வி. விஜயபாலையா திரு. சி.வி. பாலைய்யா ஆகியோர் திருப்பறம்பூரில் 38 செண்டு நிலத்தை (S.No.65B) எழுதிக் கொடுத்துள்ளார்.

அவ்வாரே ஸ்ரீதர்மசாகர் நினைவாக அவரது குமாரர் திரு. பார்சுவநாத நயினார் (108 ஸ்ரீ சுதர்மசாகர்) அவர்களும் 19 செண்டு நிலத்தை (S.No.119/8) இப்பாடசாலையின் நிர்வாகச் செலவுக்காகத் தானமாக எழுதிக் கொடுத்துள்ளார்.

இப்பாடசாலை பின்னர் சில வருடங்கள் திருப்பறம்பூர் திருக்குளத்தின் அருகேயுள்ள சத்திரத்தில் இயங்கி வந்துள்ளது.

இப்பாடசாலை இயங்கி வந்த இடத்தில் இப்போது ஸ்ரீசுதர்மசாகர் நினைவு மண்டபமும், சத்திரமும் அமைந்துள்ளன.



ஸ்ரீ பாகுபலி சுவாமி



ஸ்ரீ புஷ்பதந்த தீர்த்தங்கரர்
எண்வகை மங்கலம்



முக்கால தீர்த்தங்கரர்கள்



ஸ்ரீ ஜ்வாலா மாலினி



ஸ்ரீ பார்சுவநாதர்



ஸ்ருதஸ்கந்தம்



நிகழ்கால தீர்த்தங்கரர்கள்






சித்த பரமேட்டி



நவதேவதா





மகாமேரு

ஸ்ரீ பார்சுவநாதர்



108 ஸ்ரீ சுதர்ம சாகர் திருவடிகள்



108 ஸ்ரீ கஜபதி சாகர் நினைவிடம்



108 ஸ்ரீ சுதர்ம சாகர் நினைவு மண்டபம், கஜபந்தா



108 ஸ்ரீ தர்ம சாகர், 108 ஸ்ரீ சுதர்ம சாகர் 108 ஸ்ரீ கஜபதி சாகர் திருவடிகள்

## 7. விழாவும் வழிபாடுகளும் :

## செப்புத் திருமேனிகள்

தமிழ்நாட்டிலுள்ள கோயில்களில் செப்பு மற்றும் ஐம்பொன்னால் செய்யப்பட்ட தெய்வத் திருஉருவங்கள் சிறப்பு வழிபாட்டிற்காக வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அவை கலையம்சம் நிறைந்ததாகவும், சிற்ப நெறி முறைகளுக்கு உட்பட்டதாகவும் உருவாக்கப்பட்டவை ஆகும். தமிழ்நாட்டில் உலோகத் திருவுருவங்கள் கி.பி. 700-ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே ஆலயங்களில் வைக்கப்பட்டிருந்தன என்பதை அகழாய்வியல் வல்லுனர்கள் உறுதி செய்துள்ளனர் (நாகசாமி, சந்திரமூர்த்தி 2009, ப.63). சமண சமய ஆலயங்களில் வழிபாட்டிற்காகவும், திருவிழாக் காலங்களில் வீதி உலா வருவதர்க்கும், நோன்புகளின்போதும், மற்ற சிறப்பு விதான வழிபாட்டுகளின்போதும் தேவைப்படும் உலோகத் திருஉருவங்கள், செப்பு மற்றும் ஐம்பொன்னால் செய்யப்பட்டு திருப்பறம்பூர் ஆலயத்தில் வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இவ்வாலயத்தின் தொன்மைக்கு ஒப்ப, சமண சமயத்தினரால் வழிபாட்டிற்கு தேவையான அனைத்து உலோகத் திரு உருவங்களும் தக்க முறையில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன.

ஆதிநாதர், அஜிதநாதர், சந்திரப் பிரபர், புஷ்பதந்தர், சாந்திநாதர், குந்துநாதர், முனிசூவ்ரதர், வர்த்தமானர், ஸ்ரீதர்மதேவி, ஸ்ரீதரணேந்திர யக்ஷன், ஸ்ரீ பத்மாவதி, ஸ்ரீ ஜ்வாலாமாலினி ஆகியோர் திருஉருவங்கள் அழகான பீடத்துடனும், சில கலையம்சமுடைய பிரபையுடனும் காணப்படுகின்றன. பகவான்

ஸ்ரீ பாகுபலி சுவாமியின் அழகிய திருஉருவம் பீடத்தில் அமைக்கப்பட்டு, அழகிய பிரபாவளியுடனும் காணப்படுகிறது.

மேலும் பூஜா விதானங்களில் பயன்படுவதற்காகச் சதுரமான செப்பு உலோகத்தில் சோடசபாவனை யந்திரம், தசலக்ஷண யந்திரம், கலிகுண்ட ஆராதன யந்திரம், ஆகியவை அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

சிறப்பு வழிபாட்டிற்காக உருவாக்கப்பட்ட ஒருசில உலோகத் திருவுருவங்கள் பற்றிய விளக்கம்.

## முக்காலத் தீர்த்தங்கரர்கள் :

ஆதிகாலம் தொட்டு தீர்த்தங்கரர்கள் அவ்வப்போது தோன்றி உயிர்கள் அனைத்தும் நற்கதியடைய அறம்பரப்பி வீடுபேறு அடைந்துள்ளனர். நிகழ்காலத்தில் தோன்றி அறம் பரப்பிய ஆதிநாதர் முதல் மகாவீரர் வரையிலான 24 தீர்த்தங்கரர்கள், கடந்த காலத்தில் தோன்றி வீடுபேறடைந்த நிர்வாண முதல் சாந்திநாதர் வரையிலான 24 தீர்த்தங்கரர்கள் மற்றும் வருங்காலத்தில் தோன்றி அறம் பரப்பி வீடுபேறடையவிருக்கும் மகாபத்மர் முதல் அனந்தவீரியர் முதலான 24 தீர்த்தங்கரர்கள் ஆகிய 72 தீர்த்தங்கரர்கள் திருஉருவம் அமைக்கப்பட்ட உலோகப் படிமம், முக்காலத் தீர்த்தங்கரர் படிமம் ஆகும்.

## சதுர்விம்சதி தீர்த்தங்கரர்கள் :

முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதர் முதல் 24 ஆம் தீர்த்தங்கரரான மகாவீரர் வரையிலான 24 தீர்த்தங்கரர்களின் திருஉருவத்தை ஒரு நீண்ட சதுரமான உலோகப் படிமத்தில் வடிவமைத்து ஒரு அழகிய வேலைப்பாடு கொண்ட பீடத்தில் பொருத்தி உருவாக்கப்பட்ட உலோகத் திருவுருவம் சதுர்விம்சதிதீர்த்தங்கர்கள் திருஉருவம் ஆகும். இப்படிமம் அழகிய வேலைப்பாடுடைய பிரபாவலியுடன் காணப்படுகிறது.

தசதர்ம வழிபாட்டு நாட்களில் சதுர்விம்சதி தீர்த்தங்கரர் திருவுருவத்திற்கு அபிஷேகம், ஆராதனை ஆகியவை தக்க ஆகம விதிப்படி செய்து விரதம் இருந்து வழிபடுவர்.

**''சமண சமய அறவோர்கள் தமிழ் அன்னைக்கு அணிவித்த நூலணிகள் ஏராளம், ஏராளம்; சுருங்கச் சொன்னால், சமணர்** தமிழுக்குத் தந்திட்ட நூல்களை மட்டும் அப்புறப்படுத்திப் பார்த்தால் தமிழ் இலக்கிய உலகமே வெறிச்சோடிக் கிடக்கும்": என்று **தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதி** அவர்கள் குறிப்பிட்டுள்ளது (தமிழகத்தில் ஜைனம் 1974, பக்கம்-V) மிகையாகாது. இலக்கியம், இலக்கணம், காப்பியங்கள், காவியங்கள், தர்க்கம், நாடகம், இசை என அனைத்துத் துறைகளிலும் அவர்கள் இயற்றிய நூல்கள் பல. சிற்றிலக்கிய வகையில் அவர்கள் அளித் துள்ள அந்தாதி இலக்கியம் (திருநூற்றந்தாதி, திருமேற்றிசையந் தாதி, தர்மதேவியந்தாதி) தனிச்சிறப்புடையதாகும். அந்த அந்தாதி வரிசையில் சிறந்த இடம் பெற்றிருப்பது 24 தீர்த்தங்கரர்கள் தோன்றிய வரலாற்றைக் குறிக்கும் **'சதுர்விம்சதி தீர்த்தங்கரர்களந்தாதி'** என்ற நூல் ஆகும். இந்நூலாசிரியர் பெயர் முதலியன தெரியவில்லை. இந்நூல் 1886 ஆம் ஆண்டு திரு. ஜினதாஸ் நயினார் அவர்களால் முதன் முதலில் வெளியிடப்பட்டுள்ளது.

**அனந்தநாதர் படிமம் :**

முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதர் முதல் 14-ஆம் தீர்த்தங்கரரான அனந்தநாதர் ஈராக 14 தீர்த்தங்கரர்களின் திருஉருவங்களை அழகியதோர் ஒரு உலோகப் படிமத்தில் உருவாக்கி ஒரு பீடத்தில் பொருத்தப்பட்ட, பிரபாவளியுடன் கூடிய உலோகத்திரு உருவமே அனந்தநாதர் படிமம் ஆகும். அனந்த

நாதஸ்வாமி அனந்த குணங்கள் உடையவர் எனப் பெயர் பெற்றவர்.

அனந்தவிரத நோன்பின்போது 14 தீர்த்தங்கரர்களுடைய அனந்தநாதர் படிமத்தை, தக்க ஆகமவிதிகளின்படி விரதம் ஏற்று வழிபடுவர். அனந்தநாதர் சுவாமிக்கு பௌர்ணமியன்று அபிஷேகமும், அர்ச்சனையும் செய்து உபவாசம் இருந்து, வழிபாட்டிற்கு வந்தவர்க்கு ஆகாரதானம் அளித்து வழிபடுவர். அதனால் பாபங்கள் நீங்கி ஆரோக்கியத்தையும், நீண்ட வாழ்நாளையும், அனைத்து நலன்களையும் பெற்று போகங்களையும் அனுபவிப்பர்.

நோன்புக் கதைகள்
கடலூர் ஐ. துரைசாமி நயினார்
அகலூர் ஸ்ரீ சமந்த பத்ர சாஸ்திரியார்
பக்கம் 89-106, 1984

**மஹாமேரு :**

ஒரு நீண்ட உருளை வடிவமான தூண் போன்ற உலோகப் படிமம் ஒரு அழகிய பீடத்தின் மீது அமைக்கப்பட்டிருக்கும். அவ்வுருளை வடிவமான படிமத்தின் மேல் நான்கு தீர்த்தங்கரர்களின் திருஉருவங்கள் நான்கு திசைகளையும் நோக்கியவாறு நான்கு அடுக்காக அமைக்கப்பட்டிருக்கும் (4X4 = 16) உலோகத்திரு உருவமே மஹாமேரு ஆகும். மேரு மலையில் அமைந்துள்ள 16 ஜினாலயங்களை உருவகப்படுத்தியே இவ்வகையான ஓர் படிமம் உருவாக்கப்பட்டுள்ளது. இவ்உலோகத்திருமேனிக்கு மகா சிவராத்தியன்று சிறப்பு வழிபாடு செய்யப்படும்.

மேல்சித்தாமூர் ஆலயத்தில் 80 தீர்த்தங்கரர்கள் திருஉருவம் கொண்ட மஹாமேரு உள்ளது.

**நந்தீஸ்வர பக்தி :**

ஆடி, கார்த்திகை, பங்குனி மாதங்களில் வரும் வளர்பிறையில் அஷ்டமி திதி முதற்கொண்டு பௌர்ணமி திதி முடிய எட்டு நாட்களிலும் அனைத்து சமணர் ஆலயங்களிலும் நந்தீஸ்வர ஆஷ்டாநிக பூஜை நடைபெறும். ஆசாரியர் வீரசேனா "பக்தி பலவானாலும் 'தச பக்தி' என்பதே வழக்காக உள்ளது. அந்த 'தச பக்தி'யில் நந்தீசுவர பக்தி தலைமையான இடத்தைப் பெறுகிறது" எனக் குறிப்பிட்டுள்ளார்.

நாம் வசித்து வருவது ஜம்பூத்வீபம் இதிலிருந்து எட்டாவதாக உள்ளது நந்தீசுவர தீவு ஆகும். அத்தீவின் ஒவ்வொரு திசையிலும் பதின்மூன்று மலைகள் உள்ளன (அஞ்சன மலை-1, ததிமுகமலை-4, ரதிகரமலை-8 = 1+4+8=13). ஒவ்வொரு திசைக்கும் 13 மலைகள், ஆக (13X4=52) 52 மலைகள் உள்ளன. அம்மலைகளின் மேல் இயற்கையாக அமைந்த ஜினாலயங்கள் வியக்கத்தக்க அமைப்புடன், உள்ளத்தைக் கவரும் வண்ணம் அமைந்துள்ளன. நந்தீசுவர பருவங்களில் நான்கு வகை தேவர்களும் (கல்பவாசி, பவணவாசி, வியந்தரர், ஜோதிஷ்க தேவர்) இடைவிடாது மிகச் சிறப்பாக பூஜை செய்து வருகின்றனர். பூஜை முடிந்ததும் இந்திரன் முதலானோர் ஆலயத்தை வலம் வருவர். இவ் உத்தமச் செயலால் பெற்ற, மதிப்பிட முடியாத நல்வினைகளை சேகரித்துக் கொண்டு விண்ணுலகம் எய்துவர்.

மனிதர்களாகிய நாம் அங்கு செல்ல முடியாது என்பதால் இங்கு உள்ள ஆலயங்களில் ஒரு பிரமிட் போன்ற அமைப்புடைய உலோகத்தின் மேல் நான்கு பக்கமும் 13 தீர்த்தங்கரர்களின் திரு உருவங்களை அமைத்து, அவை ஒவ்வொன்றையும் நந்தீஸ்வர தீவில் அமைந்துள்ள 52 ஆலயங்களாக பாவித்து, அவ்வுலோகத் திருமேனியை நந்தீஸ்வர தீவாக உருவகப்படுத்தி நந்தீஸ்வர ஆஷ்டானிகபூஜை செய்வது காலம் காலமாக நாம் பின்பற்றி வரும்

வழிபாட்டு முறையாகும். அதன் மூலம் புண்ணிய வினைக்கட்டும், சுகமும் பெற வாய்ப்புள்ளது என்பது அசையாத நம்பிக்கை.

நந்தீசுவர பக்தியின் மேன்மையை மேருமந்திர புராணம் 56 (1252-1307) செய்யுள்களில் விளக்கமாக எடுத்துரைத் துள்ளது.பூஜையின் பலனை விளக்கும் ஒரு பாடல்.

இமையவர் போலஇச் சிறப்பைச் செய்தவர்
இமையவர் உலகத்தை எய்தி இங்குவந்து
இமையவர் செயும்சிறப்பு ஐந்தும் எய்திப்போய்
இமையவர் தொழச்சித்தி அகத்தி ருப்பரே!

நன்றி

1. கிரியா கலாபம். காஞ்சிபுரம் நீலகேசி மாதர் சங்கம் - 1995

2. ஸ்ரீ நந்தீஸ்வர அஷ்டானிக பஞ்சமேரு பூஜா விதானம். 1996
எ. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார் சம்யக்ஞான பிரசார சங்கம்

3. நோன்புக்கதைகள். கடலூர் ஐ. துரைசாமி நயினார் அகலூர் ஸ்ரீசமந்தபத்ர சாஸ்திரியார். வெளியிடுபவர் ஐ. தேவகுமார், கடலூர்.

## நவதேவதா

சமணர்கள் உயிர் மூச்சாகப் பஞ்ச மந்திரத்தைக் கருதுவது போன்றே, ஜினதர்மம் (சமணநெறி) ஜினஸ்ருதம் (ஆகமங்கள்), ஜினசைத்தியம் (தீர்த்தங்கரர்கள்) மற்றும் ஜிநசைத்யாலயம் (அருகன் ஆலயம்) ஆகிய நான்கும் வழிபாட்டிற்கு உரியவையாகக் கருதுகின்றனர். பஞ்சபரமேஷ்டிகள் ஐவருடன் (அருகர், சித்தர், ஆசாரியர், உபாத்தியாயர் மற்றும் சாதுக்கள் - 5) வழிபாட்டிற்குரிய நான்கையும் உருவகப்படுத்தி ஒரு வட்டமான உலோகத்தகட்டில் வடிவமைக்கப்பட்டு அழகான பீடத்தில் பொருத்தப்பட்டிருக்கும் படிமம் நவதேவதா ஆகும்.

## சுருதஸ்கந்தம்
## (ஸ்ருதி = வேதம், ஸ்கந்தம் = பிரிவுகள்)

சுருதஸ் கந்தம் என்று போற்றப்படும் உலோகப் படிமம் சமண சமயத் தத்துவங்களைக் கொண்ட ஆகமங்கள் (பகவான் மகாவீரரின் அறவுரைகள்) தோன்றிய விதத்தை விளக்குவதாகவும், ஆகமங்களின் பிரிவுகளை (42 பிரிவுகள்) சுட்டிக் காட்டுவதாகவும் உள்ள படிமம் ஆகும்.

திருப்பறம்பூர் ஆலயத்திலுள்ள சுருதஸ் கந்தம் ஓர் அழகிய கலை அம்சமுடைய பீடத்தின்மேல் பொருத்தப்பட்டுள்ள ஒரு நீண்ட சதுரமான உலோகத் தகட்டில் ஒரு மரம் போல இருபக்கமும் கிளைகளை உடையதாக அமைக்கப்பட்டுள்ளது. இவ்விரு பக்கமும் உள்ள கிளைகள் பதினான்கு பூர்வ ஆகமத்தின் உள்ள 14 உட்பிரிவுகளைக் குறிக்கும்.

இத்தகைய அமைப்பு மேல் சித்தாமூர் ஆலயக் கருவறையில் அமைந்துள்ள ஸ்ரீபார்சுவநாதர் திருஉருவத்தின் பின் பக்கம் சுருதஸ்கந்தம் அழகாகச் செதுக்கி உருவாக்கப்பட்டிருக்கிறது.

ஆகமங்களின் பிரிவுகளை (42 பிரிவுகள்) மேலும் விரிவாக அறியக் கூடிய வகையில் வரையப்பட்ட உருவகப்படங்கள் அச்சிடப்பட்டுப் பல ஆலயங்கள் உள்ளதைக் காணலாம்.

ஆகமங்கள் பற்றிய விரிவான தகவலுக்கு 1. ஜைனம் அ. சுகுமாரன் 2006-2007, பக் 18-22.

2. சமண தத்துவச் சொற்பொருள் களஞ்சியம். க.வி. அஜிததாஸ்.

## சித்தசக்ரம் (சித்தலோகம்)

சமவசரணத்தில் தீர்த்தங்கரர்கள் அறம் உரைப்பதை உலகிலுள்ள அனைத்து உயிர்களும் அறிந்து கொள்ள சௌதர்மேந்திரன் மூலம் கணதரப் பரமேட்டிகளைக் கொண்டு ஆகமங்களாக உருவாக்கப்பட்டன. இதை உருவகப்படுத்தும் விதமாக அமைக்கப்பட்ட செப்பு உலோகத் திருஉருவத்தை சித்தச் சக்ரம் என்பர். ஒரு வட்டமான செப்பு உலோகப் படிமத்தில் கணதரப்பரமேட்டி காயோத் சர்க்க நிலையில் உள்ள வாரும், சித்தலோகத்தைக் குறிக்கும் விதமாக ஸ்வஸ்திக் சின்னமும் பிறைக்கோடும், அதற்குமேலே உள்ள புள்ளிபோன்ற அமைப்பு சித்த பரமேட்டிகளையும் குறிக்கும். இவ்வட்ட படிமம் ஓர் அழகிய பீடத்தின் மேல் பொருத்தப்பட்டிருக்கும்.

கணதரப் பரமேட்டி அழகிய பீடத்தில் கால்களை மடித்து அமர்ந்த நிலையில், வலது கை ஓலைச் சுவடியுடனும், இடது கையில் உபதேச முத்திரையுடனும், தலையில் சுருண்ட முடியுடனும் காணப்படுவார். சித்தச் சக்ர விதான வழிபாட்டின்போது இச்சித்த சக்ரத்திற்குச் சிறப்பு பூஜை நடைபெறும்.

## இரத்தினத்திரயம்

நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கமே வீடுபேறு அடையும் வழி என்பார் உமா சுவாமி அவர்கள். இதையே அருங்கலச் செப்பு ஆசிரியர்

"நற்காட்சி நன்ஞானம் நல்லொழுக்கம் இம்மூன்றும் தொக்க அறச் சொற்பொருள்" என்கிறார். இம்மும்மணிகள் சமண சமயத்தினரின் மூல மந்திரமாகும். இவ்வுலகில் வாழ்வாங்கு வாழவும், பின்னர் பிறவா நிலைபெறவும் வழிகாட்டியாக அமைந்த

ஒழுக்க நெறி இம்மும்மணிகளாகும். இம்முமணிகளையே இரத்தினத்திரயம் என்பர். இம்மூன்று ஒழுக்கங்களையும் கடைப்பிடித்து ஒழுக வேண்டியதன் நிலைப்பாட்டை வெளிப்படுத்துவதே இரத்தினத்திரய பூஜை. பூஜா யந்திரத்தை பிரதிஷ்டை செய்து விதானம் நடத்தி வழிபாடு செய்கின்றனர். இத்தத்துவத்தை விளக்கும் சீவக சிந்தாமணி பாடல்.

மெய்வகை தெரிதல் ஞானம், விளங்கிய பொருள்கள் தம்மைப்
பொய்வகை இன்றித் தேறல் காட்சி; ஐம்பொறியும் வாட்டி
உய்வகை உயிரைத் தேயா தொழுகுதல் ஒழுக்கம் மூன்றும்
இவ்வகை நிறைந்த போழ்தே இருவினைகழியும் என்றான்

மேலும் விரிவான விளக்கம் பெற :

இரத்தினத்திரய விதானம்
புலவர் தோ. ஜம்புகுமார் 2006
வெளியீடு திரு. நாபிராஜ் குடும்பத்தினர்

## பஞ்ச பரமேஷ்டிகள் படிமம்

பஞ்சமந்திரம் (ஜங்குரவர் வணக்கம்)

ஓம் ணமோ அரஹந்தாணம்
ணமோ சித்தாணம்
ணமோ ஆயிரியாணம்
ணமோ உவஜ்ஜாயானம்
ணமோ ளோயே ஸ்வ்வ சாஹூணம்

அருகருக்கு வணக்கம்
சித்தருக்கு வணக்கம்
ஆச்சாரியருக்கு வணக்கம்
உபாத்தியாயருக்கு வணக்கம்
சர்வசாதுக்களுக்கு வணக்கம்

இப்பஞ்ச மந்திரத்தை உருவகப்படுத்தி அமைக்கப்பட்டதே பஞ்ச பரமேஷ்டிகள் உலோகப் படிமம் ஆகும். சமண சமயத்தினர் ஆலயங்களிலும், வீடுகளிலும் இத்தகைய அமைப்பு இருப்பதைக் காணலாம். ஒரு வட்டமான உலோகப் படிமத்தின் நடுவில் அருகர் (தீர்த்தங்கரர்) திரு உருவமும், அதைச் சுற்றி நான்கு திருவுருவங்கள் மற்ற நால்வரை உருவகப்படுத்தியும் காணப்படும். பஞ்ச பரமேஷ்டிகளின் படிமத்தை முறைப்படி தொழுது வணங்கி, அவர்கள் அருளிச்சென்ற திருவறங்களைப் பின்பற்றி வாழ்வதன் மூலம் நமது வாழ்க்கை மேலான நிலையை அடையும் என்பதே நம்பிக்கை.

## எண்வகை மங்கலங்கள்

அன்றாட வழிபாட்டிற்குரிய தீர்த்தங்கரரின் உருவச்சிலைக்கு முன்னர் எண்வகை உலோக மங்கலப் பொருட்களை ஒருமேடையில் வைக்கப்பட்டிருக்கும். கெண்டில், ஆலவட்டம், பூரணகும்பம், கொடி, சந்தனபேலா, குடை, கண்ணாடி, சாமரம் ஆகி எண்வகை மங்கலங்கள் தினம் காலையும் மாலையும் நடைபெறும் வழிபாட்டின் போது பயன்படுத்துவர்.

அருகதேவனாகிய ஜிநகுமாரன் பிறந்ததும் இந்திரனின் ஆணைப்படி சசிதேவி பேரழகுடன் நறுமணம் கமழும் தெய்வக் குமாரனை எடுத்து வர, அவருக்கு முன்னர் தேவமகளிர் எண்வகை மங்கலப் பொருட்களை எடுத்துச் செல்வர். இந்நிகழ்ச்சி பகவானின் ஜன்மாபிஷேகக் கல்யாணத்தின் போது (புனித நீராட்டு) நடைபெறும் நிகழ்ச்சியாகும். அதன் பிரதிபலிப்பே ஆலயங்களில் நாம் காணும் எண்வகை மங்கலப் பொருட்களைச் சார்ந்த நிகழ்ச்சியாகும்.

# நவக்கிரக தீர்த்தங்கரர்கள்

**"சமணர்களைப் பொறுத்தவரை ஒவ்வொரு கிரகத்துக்காகவும், ஒரு தீர்த்தங்கரரை குறிப்பிடுவர். அந்தத் தீர்த்தங்கரரின் விமானத்தில் அக்கிரகம் இருப்பதாக ஒரு நம்பிக்கை. அந்த அந்த தசை, புத்தி நடப்பவர் அந்த அந்தக் கோயில்களுக்குச் செல்வது நலம் என்று கூறுவர்." (சுவர்ண ஸ்ரீபால், முக்குடை, மார்ச் 2010.)**

ஒரு உலோகத் தகட்டில் மூன்று மூன்றாக நவக்கிரக தீர்த்தங்கரர்களின் திருஉருவங்களை மூன்று அடுக்குகளாக அமைத்து ஒரு அழகிய பீடத்தில் பொருத்தப்பட்டிருக்கும் உலோகத் திரு உருவம் நவக்கிரக தீர்த்தங்கரர் படிமம் ஆகும். நவக் கிரக தீர்த்தங்கரர்கள் : சந்திர பிரபர் (சந்திரன்), வாசுபூஜ்யர் (செவ்வாய்), மல்லிநாதர் (புதன்), மகாவீரர் (குரு), புஷ்பதந்தர் (சுக்கிரன்), முனிசூர்வதர் (சனி), நேமிநாதர் (ராகு) மற்றும் பார்சுவநாதர் (கேது) ஆகியோர் ஆவர்.

நவக்கிரக தீர்த்தங்கரர்கள் உள்ள ஆலயங்கள் பற்றிய தகவல் தனியாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.



## நவக்கிரக தீர்த்தங்கரர்கள் உள்ள ஆலயங்கள்

| | சமணர் நம்பிக்கை | | இந்து நம்பிக்கை |
|---|---|---|---|
| கிரகம் | தீர்த்தங்கரர்கள் | ஆலயம் அமைந்துள்ள இடம் | நவக்கிரக தலங்கள் |
| சூரியன் | ஸ்ரீபத்மப்ரபர் | - | சூரியனார் கோயில் |
| சந்திரன் | ஸ்ரீசந்திரப்பரபர் | சென்னை-1, எய்யில், கன்னலம், பெருமண்டூர், முகப்பேர் | திங்களூர் |
| செவ்வாய் | ஸ்ரீவாஸுபூஜ்யர் | நாவல், வேலூர் | வைத்தீஸ்வரன் கோயில் |
| புதன் | ஸ்ரீமல்லிநாதர் | பெருமுகை, மன்னார்குடி, கூனம்பாடி மஞ்சப்பட்டு | திருவெண்காடு |
| குரு | ஸ்ரீமகாவீரர் | வெண்பாக்கம், தொண்டூர், பேராவூர் வந்தவாசி, தொண்டூர் | ஆலங்குடி |
| சுக்கிரன் | ஸ்ரீபுஷ்பதந்தர் | திருப்பறம்பூர், தொரப்பாடி, திங்களூர் | கஞ்சனூர் |
| சனி | ஸ்ரீமுனிசுவ்விரதர் | சித்தாமூர், பொன்னூர் | திருநள்ளாறு |
| ராகு | ஸ்ரீநேமிநாதர் | திருமலை, ஏதாநெமிலி, நெல்லியாங்குளம் இரண்டேரிப்பட்டு, வேம்பூண்டி, சித்தாமூர் | திருநாகேஸ்வரம் |
| கேது | ஸ்ரீபார்சுவநாதர் | சென்னை கொளத்தூர், சித்தாமூர், புழல் திருநறுங்குன்றம், கள்ளப்புலியூர், சேந்தமங்கலம் | கீழ்ப்பெரும்பள்ளம் |

*நன்றி : சுவர்ண ஸ்ரீபால்*

**அட்சய திருதியை**

**(அட்சய = கரையாதது; குறையாதது; நிறைந்தது.**

**திருதியை = வளர்பிறை மூன்றாம் நாள்)**

சமணர்கள் கருதும் புனிதமான திருநாட்களில் அட்சய திருதியையும் ஒன்றாகும். அது தவமும் தானமும் இணைந்த வரலாற்றை நினைவூட்டும் திருநாள் ஆகும். தவம், தியாகம், புலனடக்கம் ஆகிய நற்பண்புகளை நாம் கடைபிடிக்க வேண்டும் என்பதை நமக்கு நினைவூட்டும் நாள் ஆகும். அட்சய திரிதியை ஒரு புனித தினமாக நாம் கொண்டாடப் பல காரணங்கள் உள்ளன. அவை :

1. ஒராண்டுகாலம் உண்ணா நோன்பும், மௌன விரதமும் இருந்து வைகாசி மாதம் வளர்பிறை மூன்றாம் நாள் அஸ்தினாபுரம் வந்த விருஷப தேவருக்கு ஸ்ரேயாம்ச குமாரர் ஆகாரதானம் அளித்த நாளையே அட்சய திருதியை என்ற பருவமாகக் கொண்டாடப்படுகிறது.

2. ஸ்ரேயம்ச குமாரர், விருஷப தேவருக்குக் கருப்பஞ்சாரை ஆகாரமாக அளித்தார். அவர் நின்றபடியே அவரது கையளவு கருப்பஞ்சாரை ஒரு துளியும் குறையாமல் (வீணாகாமல், க்ஷயமாகாமல்) நூற்றெட்டு முறை பருகினார்.

3. பகவான் விருஷபதேவர் தனது நூற்றெட்டு குணங்கள் குறைபடாது செயல்படத் துணையாக இருந்த நாள் அட்சய திருதியை நாள் ஆகும்.

4. ஸ்ரேயம்ச குமாரர் முதல் முதலாக ஆகாரம் அளித்த வழிமுறைகள், விருஷபதேவருக்குப் பின்னர் வரும் துறவியர்களுக்கு, ஆகாரம் அளிக்க துறவு விதிமுறைகளுக்கு குறைகாணாதவாறு பின்பற்றத்தக்கவாறு அமைந்துள்ள நாள். அந்நாள் சிறந்த பருவநாளாகக் கருதப்படுகிறது.

5. ஓர் ஆண்டுகாலம் உண்ணா நோன்பிருந்த விருஷபதேவரின் உடலும் பலமும் சிறிதும் குறைவின்றி (க்ஷயமாகவில்லை) காணப்பட்டது. அந்த அட்சய உடலை உடைய அருந்தவத்தோருக்குத் திருதியை அன்று ஆகாரம் அளித்த நாள் அட்சய திருதியை நாளாகும்.

6.ஆகார விதிமுறைகளை நன்கு கடைபிடித்து மிகச் சிறப்பாக விருஷபதேவருக்கு ஆகாரம் அளித்த அதிசயத்தைக் கண்ட தேவர்கள் இரத்தினங்களை மழையாகப் பொழிந்தனர். மக்கள் அனைவரும் குறைபடாத இரத்தினங்களை தங்கள் வீட்டில் நிறைவுபெற கொண்டு சென்றனர். அவ்அதிசயத்தை மக்கள் அட்சய திருதியை நாள் எனப் போற்றிக் கொண்டாடுகின்றனர்.

சமணர்கள் அனைவரும் ஆதிபகவான் விருஷபதேவர் ஆகாரம் ஏற்ற நாளை அன்று ஆலயம் சென்று எட்டுவகைப் பொருள்களை வைத்துப் பகவானுக்கு அர்ச்சனை செய்தும், 108 கலசம் கரும்பஞ்சாரை அபிஷேகம் செய்தும் திகம்பர முனிவர்களுக்கு ஆகாரம் அளிக்கும் பாவனையை நிறைவேற்றி உண்ணா நோன்பிருந்து வழிபடுவர்.

அவ்வாறு வழிபடுவோர் ஆன்ம நலம் பெறுவர். மூப்பு, இறப்பு என்ற சுழற்சியிலிருந்து விடுபடுவர். மேலும் அவர்கள் அறப்பணி ஆற்றவும் வழி வகுக்கும் நாளாகவும் அது அமையும்.

## கோயில் வழிபாட்டு முறைகள்

தமிழ்நாட்டிலுள்ள திகம்பர ஜினாலயங்களில் பின்பற்றப்படும் வழிபாட்டு முறைகள் பல நூற்றாண்டுகளாகத் தமிழ்ச் சமணர்களால் போற்றிக் காப்பாற்றப்பட்டு குறையின்றி சிறப்பாகக் கடைபிடிக்கப்பட்டு வருகிறது என்பது போற்றுதற்குரியதாகும். திருப்பறம்பூர் ஸ்ரீபுஷ்பதந்தர் ஜினாலயத்தில் அன்றாட வழிபாடுகளும், சிறப்பு வழிபாடுகளும், திருவிழாக்களிலும் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

அன்றாட வழிபாடுகள் காலையும், மாலையும் முறைப்படி நடைபெற்று வருகின்றன. காலையில் ஸ்ரீ புஷ்பதந்தருக்கு அபிஷேகமும் அர்ச்சனையும், நைவேத்தியமும், தீப ஆராதனையும் நடைபெறுகின்றன.

ஸ்ரீதர்மதேவி, ஸ்ரீ ஜ்வாலாமாலினி, ஸ்ரீபத்மாவதி அம்மன், ஸ்ரீதரணேந்திரயக்ஷன், ஸ்ரீபிரம்மதேவயக்ஷன் ஆகியோருக்கும் காலையில் சிறப்பான வழிபாடும், அலங்காரமும் நடைபெற்று வருகிறது.

சிறப்பு வழிபாடுகள் : சமண சமயத்திற்கே உரிய சிறப்பு வழிபாடுகளான ஆடி, கார்த்திகை, பங்குனி மாதங்களில் நடைபெறும் நந்தீஸ்வர நோன்பும், ஆவணி மாதத்தில் ஆவணி அவிட்டமும், புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழாவும், அட்சயதிருதியையும், பங்குனி மாதத்தில் ஆண்டிற்கு மூன்று முறைகொண்டாடப்படும் தசதர்மநோன்பும், சித்திரை மாதம் மகாவீரர் ஜெயந்தியும், (மகாவீரர் வீடுபேறு பெற்ற நாள்) தீபாவளி நோன்பும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. சிறப்பு வழிபாடுகளில் திருப்பறம்பூர் கிராம சமண சமயத்தினர் அனைவரும் பங்கேற்று விரதம் மேற்கொண்டு விழாவைச் சிறப்பாக நடத்தி வைப்பர்.

## திருவிழா

கரந்தை ஸ்ரீ முனிகிரி ஜினாலய மஹோற்சவம் ஒவ்வொரு ஆண்டும் பங்குனி மாதம் வளர்பிறை சுத்த சப்தமி திதியில் தொடங்கிப் பத்து நாட்கள் நடைபெறும். திருவிழா தொடக்கத்தில் கொடி ஏற்றும் நாளன்று திருப்பறம்பூர் ஜினாலயத்திலிருந்து 1008 ஸ்ரீ புஷ்பதந்தர், ஸ்ரீ அனந்த நாதர் மற்றும் ஸ்ரீஜ்வாலாமாலினி ஆகியோரின் உலோகத் திருவுருவங்களை ஆகம விதிகளின்படி கரந்தை ஜினாலயத்திற்குக் கொண்டு சென்று திருவிழாவினைத் துவங்கி 10வது நாள் வரை வழிபாடு செய்வர். அத்தெய்வத்திரு

உருவங்களை 11ஆம் நாள் (வசந்தோஸ்வம்) தக்க முறையில் திருப்பறம்பூர் ஆலயத்திற்கே கொண்டு வந்து சேர்ப்பர். இது தொன்று தொட்டு நடைபெற்று வரும் நிகழ்ச்சியாகும்.

தெப்பல் மஹோத்சவம் : கரந்தை ஜினாலய பத்து நாட்கள் திருவிழா முடிந்ததும், மூன்று நாட்கள் திருப்பறம்பூர் குளத்தில் தெப்ப மஹோத்சவம் நடைபெறும். தெப்ப விழாவிற்கு ஸ்ரீ தரேணந்திர யக்ஷன், ஸ்ரீ பத்மாவதி அம்மன் வீதி உலாவாக கொண்டு சென்று அலங்கரிக்கப்பட்ட தெப்பத்தில் எழுந்தருளிவித்து விழா மிகச் சிறப்பாக நடைபெறும்.

## நவராத்திரி

சமண சமயத்தினர் நவராத்திரி நோன்பை நோற்பதன் நோக்கம் தனிச் சிறப்புடையதாகும். அதை விளக்குவதே நவராத்திரி வரலாறு.

## நவராத்திரி வரலாறு

"அயோத்தி மாநகரை பரதன் ஆண்டு கொண்டிருந்த காலத்தில் ஒருநாள் பகவான் ஸ்ரீரிஷப தேவர் கேவல ஞானம் பெற்ற அறம் சார்ந்த நற்செய்தியையும், ஆயுத சாலையில் சக்கர ரத்தினம் என்ற வலிமையான ஆயுதம் தோன்றிய பொருள் சார்ந்த செய்தியையும், தனக்கு மகன் பிறந்தான் என்ற இன்பம் சார்ந்த செய்தியையும் ஒரே நேரத்தில் அறிகிறார்.

இதை அறிந்து பரதன் மகிழ்ச்சியுடன் முதலில் சமவ சரணம் சென்று பகவானைத் துதித்து வழிபடுகிறார். பின்னர் ஆறு கண்டத்தையும் வெல்ல தன் ஆயுத சாலையில் தோன்றிய சக்கர ரத்தினத்திற்கு எட்டுதிக்கும் வெல்லும் நோக்கில் எட்டு நாட்கள் சிறப்பாகப் பூஜை செய்கிறார். ஒன்பதாம் நாள் சாத்திர விற்பன்னர்களுக்குத் தானம் வழங்குகிறார். பத்தாம் நாள்

(தசமியன்று) சக்கர ரத்தினத்துடன் எட்டு கண்டங்களையும் தன் வசப்படுத்த விஜயம் துவக்குகிறார். விஜயதசமி நாளில் காரியம் துவக்கி ஆறு கண்டங்களையும் தன் ஒரே குடையின் கீழ் கொண்டு வந்து பரத மாமன்னன் பரதேஸ்வரன் "ஷட்கண்டாதிபதி" ஆகி பரதேஸ்வர சக்ரவர்த்தி ஆனார். (பரத சக்ரவர்த்தி ஆண்டதினாலேயே இத்தேசம் பாரத தேசம் எனப் பெயரிடப்பட்டது)

பரதச் சக்ரவர்த்தி கொண்டாடிய அந்த ஒன்பது நாட்களையே நவராத்திரி ஆகவும், ஒன்பதாம் நாள் ஜிநவாணி பூஜையாகவும், பத்தாம் நாள் விஜயதசமி ஆகவும் இன்றளவும் நாம் கொண்டாடி வருகிறோம்."

நன்றி : ஸ்ரீ ஜினவாணி துதிகள் வெளியீடு 2004.
ஸ்ரீவர்த்தமான மஹாவீரர் ஜினாலயம், காஞ்சிபுரம்



## பாதமலர் வழிபாடு

முதல் தீர்த்தங்கரரான ஆதிபகவான் முழுதுணர்வு வாலறிவராகி சமவ சரணம் எய்தி அறவுரை ஆற்றி வீடுபேற்றை அடைந்தார். அவர் முக்தியடைந்த இடத்தில் உள்ள ஒரே சின்னம் அவரது பாதகமலம் ஆகும். அவர் காட்டிய பாதையை நாம் பின்பற்றுவோம் என்ற முனைப்போடு பாதத்தை வணங்கிச் சமணர்கள் வழிபடத் தொடங்கினர். தீர்த்தங்கரர்கள் முக்தி அடைந்த இடங்களில் உள்ள அவர்களின் திருவடிச் சின்னங்களைத் தொட்டு வணங்கி நற்கதி வேண்டி வழிபடுவது ஆதிகாலம் முதல் சமணர்கள் பின்பற்றி வரும் வழிபாட்டு முறையாகும்.

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கன்னியாகுமரிக்கும் தெற்கே நிலம் நீண்டுடிருந்தபோது, இலங்கையும் தமிழகமும் அடுத்தடுத்து இருந்தபோது கன்னியாகுமரி மாவட்டம் சமணர்களின் புண்ணியப் பூமியாக விளங்கியது. அன்று அவர்கள் இலங்கை செல்லும் வழியில் அமைந்துள்ள பாறையில் தீர்த்தங்கரரின் திருப்பாதத்தை பிரதிஷ்டை செய்து வழிபட்டனர். (Jain Journal Vol-IV No.2. Page 91) கடற்கரையிலிருந்து 1600 அடி தொலைவில் சுவாமி விவேகானந்தரின் பெயரில் அமைந்துள்ள பாறை, முன்பு ஸ்ரீபாதபாறை என்று அழைக்கப்பட்டு வந்தது. இப்பாறையில் மனித பாதம் போல் அமைந்த ஒரு சின்னத்தைக் காணலாம். இன்று தேவிபாதம் என்று அழைக்கப்படும் அச்சின்னம் ஒரு காலத்தில் சமணர்களால் வணங்கப்பட்ட திருவடியாகும். (எஸ். பத்மநாபன். 2005 ப.16) பாதபூஜை சமண சமயத்திலிருந்தே மற்ற மதங்களுக்குப் பரவியது என்பது தொல்பொருள் ஆய்வாளர்கள் கருத்தாகும்.

இத்தொன்றுதொட்டு வரும் வழி முறையைப் பின்பற்றியே திருப்பறம்பூரில் பிறந்து முனிதீட்ஷை ஏற்று பின்னர் சல்லேகனை விரதம் கைக்கொண்டு முக்தி அடைந்த 108 ஸ்ரீ தர்மசாகர் 100 ஸ்ரீ

சுதர்மசாகர், 108 ஸ்ரீ கஜபதி சாகர் ஆகியோரின் திருவடிகள் கல்லில் வடிவமைத்து ஒரு பீடத்தில் பொறுத்தி பிரதிஷ்டை செய்து வணங்கி வழிபடுகின்றனர். இம்மூவரின் பாதம் அமைந்துள்ள மண்டபம் மானஸ்தம்பத்திற்கு தெற்கே அமைந்துள்ளது. இவ்வாறே இருபத்தி நான்கு தீர்த்தங்கரர்களின் பாத வடிவத்தை கல்லில் வடிவமைத்து உயர்ந்த பீடத்தில் பொறுத்தி வழிபட வகைச் செய்திருப்பதைக் காணலாம். இக் கோயிலில் நுழைந்ததும் வடக்கே உள்ள மண்டபத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

## கொற்றவை வழிபாடு

தமிழர்களால் போற்றிப் புகழப்படும் ஐம்பெரும் காப்பியங்களிலில் முதல் காப்பியமான சிலப்பதிகாரத்தில் இயக்கி (யக்ஷி) வழிபாடு கொற்றவை (வெற்றித்தாய்) வழிபாடு என்ற பெண் தெய்வ வழிபாடு குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் தமிழகத்திலுள்ள பல குடவரைகளிலும் இயக்கன், இயக்கி உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மேலும் உலகத்தவர்க்கு தொழிற்துறை கற்றுத்தந்த ஆதிபகவான் கலைகள் 16 என்று வகைப்படுத்தியுள்ளார். இந்த ஒவ்வொரு கலைக்கும் 16 வாத்ய தேவியர்களை (சரஸ்வதி, ரோஹினி, பிருக்ஞப்தி, வஜ்ரஸ்ருங்கலா...) உருவகப்படுத்தப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

ஆதிபகவான் ஆன்ம ஒளி பெற்று முழுதுணர்வு ஞானியாக அறவுரை மண்டபத்தில் அமர்ந்து திருமொழி (திவ்யத்தொனி) மூலம் அறவுரை ஆற்றினார். அத்திருமொழி (அறவுரையை) ஆறுகாண்டங்களாக எழுதப்பட்டது. அதை ஷட் கண்ட ஆகம சித்தாந்தம் என்பர். இவ்வாறு ஆகங்களை எழுதி முடித்த நாளை சுருதபஞ்சமி எனப் போற்றி கலைமகள், வாக்குதேவி, கலைவாணி, ஜிநவாணி, சுருததேவி, சரஸ்வதி என உருவகப்படுத்தி வழிபடுகின்றனர். (தன்யகுமார், முக்குடை, செப். 99 ப.4-6.)

இருபத்தி நான்கு தீர்த்தங்கரர்களுக்கும் தனித்தனியாக பரிவார தெய்வங்களாக ஒரு இயக்கன் (யக்ஷன்) ஒரு இயக்கி (யக்ஷி) உண்டு. இயக்கனும்,இயக்கியும் தீர்த்தங்கரர்கள் தவமிருக்கும் காலங்களில் அவர்களுக்கு தொண்டு செய்து ஆசி பெற்றவர்கள் ஆவர். அவர்களை வழிபடுவதன் மூலம் நல்வாழ்க்கைத் துணை, நல்மக்கள் பேறு, வளமான வாழ்வு அமையும் என்பது சமண சமயத்தினரின் நம்பிக்கை. தமிழக சமணர்கள் மிகவும் போற்றி வழிபடுவது சக்ரேசுவரி, ஜ்வாலாமாலிணி, பத்மாவதி, சித்தாயிகா, தருமதேவி ஆகிய ஐந்து இயக்கியர்களையே ஆகும்.

சம்புவராய மன்னர் பெருமண்டூரில் பர்சுவநாத தீர்த்தங்கரர்களின் இயக்கியான தர்மதேவிக்கு தனிக்கோயில் கட்டி அதில் தர்மதேவியை பிரதிஷ்டை செய்வித்தான் என்பதை கல்வெட்டு மூலம் அறிகின்றோம். மேலும் மேல் சித்தாமூர் ஸ்ரீ பார்சுவநாதர் ஆலயத்திலுள்ள அலங்கார மண்டபத்திலுள்ள தூண்களில் 24 இயக்கன் இயக்கியவர்கள் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். (ரமேஷ் 2005, ப.118-119) இயக்கன் இயக்கி வழிபாட்டைத் தமிழகத்திற்கு கொண்டு வந்தவர்கள் தமிழக சமண சமயத்தினரே எனத் தொல்பொருள் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். (ஏகாம்பரநாதன் ஜூன் 2002. முக்குடை ப.9)

## மகாகாளி யக்ஷி

ஸ்ரீபுஷ்பதந்த தீர்த்தங்கரரின் இயக்கியான மகாகாளி இந்து சமயத்தினர் வழிபடும் மகாகாளியிலிருந்து முற்றிலும் வேறுபட்டவராவர். மகாகாளியின் உருவம் எப்போதும் ஸ்ரீபுஷ்பதந்தர் சிலை அருகில் சிறிய அமைப்பாக வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். சிரவணபெளிகுளத்தில் உள்ள பந்தார பஸ்தியில் அமைந்துள்ள மகாகாளி தங்க

நிறமுடையவராகவும், நான்கு கைகளில் கத்தி, கேடயம், தாமரை, வஜ்ரம் உடையவராகவும் காட்சி தந்து அனைவரையும் காக்கும் கடவுளாகத் திகழ்கின்றார்.

ஹேமச்சந்திரனின் சுவிதநாத சுவாமி சரித்திரத்தில் மகாகாளியை 'சுதாரா' என்றும் வரதம், கலசம், அங்குசம், ஜெபமாலை ஏந்தி எருதின்மீது அமர்ந்திருப்பவராகவும் குறிப்பிடப்பட்டுள்ளது (அருணவசந்தன் 2001)

மகாகாளி விரும்பினால் பக்தர்களுக்கு வேண்டியது எதுவும் செய்து முடிப்பாள். அவரால் நிறைவேற்ற முடியாதது எதுவும் இல்லை. அவர் அருகனைத் தவிர வேறு எவரையும் வணங்காதவர் என்றும் கருதுவதால் மகளிர் மகாகாளியட்சியின் திருவடியை வணங்கி வழிபடுகின்றனர்.

## அஜிதன்

ஸ்ரீபுஷ்பதந்தரின் இயக்கன் ஸ்ரீ அஜிதன், தாமரை மலர் நிறமுடையவராகவும், நான்கு கரங்களில் பழம், அட்சயமாலை, கத்தி, வரத முத்திரையுடன் ஆமைமீது அமர்ந்து சமண சமதர்மங்களையும் பின்பற்றி ஒழுகுவோார்க்கு அருள்பாளிப்பவராகத் திகழ்கிறார்.

ஹேமச்சந்திரனின் திரிசஷ்டி சாலக புருஷ சரித்திரத்தில் இவர் பழம்,ஜெபமாலை, கீரிப்பிள்ளை, நீண்ட ஈட்டி ஆகியவைகளை கரங்களில் ஏந்தி ஆமை மீது அமர்ந்திருப்பதாக குறிப்பிடப்பட்டுள்ளது (அருணவசந்தன் 2001)

தீர்த்தங்கரர்களின் இயக்கனுக்கான தனிப்பட்ட உருவம் அமைக்கப்பட்டு வழிபடுவதை எங்கும் காண முடியவில்லை. ஆனால் ஸ்ரீசீதளநாதர் இயக்கரான ஸ்ரீபிரம்மதேவருக்கு தமிழகத்தில் பெரும்பாலும் பல ஆலயங்களில், தனியாக ஆலயங்கள் அமைத்து வழிபடுவது மிகவும் பரவலாக உள்ளது.

# 8. சாதனைப் படைத்த சான்றோர்கள்

சுதந்திரம், கல்வி, பொருளாதாரம் ஆகியவை அரிதாய் எளியோர்க்குக் கிட்டாததாய் இருந்த காலகட்டத்தில் வாழ்ந்த நமது மூதாதையர்கள் இவ்வூரில் கலைச் செல்வமாகத் திகழும் ஓர் ஆலயத்தையும், எதிர்காலச் சந்ததியினர் கல்வி, அறிவியல், தத்துவம், ஆகியவற்றில் சிறந்து விளங்குவதற்கான ஒரு சூழலைக் கொண்ட சமுதாயத்தையும், அமைத்துக் கொடுத்துள்ளனர் என்பதை நாம் என்றும் மறக்கவோ மறுக்கவோ முடியாது அல்லவா?

காலத்தால் அழிக்கமுடியாத தடயங்களைப் பதித்துச் சென்ற முனிவர்களான 108 ஸ்ரீ தர்ம சாகர், 108ஸ்ரீ சுதர்ம சாகர், 108ஸ்ரீ கஜபதி சாகர் மற்றும் சமண சமயச் சான்றோர்களான திரு. டி.எஸ். ஸ்ரீபால், திரு. டி.எஸ். ஆதிநயினார், ஆத்மபந்து திரு.டி.எஸ். பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரியார் மேலும் இன்றும் தனது சமயத் தொண்டினைத் தொடர்ந்து செய்துக் கொண்டிருக்கும் பிரதிஷ்டாசாரியர் திரு. ஏ. சிம்மசந்திர ஜெயின் சாஸ்திரியார் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகள் முன்னரே இந்நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

திருப்பறம்பூரில் பிறந்து இவ்வூருக்குப் பெருமை சேர்த்தவர்கள் மேலும் பலர் உள்ளனர். அவர்களைப் பற்றி இங்கு பதிவு செய்வது நமது கடமையாகும் எனக்குக் கிடைத்த தகவல்களின் அடிப்படையில் அச்சான்றோர்களின் சாதனைகளை இங்கு தொகுத்து வழங்கியுள்ளேன். ஆனால் நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்ட திருப்பறம்பூரில் வாழ்ந்து மணம் பரப்பிய பல அரும்பெரும் சமூக ஆர்வலர்களைப் பற்றி நாம் தெளிவாக அறிந்து கொள்ள முடியாமல் போனது நமக்கு ஒரு பேரிழப்பாகும்.

## திரு. டி. வர்த்தமான ஜெயின்

திரு. டி. வர்த்தமானன் ஜெயின் (1922-1987) திருப்பறம்பூர் திரு. துரைசாமி நயினார், திருமதி சுயம்பிரபை அம்மையார் அவர்களின் மூத்தமகன் திரு. டி. வர்த்தமானன் அவர்கள் ஆவார். அவர் துணைவியார் திருமதி சரோஜினி அவர்கள் திரு. டி.சம்பத்குமார் (ஜைன இளைஞர் மன்ற தலைவர்) அவர்களின் சகோதரி ஆவார். திரு. வர்த்தமானன் அவர்கள் சிறந்த வங்கி (Banks) நிர்வாகியாகவும், விவசாயப் பொருளாதாரத்திலும் (Agri-cultural finance) மற்றும் வாணிப நிதியியலிலும் (Commercial Banking) புகழ்பெற்ற நிர்வாகத் திறமையுள்ளவராக விளங்கினார். அவர் தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கியின் செயலாளராகப் (1963-70) பொறுப்பேற்று அவ்வங்கியின் வளர்ச்சிக்கு வித்திட்ட தீர்க்கதரிசி ஆவார். தொலைநோக்குடன் வங்கிக்குச் சொந்தமாக ஓர் தலைமை அலுவலகக் கட்டிடத்தை பலரும் பாராட்டும் வண்ணம் பாரிமுனையில் கட்டி முடித்தார். கூட்டுறவு வங்கியை ஷெட்யூல் வங்கியாக மாற்றி ரிசர்வு வங்கியின் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வந்தார். அவர் தனது நிர்வாகத்திறமையால் அவ்வங்கி சென்னையில் பல கிளைக் கொண்டதாகவும், நடுத்தர மக்களின் தேவையை நிறைவேற்றத் தக்கதாகவும் மாற்றி அமைத்து, அரசின் பாராட்டுதலைப் பெற்றார். வங்கி ஊழியர்களுக்கு இந்திய வங்கிகளுக்கு இணையான ஊதியம் வழங்கியும், மற்ற பல சலுகைகள் அளித்தும் அவர்கள் சிறப்பாகப் பணியாற்றச் சிறந்ததோர் சூழலை ஏற்படுத்திக் கொடுத்தார். **"அலுவலகம் ஆலயம்! செய்யும் தொழிலே வழிபாடு"** என்னும் தாரக மந்திரமே அவர் அடிக்கடி வழங்கும் வேதமந்திரமாகும். சில ஆண்டுகள் (1970 - 72) ரிசர்வ் வங்கியில் Dy. Chief Officer ஆகப் பதவியேற்று வங்கியின் உயர்மட்டக் குழுக்களில் பங்கேற்றுத் தக்க ஆலோசனைகளை வழங்கிச் சிறப்பாகப் பணியாற்றினார்.

திரு. வர்த்தமானன் அவர்கள் லக்ஷ்மி விலாஸ் வங்கியின் தலைமைப் பொறுப்பை ஏற்று அவ்வங்கியின் வளர்ச்சிக்கு பெரும்

பாடுபட்டார். (1973-78) வங்கியின் தலைமையகத்தை சென்னைக்கு மாற்றிச் சிறந்த வணிகத் தொடர்புடைய வங்கியாக (Commercial Banking) மாற்றி அமைத்து அதன் வளர்ச்சிக்கு வித்திட்டார். தன்னை நாடி வந்த தனிநபர்களுக்கு உதவியதோடு மட்டுமல்லாமல் தான் சார்ந்த அமைப்புகள் நெடுங்காலம் பெருமிதம் அடையுமாறும், பயன் பெறுமாறும் தொண்டு ஆற்றியவர் ஆவார். அவர் அனைவராலும் போற்றிப் பாராட்டப்படுபவர் ஆவார்.

மிகச் சிறந்த நிர்வாகத் திறமையுள்ள திருமதி சரோஜினி வர்த்தமானன் அவர்கள் சமுதாய பொது நிகழ்ச்சிகளில் பங்கேற்று அனைவரின் நன்மதிப்பை பெற்றவர் ஆவார். அவரது கண்டிப்பு மிக்க வழிகாட்டுதலின் பலனே அவரது வாரிசுகளான திரு. ஏ. நேமிநாதன், M.Com., F.C.A., திருமதி இந்திராணி, சோமராசன், M.A., திரு. V. பாஸ்கரன்,B.Sc., FCA (Auditor), Dr. V. சந்திரா, M.A.,M.B.B.S., D.Ch., FRCS, திரு. ரவிகீர்த்தி, B.Sc.,F.C.A., (Financial Consultant) மற்றும் திருமதி உஷா பிரிதிவி சந்திரன், B.Com. அனைவரும் மிகச் சிறந்த பண்பாளர்களாகவும் நிர்வாகத்திறமையுள்ளவர்களாகவும் சமுதாய முன்னேற்றத்தில் அக்கறை உள்ளவர்களாகவும் விளங்குகின்றனர்.

## சந்தனம் எசோபத்ர நயினார்,
## திருப்பறம்பூர்

சந்தனம் எசோபத்ர நயினார் அவர்கள் சமூக நலனில் அக்கறையுள்ளவராகவும், தான தர்மங்களில் சிறந்தவராகவும் விளங்கியவர். அவரை நாடிவரும் திருப்பறம்பூர் வட்டாரக் கிராம மக்களுக்கு அனைத்து உதவிகள் செய்தும், உணவுப் பொருள்களும், உணவும் அளித்து ஆதரித்து வந்தார். அவர் மாவட்ட நிர்வாகக் குழு உறுப்பினராகப் பணிபுரிந்து பலருக்கு தக்க உதவிகளைச் செய்துள்ளார். கிராம முன்னேற்றத்திற்கான

அனைத்து பணிகளிலும் மிக்க ஈடுபாடுடன் பங்கேற்று செயல்பட்டார். அவர் காட்டிய வழியைப் பின்பற்றி சமுதாய முன்னேற்றத்தில் மிகவும் ஈடுபாடுடையவர்களாக அவரது சந்ததியினர் இன்றும் செயல்பட்டு வருவது போற்றுதலுக்குரியதாகும்.

## திருப்பறம்பூர் ஞா. அய்யாதுரை நயினார்

திருப்பறம்பூர் திரு. ஞானசாகர நயினார் அவர்களின் புதல்வரான திரு. அய்யாதுரை நயினார் (1902-1979) அவர்கள் சிறந்த ஆசிரியராகவும், சமயப் பற்றுள்ளவராகவும், முற்போக்குக் கொள்கை கொண்டவராகவும், சமுதாய முன்னேற்றத்தில் மிகவும் அக்கறை கொண்டவராகவும் வாழ்ந்தவர். இளம் வயதில் இருந்தே காங்கிரஸ் இயக்கத்தில் தொண்டராகச் சேர்ந்து கதர் உடை அணிந்து பணியாற்றியுள்ளார். காந்தியக் கொள்கைகளில் ஈடுபாடு கொண்ட அவர், சபர்மதி ஆசிரமத்தில் ஓர் ஆண்டுகாலம் தங்கி இருந்தார். "முயன்றால் முடியாதது ஒன்றும் இல்லை" என்பது அவரது வேதவாக்கு. 'நித்ய தரிசனம்' பற்றி அவர் வெளியிட்ட நூலும் 'மோட்சம் மார்க்கம்' என்ற நூலும் சமண சமுதாயத்தினரின் முன்னேற்றத்தில் அவர் கொண்ட ஈடுபாட்டை விளக்குவதாக அமைந்துள்ளது. அவரது மூத்த மகன் திரு. தி.அ. ஞானசாகரம் கரந்தை ஸ்ரீ விருஷப நாதர் கோயிலின் கோபுரம் அமைத்தவர்.

அவரது இளைய புதல்வர் திரு. தி.அ. மதிசாகரன் அவர்கள் சமண சமயத்தினரைக் கடந்து பல ஆண்டுகளாக இந்தியாவில் உள்ள சமண சமய ஆலயங்களுக்கு தக்க வசதிகளுடன் அழைத்துச் சென்று சிறந்த தொண்டு செய்து வருகிறார். தந்தையைப் போல் இவரும் பல சமண சமய நூல்களை வெளியிட்டு அனைவருக்கும் வழங்கி வருகிறார். அவரின் தொண்டு போற்றுதற்கு உரியதாகும்.

**திரு. ஞா. ரமேஷ் ஜெயின், B.E.,**

திருப்பறம்பூர் திரு. நேமிநாத நயினார் அவர்களின் புதல்வர் திரு. நே. ஞானதாஸ்,D.C.E., (1932-2005) அவர்கள் ஆவார். பொறியியல் துறையில் வல்லவராகத் திகழ்ந்த அவர் தமிழக பொதுப்பணித்துறையில் (PWD EE) செயற்பொறியாளராகப் பணியாற்றியுள்ளார். தந்தைக்குப் புகழ் சேர்க்கும் வழியில் அவரது குமாரர் **திரு. ஞா. ரமேஷ் ஜெயின்** அவர்கள் சிறந்த பொறியாளராக (E.E.) சென்னை மாநகராட்சியில் பணிபுரிந்து வருகிறார்.

அவர் சமண சமயத்தின் பால் கொண்ட ஈடுபாட்டால் சென்னை, கொளத்தூரில் சிறந்த முறையில் பகவான் 1008 ஸ்ரீ விஜயபார்சுவநாதர் ஆலயம் ஒன்றை 1.6.2002 ஆம் ஆண்டு அமைத்துள்ளார். அயனாவரம், பாடி, அம்பத்தூர், அண்ணாநகர் வாழ் சமண சமயத்தினர் தினம் ஆலயம் சென்று வழிபடவும், சிறப்பு பூஜைகள், விதானங்கள் செய்யவும் அறச் சொற்பொழிவுகள் ஆற்றவும் ஏற்ற வகையில் அனைத்து வசதிகளையும் செய்து சமண சமயத்தினரிடையே ஒற்றுமை வளரவும், ஆன்மீக உணர்வு மேலோங்கவும் சிறப்பான முறையில் தொண்டு செய்து வருகிறார். அவர்தம் சேவை மனப்பான்மை போற்றுதற்கு உரியதாகும்.

**அமரர் திரு. S.A. விஜயகீர்த்தி, B.E.,M.Sc.,D.I.M.D.O.M.**

திரு. அய்யநயினார் திருமதி லக்ஷ்மி அம்மையார் அவர்களின் புதல்வர் திரு.எஸ்.ஏ. விஜயகீர்த்தி (1935-92) மகள் பேரா. திருமதி தவமணி தன்யகுமார் அவர்கள் ஆவார்.

பொறியியல் துறையில் சாதனைப்படைத்து பிறந்த மண்ணுக்குப் பெருமை சேர்த்தவர் திரு. எஸ்.ஏ. விஜயகீர்த்தி அவர்கள். பொறியியல் துறையில் முதுநிலைப் பட்டம் பெற்ற முதல் சமணர் ஆவார். தொழிற்சாலை நிர்வாகத்துறையில் பட்டம் பெற்று இந்திய தர நிர்ணய கழகத்தின் உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார்.

தமிழக அரசின் மின்துறையில் பணியாற்றிய பின் பம்பாய் சென்று தனியார் நிறுவனத்தில் தனது பணியைத் தொடர்ந்தார். சமண சமய இலக்கியங்களை நன்கு படித்து அறிந்தவர் ஆவார்.

ஜப்பான் சென்று தொழில்முறை அனுபவங்களை வளர்த்துக் கொண்டார். சில காலம் ஓமன் நாட்டில் பணிபுரிந்தார்.

**திருப்பறம்பூர் திரு. அகம்ப நயினார்** (23.8.1920-31.7.2001) :

திரு நல்ல அகஸ்தியப்ப நயினார், திருமதி மாணிக்கம் அம்மையார் அவர்களின் தவப்புதல்வர் திரு. அகம்பன் நயினார் அவர்கள் காஞ்சிபுரம் பச்சையப்பன் பள்ளியில் (1936) S.S.L.C. முடித்து, சென்னை ஆசிரியர் கல்லூரியில் (1947) ஓர் ஆண்டு இடைநிலை ஆசிரியர் பயிற்சி பெற்றுச் சிறந்த ஆசிரியராகப் பணியாற்றியவர் ஆவார். கிராம மணியமாக எட்டு ஆண்டுகளும் அரசுப் பள்ளியில் ஆசிரியராக 30 ஆண்டுகளும் பணியாற்றி, தலைமை ஆசிரியராக ஓய்வு பெற்றார்.

1952-ஆம் ஆண்டு காஞ்சிபுரத்தில் '**தியாகி நடுநிலைப் பள்ளி**'யை நிறுவி பல இளைஞர்களின் வாழ்வுக்கு நல்வழி காட்டியுள்ளார். அவர் NCERTயின் சிறந்த கல்வியாளருக்கான தேசிய விருதைப் பெற்றவர். மதிய உணவுத் திட்டம் பற்றிய அவரின் ஆய்வுக் கட்டுரை மத்திய அரசின் பாராட்டுதலைப் பெற்றது.

இவரது வாரிசுகளான திரு. ஏ. ஜினசேனன்,B.Sc.,B.L., தமிழகத்தின் சிறந்த சட்ட நிபுணராகவும், வழக்கறிஞராகவும் சிறப்பாக சமயப் பணியும் சமூக ஆர்வலராகவும் திகழ்ந்து வருபவர் ஆவார். திரு. A. சந்திரசேனன், M.A., திரு. A. ஜெயசேனன், M.A.,M.Com.,B.Ed., திரு. சாந்திசேனா, M.A.,B.Ed. திரு. A. உதயசேனை, B.E. (Com) Madras, M.S. (Com) Ilinois, USA ஆகியோர் தந்தை வழியைப் பின்பற்றி அவரவர் துறைகளில்

திறம்படப் பணியாற்றிச் சிறந்தவர்களாக விளங்குவதுடன் சமண சமய முன்னேற்றப் பணியிலும் மிக்க ஈடுபாடு கொண்டவர் களாகவும் திகழ்வது போற்றுதற்குரியதாகும்.

## திரு. அ. ஜனகுமார நயினார்

திருப்பறம்பூர் திரு. ஜெயக்குமார நயினார் அவர்களின் குமாரர் திரு. அப்பாண்டை நயினார் திரு. அப்பாண்டை நயினார் அவர்களின் குமாரர் திரு. அ. ஜனகுமார நயினார், மகளிர் திருமதி ஜாலினி அம்மையார், திருமதி தங்கம் மற்றும் திருமதி இராஜம் ஆகியோர் ஆவர். அமரர் திரு. அ. ஜனகுமார் நயினார் மற்றும் அவரது துணைவியார் திருமதி ரதிகாந்தி அம்மையார் ஆகியோர் திருப்பறம்பூர் ஆலயத்தில் நடைபெறும் சிறப்பு வழிபாட்டு நிகழ்ச்சிகளிலும் மிக்க ஈடுபாடு கொண்டவர்களாகச் செயல்பட்டனர். அவர்கள் பலருக்கு அன்பும் ஆதரவும் காட்டும் பண்புடையவர்களாகத் திகழ்ந்தனர். இரண்டாம் உலகப் போரின்போது சென்னையில் போர் மேகம் சூழ்ந்த போது சென்னையிலிருந்து திருப்பறம்பூர் வந்த சிலரை திரு. ஜனகுமார் அவர்கள் தனது வீட்டில் தங்கவைத்து அவர்களுக்கு அனைத்து உதவிகளையும் செய்ததை இன்றும் அவர்கள் நினைவு கூறுகின்றனர்.

உணவு தட்டுப்பாடு ஏற்பட்ட காலத்தில் (1950-60) ஏழை மக்களுக்கு தான்யங்கள் கொடுத்தும், உணவு அளித்தும் குழந்தைகளுக்கு பால் வழங்கியும் நல்லதோர் சமுதாய நல்லிணக்கப் பணியைச் செய்துள்ளார்.

தமது மூதாதையரின் தலைச்சிறந்த குணங்களைப் பின்பற்றி அவரது வாரிசுகளான திரு. ஜெ. அப்பாதுரை மற்றும் திரு. ஜெ. அசோகன் (Retd TNSC Bank) அவர்களும் சமயப் பணியிலும், சமுதாய முன்னேற்றப் பணியிலும் மிக்க ஈடுபாட்டுடன் செயல்பட்டு வருவது போற்றுதற்கு உரியதாகும்.

## திரு. அ. தேவகுமார்

திருப்பறம்பூர் திரு. டி.ஏ. அப்பாண்டை நயினார் அவர்கள் மிகச் சிறந்த தலைமை தொழில் நுட்ப வரைபட வல்லுனராக தென் இந்திய இரயில்வேயில் பணியாற்றியவர் Chief Drawftsman, Mechanical : Southern Railways, Chennai). இரயில்வேயில் மிகச் சிறந்த வரைபட வல்லுனர் (Draftsman) என்று பெயர் பெற்றவர் ஆவார்.

ஒரு சிறந்த சாதனையாளரான அவர். திரு. டி.ஏ. அப்பாண்டை நயினார், திருமதி இராஜம்மாள் அவர்களின் புதல்வர் திரு. ஏ. தேவகுமார்,M.A. (Eco). M.A. (English) M.Ed.,B.L. அவர்கள்மிகச் சிறந்த கல்வியாளர் ஆவார். பொருளாதாரம், ஆங்கிலம் மற்றும் கல்வியியல் ஆகிய மூன்றிலும் முதுகலைப் பட்டம் பெற்று சிறந்த ஆசிரியராகப் 36 ஆண்டுகள் பணியாற்றி தலைமை ஆசிரியராக ஓய்வு பெற்றார். தனது 76ம் வயதில் (2010) சென்னை சட்டக் கல்லூரியில் பி.ஏ., பட்டப் படிப்பை முடித்த இவர் ஆசிரியர்களுக்கோர் இலக்கணமாக வாழ்ந்து வருகிறார்.

திரு. டி.ஏ. தேவகுமார் திருமதி இந்திரா அம்மையார் அவர்களின் புதல்வர்கள் இருவரும் சாதனையாளர்கள் ஆவர். திரு. ஆனந்தகுமார்,F.C.A., அவர்கள் கடந்த 30 ஆண்டுகளாக மிகச் சிறந்த தணிக்கையாளராகப் (Chartered Accountant) பணியாற்றி இன்முகத்துடன் அனைவருக்கும் உதவிவரும் பண்பாளர் ஆவார். அவரது இளைய சகோதரர் திரு. டி.ஏ. சேகரன்,B.Com.,L.L.B., அவர்கள் சிறந்த நிதி முதலீடு ஆலோசகராகவும், வழக்கறிஞராகவும் பணியாற்றி வருகிறார். இவர்கள் குடும்பத்தோடு அனைத்துச் சமண சமய விழாக்களில் பங்கேற்றும் சமுதாய முன்னேற்றத்திற்கான அமைப்புகளுக்கு நன்கொடை அளித்து வருவது போற்றுதற்குரியதாகும்.

**திரு. ஏ.கே. அப்பாண்டை நயினார் (1919-1972) :** திரு. ஏ.கே. அப்பாண்டை நயினார் அவர்கள் தமிழக அரசின் பொதுப் பணித்துறை, நெடுஞ்சாலை அலுவலகத்தில் பணியில் சேர்ந்து அனுபவ முதிர்ச்சி, செயல்திறன், நேர்மை இவற்றின் அடிப்படையில் மேலாளராக பதவி உயர்வு பெற்று ஓய்வு பெற்றவர் ஆவார். திரு. அப்பாண்டை நயினார் அவர்கள் நூற்றுக்கும் மேற்பட்ட சமண சமய இளைஞர்களுக்கு துவக்கப்பபள்ளியில் ஆசிரியர் பணி கிடைக்க ஆவண செய்துள்ளார். வேலூருக்கு பல அலுவல்கள் காரணமாக வருகை தரும் சமண சமயத்தினருக்கு அனைத்து உதவிகளும் செய்ய அவர் தவறியது இல்லை.

திரு. ஏ.கே. அப்பாண்டை நயினார், திருமதி சுனந்தாதேவி அவர்களின் வாரிசுகள் திரு. அ. விருஷபதாஸ், திரு. அ. சுதர்சனன், திருமதி கஸ்தூரி, திருமதி சரஸ்வதி, திருமதி சுந்தரி, திரு. பகவத்குமார் ஆகியோர் ஆவர்.

திரு. அப்பாண்டை நயினார் அவர்களின் குமாரர் திரு. அ. பகவத்குமார், அவர் தந்தையின் நினைவைப் போற்றும் வகையில் **அப்பாண்டை நயினார் அறக்கட்டளை**"யை நிறுவியுள்ளார்.

### திரு. தி.து. சிம்மகுட்டி நயினார்

திருப்பறம்பூர் து. சிம்மகுட்டி நயினார் திருமதி பத்மா சிம்ம குட்டி நயினார் குடும்பத்தினர் பிறந்த மண்ணிற்குப் பெருமை சேர்க்கும் வகையில் திருப்பறம்பூர் கரந்தை ஆலயங்களில் நடைபெறும் சிறப்பு வழிபாடுகளில் பங்கேற்றும் சமண சமய அமைப்புளுக்குத் தக்க உதவி அளித்தும், பல சமண சமய நூல்களைப் பதிப்பித்து சாஸ்திரதானமாக வழங்கியும், பல சமணசமய இளைஞர்களுக்கு உதவி செய்தும், வழிகாட்டியும், சமுதாயம் நலமும் வளமும் பெற தொண்டாற்றி வருகின்றனர். அவர்களது குடும்பத்தாராகிய திரு. சி. வர்த்தமானன்,V.M., V.S.M.,

Paramveer Chakra by President of India (Pilot, Indian Air Force) திருமதி டாக்டர் ஷோபா வர்த்தமானன்,M B.B.S.,D.A., (London); திரு.FLT LT.V.அபிநந்தன், செல்வி ஆதி வர்த்தமானன், M Sc., Molecular Biology (Paris); திரு. சி. ரிஷபதாஸ்; திருமதி டாக்டர் உஷா ரிஷபதாஸ், டாக்டர் சி. அஜிதபிரசாத் M.D., திருமதி உஷா அஜித் பிரசாத்,M.A , ஆகியோரின் சமண சமயத்தினரின் முன்னேற்றத்திற்கு ஆற்றிவரும் தொண்டு போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியதாகும்.

**திருப்பறம்பூர் கோயில் தெரு :** திருப்பறம்பூர் கோயில் தெருவில் குடியிருந்த திரு. ஓதலவாடி சாந்தி நயினார், திரு. மல்லிநாத சாஸ்திரியார், திரு. அனந்தப்ப நயினார், திரு. அனந்தநாத நயினார், திரு. சந்தனம் சக்கரவர்த்தி நயினார், திரு. பிரபலகுமார், திரு. என்.எஸ். துரைசாமி நயினார், அஞ்சல் துரை, திரு. குந்துநாத நயினார், திரு. சிம்மபுரிப்பண்டிதர், திரு. சமந்தபத்திர நயினார் ஆகியோர் இக்கிராமத்தின் முன்னேற்றத்திலும், ஸ்ரீ அகளங்கர் சமஸ்கிருத பாடசாலையை நன்குநடத்தி வருவதிலும் ஆலய விழாக்கள் சிறப்பாக நடைபெறவும் பாடுபட்டவர்கள் ஆவர். (தகவல் திரு. எஸ். பாகுபலி ஜெயின், திருப்பறம்பூர்)

வாணிபூஷன், பிரதிஷ்டாசாரியர் ஏ. சிம்மசந்திர சாஸ்திரியார் அவர்களின்தந்தையார் திரு. அப்பாண்டை பண்டிதர் பல்கலை விற்பன்னர். அவருடைய தாத்தா திரு. நேமிச்சந்திர பண்டிதரும் வடமொழி, ஜினாலய சிறப்பு பூஜை விதிகள், விதானங்கள் ஆகியவற்றில் நன்கு தேர்ந்த வித்தகராக விளங்கியுள்ளார்.

## திரு. S. அப்பாண்டைராஜ் ஜெயின், B.A.,

ஓய்வு பெற்ற I.P. (21.1.1913-22.6.1995)

திருமிகு ஸ்ரீதரநயினார் திருமதி அமர்தம் அம்மாள் அவர்களின் புதல்வரான திரு. எஸ். அப்பாண்டைராஜ் ஜெயின் அவர்கள் இளங்கலைப் பட்டம் (பி.ஏ.) பெற்று, ஆங்கிலேயர்

ஆட்சியில் காவல்துறையில் மிகச் சிறப்பாக பணியாற்றி I.P. ஆக பதவி உயர்வு பெற்றவர் ஆவார். விருப்ப ஓய்வு பெற்ற பின்னர் சமுதாய நலனில் தொடர்புடைய இயக்கங்களில் முனைப்புடன் ஈடுபட்டு சமண சமய இளைஞர்களின் முன்னேற்றத்திற்கு ஒரு வழிகாட்டியாகவும் தூண்டுகோளாகவும் திகழ்ந்தார். ஜிநதர்ம நூல்கள் வெளிவந்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற நோக்கோடு அதில் ஈடுபாடுடைய அமைப்புகளுக்கு நிதியுதவி செய்து ஊக்குவித்தார்.

திரு. எஸ். அப்பாண்டை ராஜ், திருமதி சரஸ்வதி அம்மையார் அவர்களின் மூத்த மகன் திரு. அ. செல்வராஜ், பி.ஏ., அவர்கள் ஐ.ஓ.பி. வங்கியில் உயர் பதவியில் இருந்து ஓய்வு பெற்றவர். அவரது துணைவியார் திருமதி ஜோதி செல்வராஜ் அவர்கள் தத்துவ வித்தகர் பேராசிரியர் எஸ்.ஏ. ஜெயின்,எம்.ஏ.,எல்.டி., அவர்களின் மகள் ஆவார். சமணசமயத் தத்துவங்களைப் பரப்புவதில் மிக்க ஈடுபாடு கொண்டு **'ஸ்ரீ அகளங்கதேவர் அநேகாந்த மன்றம்'** என்ற அமைப்பை உருவாக்கினார் (1993). அவ்வமைப்பின் மூலம் தத்துவ ஆர்வலர்களைக் கூட்டி சிராவக தர்மம், பதாத்த சாரம் எனும் இரு நூல்களை ஆத்மபந்து திரு. டி.எஸ். பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரியார் மூலம் போதிக்க ஆவன செய்தார்.

திரு. எஸ். அப்பாண்டை ஜெயின் அவர்களின் ஒரே மகள் திருமதி ராஜாமணி அம்மையார் அவர்களின் கணவர் பொறியாளர் திரு. ஜயவிஜயன் (பேரா. இராவ் பகதூர் அ. சக்ரவர்த்தி நயினார்,M.A., I.E.S., அவர்களின் பேரன்) அவர்கள் ஆவார். பலசமண சமய மாணவர்கள் படித்து முன்னேறுதற்குத் தேவையான கல்வி உதவித் தொகை கொடுத்து உதவுவதில் இவர்கள் முன்னோடிகளாத் திகழ்ந்தனர்.

திரு. எஸ். அப்பாண்டை ராஜ் அவர்களின் புதல்வர்களான திரு. ஏ. ஸ்ரீதர், டி.எம்.இ., திரு. ஏ. விஜய், பி.இ., திரு. ஏ. உதயகுமார்,பி.ஏ., ஆகியோர் சமுதாய முன்னேற்றத்தில் மிக்க ஈடுபாடுடையவர்கள் ஆவார்கள்.

சமண சமயத்தினர் வர்த்தகம், தொழில்துறையில் மிகச் சிறந்த திறமையானவர்கள். அக்கருத்தை நிரூபிக்கும் வகையில் அண்ணா நகரில் Jayam & Co என்ற மிகப் பெரிய எலக்ட்ரானிக் நுகர்பொருள் விற்பனை நிறுவனத்தை நிர்மாணித்து திரு. ஏ. ஸ்ரீதர், திரு. எஸ். பிரகாஷ் குடும்பத்தினர் செவ்வனே நடத்தி வருவது பாராட்டுதலுக்கும் போற்றுதற்கும் உரியதாகும்.

## திரு. டி. சம்பத்குமார்

ஜைன இளைஞர் மன்றத் தலைவர் சார்டர்டு அகௌன்டண்டு (CA) திரு.டி. சம்பத்குமார்அவர்கள் தன் தந்தையாரின் தணிக்கை நிறுவனமான மிகவும் புகழ்பெற்ற எஸ். தன்யகுமார் அண்டு கோவினை மிகவும் திறம்பட பல ஆண்டுகளாக நிற்வகித்து வருகிறார். 35-ஆண்டுகளாக ஜைன இளைஞர் மன்றத் தலைவராக தொண்டாற்றி வருகிறார். திரு. டி. சம்பத்குமார் அவர்கள் தொடர்ந்து 50 ஆண்டுகள் The Institute of Chartered Accountant of India, New Delhi-ல் உறுப்பினராக இருந்து வந்ததை அங்கீகரித்து அவருக்கு (1.7.2008) பாராட்டு பத்திரம் வழங்கியுள்ளது அவரின் ஆற்றலும், தொண்டும் பாராட்டுதலுக்கும், போற்றுதற்கும் உரியதாகும்.

## திரு. இரா. ஸ்ரீபதி நயினார்

திரு. ஏ. இராமச்சந்திர நயினார், அவர்களின் புதல்வர் திரு. இரா. ஸ்ரீபதி நயினார். புதல்வியர்,திருமதி இராஜமதி அம்மையார், திருமதி பத்மாவதி அம்மையார் மற்றும் திருமதி மருதேவி அம்மாள் (வெண்பாக்கம் ஒன்றியத் தலைவரும் அருங்குளம் ஸ்ரீதர்ம தீர்த்தங்கரர் ஆலய அறங்காவலருமான அமரர் திரு. வெண்பாக்கம் அர்க கீர்த்தி நயினார் அவர்களின் துணைவியார்) ஆகியோர் ஆவர். திரு. ஸ்ரீபதி நயினார் அவர்களின் துணைவியார் அமரர் திருமதி சாரித்திரமதி அம்மையார் கரந்தை திரு. அகஸ்தியப்ப நயினார் அவர்களின் புதல்வி ஆவார். இவர் ஜைனம் ஆசிரியரும், சிறந்த சமண சமயத் தத்துவ சொற்பொழிவாளரும், பல பழந்தமிழ்

நூல்களுக்கு உரை எழுதியவருமான திரு. கரந்தை அ. சுகுமாரன் அவர்களின் சகோதரி ஆவார்.

திருமதி சாரித்திரமதி அம்மையார் அவர்களுக்கு கரந்தை சுகுமாரைத் தவிர இரண்டு சகோதரர்கள் இருந்தனர். சி.எஸ்.ஆர். ஆக இருந்து, பலருக்கு வேலை வாங்கித் தந்தும், காஞ்சிபுரம் பெரியார் நகரில் பலருக்கு வீட்டு மனைகள் வாங்க உதவியும் வாழ்ந்த அமரர் ஏ. குந்துநாதன் ஒருவர். சென்னை ஜார்ஜ் டவுனில், நம் திகம்பர சுவாமியாருக்கும் ஜினாலயத்தின் அருகில் வாழ்ந்து, பிரம்மசாரி ஸ்ரீ சூரியகோடி, வீடூர் பூரண சந்திர சாஸ்திரிக்கும் நூல்கள் வெளியீட்டில் துணை நின்றும், ஜீவபந்து ஸ்ரீபாலுடன் நெருங்கிப் பழகியும், இரயில்வேயில் சிறப்புற பணியாற்றியும் வாழ்ந்த திரு. கே.ஏ. வர்த்தமானன் மற்றொருவர்.

மனைவியின் மாண்புமிகு நற்பண்பே இல்வாழ்க்கையின் சிறப்பு ,நல்ல மக்களைப் பெறுதலே அதற்குச் சிறந்த அணிகலன் என்ற வள்ளுவர் வாக்குக்கு ஒப்ப வாழ்ந்தவர் திருமதி சாரித்திரமதி அம்மையார் அவர்கள் ஆவார்.

திரு. இரா. ஸ்ரீபதி நயினார் அவர்கள் "காட்சிக்கு எளியவர், கடுஞ்சொல் அறியாவதர், முன்னைப் பெரியோர்கள் காட்டிய வழியில் சிறிதும் வழுவாது வழிபாடுகள் விரத அனுசரிப்பு, விருந்தோம்பல் எனப் பலவற்றையும் தம் வாழ்நாள் முழுவதும் அனுசரித்து வந்தவர்." தனது கடினமான உழைப்பால் முன்னேற்றம் பெற்று சமூக நலனில் அக்கரைக் கொண்டவராகத் திகழ்ந்தார். சமண சமய நற்பணிக்கு பொருள் உதவி செய்வதில் சிறிதும் தயங்காதவர். அவர் "ஸ்ரீபார்சுவநாதர் துதிமாலை" (தொகுப்பாசிரியர் - வாணிபூஷன், பிரதிஷ்டாசார் திரு. ஏ. சிம்மசந்திர ஜைன் சாஸ்திரியார்) என்ற நூலை சாஸ்திர தானமாக வழங்கியுள்ளார்.

இவர்களது புதல்வர்கள் திரு. ஸ்ரீ. பரதன், பச்சையப்பன் கல்லூரி பேராசிரியர் (ஓய்வு) திரு ஸ்ரீ. பாகுபலி, ஆசிரியர் (ஓய்வு) ஆகியோர் ஆவர். இவர்களது மகளிர் திரு. கே.ஏ. குந்துநாதன் அவர்களின் துணைவியார் திருமதி மதன சுந்தரி அவர்களும், திரு. கீ.அ. சிம்மசந்திரன், பி.இ. அவர்களின் துணைவியார் திருமதி சாந்தா அவர்களும் ஆவர். திருப்பறம்பூரைச் சார்ந்த இவர்கள் அனைவரும் சமயம் மற்றும் சமுதாயப் பணியில் ஈடுபாடு கொண்டு செயல்பட்டு வருவது பாராட்டுக்குரியதாகும்.

இதுகாறும் திருப்பறம்பூர் வரலாற்றைப் படித்தவர்கள் ஒன்றை கவனித்து இருக்கலாம். சென்னை, ஜார்ஜ்டவுனில் உள்ள ஸ்ரீ சந்திரப்பிரப சுவாமி ஜினாலயம், ஆதம்பாக்கம் ஆதிநாதர் ஜினாலயம், அம்பத்தூர் ஸ்ரீ அஜிதநாதர் ஜினாலயம், கொளத்தூர் ஸ்ரீ விஜய பார்சுவநாதர் ஜினாலயம் ஆகிய நான்கு சென்னை திகம்பர ஜினாலயங்களையும், திருப்பறம்பூரில் பிறந்த தர்மவான்களான ஸ்ரீ ஆதிநயினார், ஸ்ரீ சிம்மசந்திர சாஸ்திரியார், ஸ்ரீ அஜிததாஸ், ஸ்ரீ ரமேஷ் ஆகியோரின் முயற்சியாலேயே நிர்மாணிக்கப்பட்டிருப்பது வியர்ப்பும், பெருமையும் தருவதாகும்.



# 9. சமயத் தொண்டாற்றிய சான்றோர்கள்

## திரு. சி.வி. ஸ்ரீபாலையா
## திருமதி குணமாலை அம்மையார்

மேல் சித்தாமூர் வரலாற்றை ஆய்வு செய்த திரு. ஏகாம்பரநாதன் (1985, 2008) அவர்கள் மேல் சித்தாமூர் கல்வெட்டில் உள்ள செய்தியில் திருப்பறம்பூரைச் சார்ந்த சென்னை மாகான அரசின் உதவி ஆட்சியாளராகப் பணிபுரிந்த (Deputy Collector 1860) திரு. சி.வி. ஸ்ரீபாலய்யா (கூடலூர் திருமதி சுயம்பிரபை அம்மாவின் குமாரர்) அவர்களின் துணைவியார் திருமதி குணமாலை அம்மையாரின் உடல்நலம் வேண்டி சித்தாமூர், ஸ்ரீபார்சுவநாதர் கோயிலில், ஸ்ரீ சரஸ்வதி, ஸ்ரீ பத்மாவதி, ஸ்ரீ ஜ்வாலாமலினி, ஸ்ரீ பிரம்மதேவர், ஸ்ரீ கணதரர் ஆகியோருக்குச் சிறியக் கருவறைகள் கட்டி அதில் அத்தெய்வங்களது சிற்பங்களை நிறுவினார் எனவும், அவற்றின் நைவேத்தியச் செலவிற்காக, காணி நஞ்சை நிலம் அளித்தார் என்பதையும் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் திரு. ஸ்ரீபாலைய்யா அவர்களின் முயற்சியால் அக்கோயிலில் உள்ள யானைச் சிற்பமும் தேர் மண்டபமும் நிறுவப்பட்டது என்பதை திரு. ரமேஷ் (2005) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

திரு. சி.வி. ஸ்ரீபாலய்யா அவர்கள் மிகச் சிறப்பான மாவட்ட ஆட்சியாளராகச் செயல்பட்டு பலருக்கு நல்ல பல உதவிகள் செய்து வந்தார் என்பதையும் நாம் இங்கு நினைவு கூர்வது அவசியமாகும்.

திருப்பறம்பூர் திரு. குந்துநாத நயினார் அவர்களின் புதல்வர்களான திரு. புஷ்பநாத நயினார், மற்றும் திரு. அகஸ்தியப்ப நயினார் ஆகியோர் சில நிலங்களை வாங்கி (கி.பி. 1971) சங்கர முதூரில் அமைந்துள்ள சமணர்க் கோயிலுக்குத் (இப்போது அங்கு சமணர் கோயில் இல்லை) தானமாகக் கொடுத்துள்ளனர். (ஏகாம்பரநாதன் 1941 ப.24)

## திரு. பா. ஆதிராஜ் நயினார்

திரு. பார்சுவநாத நயினார் - திருமதி குப்பம்மாள் அவர்களின் தவப்புதல்வர்களான திரு. பா. ஆதிராஜ் நயினார் மற்றும் திரு. பா. ஜெயக்குமார் நயினார் ஆகிய இருவரும் அவர்களது தந்தையான திரு. பார்சுவ நாத நயினார் (108 ஸ்ரீ சுதர்ம சாகர்) மற்றும் அவர்களது பாட்டனாரான திரு. வஜ்ஜிரபாகு நயினார் (108 ஸ்ரீ தர்ம சாகர்) அவர்களின் வழியைப் பின்பற்றி சமணசமயத்தில் மிகவும் பற்றுள்ளவர்களாகவும், ஆலயத்திருப்பணிகளில் ஈடுபாடு டையவர்களாகவும் திகழ்ந்து வருகின்றனர்.

திரு. பா. ஆதிராஜ் நயினார் அவர்கள் சிறந்த ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற பின்னர் தனது துணைவியார் திருமதி சரஸ்வதி ஆதிராஜ் அவர்களுடன் மிக்க ஈடுபாடுடன் திருப்பறம்பூர் ஸ்ரீபுஷ்பதந்தர் ஆலய நிர்வாகத்தை சிறப்புடன் நிர்வகித்து வருகின்றார். திரு. பா. ஆதிராஜ் நயினார் அவர்கள் ஆலயத்தின் அனைத்து சிறப்பு வழிபாடுகளும் (தெப்பத் திருவிழா, பகவான் மஹாவீரர் ஜெயந்தி விழா, ஆஷ்டானிகம், நவராத்திரி, பொங்கல்) தவறாது தக்க முறையில் நடத்துவதற்கான அனைத்து வேலைகளையும் திறம்படச் செய்து வருகிறார். இங்கு இப்பொழுது பஞ்ச கல்யாணப் பெருவிழா நடைபெறவும் ஏற்பாடு செய்துள்ளார். வெளி ஊர்களில் தங்கியுள்ள திருப்பறம்பூரைச் சார்ந்த சமண சமயத்தினரைத் தவறாது தொடர்பு கொண்டு கோயில் கட்டளைகளைத் தக்க முறையில் நடத்தி வருவது மிகவும்

போற்றுதற்கு உரியதாகும். இங்கு இப்பொழுது பஞ்சகல்யாண பெருவிழா நடைபெறவும் ஏற்பாடு செய்துள்ளார்.

**திரு. க.வி. அஜிததாஸ், எம்.ஏ., எம்.காம்.,**

திருப்பறம்பூர் திரு. கே. விருஷபதாஸ் திருமதி ஜ்வாலாமாலினி அவர்களின் மகனான திரு. க.வி. அஜிததாஸ் அவர்கள் சிறந்த சமூகவியல் விஞ்ஞானி ஆவார். அவர் வனத்துறையில் இணை இயக்குனராக (Joint Director, Forest Department, Govt. of Tamilnadu) பணியாற்றி ஓய்வு பெற்ற பின்னர் தன்னை முழுமையாகச் சமணப் பணிகளில் ஈடுபடுத்திக் கொண்டு திறம்படப் பணியாற்றி வருகிறார்.

**'ஆசாரிய ஸ்ரீ வித்யாஸாகர் தர்ம பிரபாவனா சங்கம்'** என்ற ஓர் அமைப்பை உருவாக்கி அதன் மூலம் பல சமண சமய ஆசாரியர்கள் இயற்றிய சமண சமய தத்துவ நூல்களை மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார். பதிப்பாசிரியராய் அவர் வெளியிட்ட நூல்கள், புருஷார்த்தஸித் உபயம் (2004), பாரஸ அணுவேக்கா (2006), ஆத்மானு சாஸனம் (2006), கோமடீட சாரம் (2007), ஞானார்ணவம் (2008), ஆகமநிழலில் (2008) மற்றும் சமண தத்துவச் சொற்பொருள் களஞ்சியம் ஆகியவை ஆகும்.

அம்பத்தூர் பகுதியில் வாழ்ந்து வரும் சமண சமயத்தினர் தினம் ஆலயம் சென்று வழிபடுதற்கு வசதியாக அம்பத்தூரில் பகவான் ஸ்ரீஅஜிதநாதர் திகம்பர் ஜெயின் ஆலயம் ஒன்றை அமைத்து (9.4.2001) அனைவரும் வழிபடுதற்கான அனைத்து வசதிகளையும் செய்து அவ்வாலயத்தைச் சிறப்புடன் நிர்வகித்து வருகிறார். அவர் தனது அன்னையின் பெயரில் ஓர் (திருமதி ஜ்வாலாமாலினி அறக்கட்டளை) அமைத்து ஏழை எளிய மாணவர்களுக்குத் தக்க உதவிகளை செய்தும் வருகிறார். அவர்தம் சமூகத் தொண்டு போற்றுதற்குரியதாகும்.

## அறம்கூறும் அன்னை
## திருமதி. இராஜ லட்சுமி ஜினகுமார்

திருப்பறம்பூர் ஆதிநயினார் அவர்களின் புதல்வியான திருமதி கனகமாலை அம்மையார் அவர்களின் மகள் திருமதி இராஜலட்சுமி அவர்கள் ஆவார். சமண சமய பழம்பெரும் நூல்களை நன்கு கற்று அறிந்த வல்லுனராகத் திகழ்ந்து வருபவர் ஆவார். தஞ்சை அருகில் உள்ள கல்லூரிகளில் சமண இயல் பற்றி ஆய்வு செய்யும் பல கல்லூரி மாணவர்களுக்கு அவர்களின் ஆய்வுக்கும், ஆய்வுக் கட்டுரை எழுதுவதற்கும் தேவையான தகவல்களைத் தந்து வழிநடத்தி வருபவர் ஆவார். கல் வெட்டுக் குறிப்புகளைத் தெளிவுற விளக்கவும், வடமொழியில் தேர்ச்சி பெற்றும் விளங்கும் அவர், தஞ்சை சரஸ்வதி மஹால் நூலக ஆய்வாளர்களுக்கு மிகவும் உதவி செய்து வருபவர் ஆவார்.

நந்தி சங்கத்தை சார்ந்த மாகநந்தி ஆசார்யர் அவர்கள் இயற்றிய 'பதார்த்தஸாரம்' என்ற அரிய நூலை திருப்பறம்பூர் ஸ்ரீதர்ம சாகர் நூல் நிலையதிலிருந்த எழுத்துப் பிரதியையும், குந்துகுந்தர் கல்வி நிறுவன ஓலைச் சுவடியையும் ஒப்பிட்டு திருமதி இராஜலட்சுமி ஜிநகுமார் அவர்கள் சரஸ்வதி மகால் நூல்நிலையம் மூலம் பதிப்பித்து வெளியிட்டுள்ளார் (1992)

திருப்பறம்பூரில் 1975ஆம் ஆண்டு நடைபெற்ற ஸ்ரீ சுதர்ம சாகர் நினைவு மண்டபத் திறப்பு விழாவிற்கு வருகைதந்து சிறப்புரை ஆற்றினார். திருப்பறம்பூர் ஸ்ரீ புஷ்பதந்தர் ஆலய கும்பாபிஷேக - பஞ்சகல்யாணப் பெருவிழாவிற்கு ரூ.1000/- நன்கொடை வழங்கியுள்ளார்.

அவரது கணவர் அமரர். திரு. எ. ஜினகுமார முதலியார் (18.07.1919 - 21.1.2008) அவர்கள் கர்மவீரர் காமராஜ் அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். பலருக்கு

வேலைவாய்ப்பு அளித்தும் சமுதாயம் முன்னேற்றம் அடையவும் பாடுபட்ட சிறந்த பண்பாளர் ஆவார்.

## திரு. எஸ். அப்பாண்டை ஜெயின் (1905 - 1976)

திரு. எஸ். அப்பாண்டை ஜெயின் அவர்கள் தத்துவமேதை திரு. கஜபதி ஜெயின் (ஸ்ரீ108 கஜபதி சாகர்) அவர்களின் சகோதரர் ஆவார். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் ஆங்கிலத்துறையில் பேராசிரியராக சிறப்பாகப் பணிபுரிந்து (1937-1950) அனைத்து ஆசிரியர்களின் பெருமதிப்பைப் பெற்றார். இன்று மிகப்பெரும் இயக்கமாக இயங்கி வரும் **பல்கலைக் கழக ஆசிரியர் சங்கம்** (AUT) தோன்றுவதற்கான காரண கர்த்தாவாகத் திகழ்ந்தவர்களுள் இவரும் ஒருவர் ஆவார். பின்னர் மதுரை தியாகராசர் கல்லூரியின் தலைமைப் பொறுப்பை ஏற்று ஓய்வு பெறும் வரை (1968) மிகச் சிறப்பாகப் பணியாற்றினார். சேக்ஸ்பியர் இலக்கியத்தில் வல்லவராகத் திகழ்ந்த அவர் எழுதிய Shakespear's Conjection of Ideal Womenhood என்ற நூல் அகில இந்திய அளவில் அனைவராலும் பாராட்டடப்பட்டது.

அவர் சிராவனபெளிகுளாவிலிருந்த ஸ்ரீநேமிசாகர் வர்ணீஜி அவர்களிடம் சமண சமயத் தத்துவங்களை நன்கு கற்று அறிந்தார். பூஜ்யபாதர் அருளிய சர்வார்த்தசித்தி என்ற தத்துவ நூலை ஆங்கிலத்தில் Reality என்று மொழி பெயர்த்தார். ஜைன அறிவியல் அறிஞர்களின் பாராட்டைப் பெற்ற இந்நூலை கல்கத்தா வீரசாசன சங்கத்தினர் வெளியிட்டுள்ளனர். (Vira Sasana Sangha, Culcatta-37, 1960) இந்த உன்னத படைப்பை உருவாக்கிய திரு. எஸ். அப்பாண்டை ஜென் அவர்களின் நினைவைப் போற்றும் வகையில் அவர் இயற்றிய நூல்களை கற்று அறிவது நமது கடமையாகும்.

# திருப்பறம்பூர் சமணச் சமூகத்தினரின் அமைப்பு

திருப்பறம்பூர் சமண சமூகத்தினரின் ஒட்டு மொத்த அமைப்பை நோக்கும்போது அவர்கள் ஒரு கூட்டுக் குடும்பமாக வாழ்ந்து வந்துள்ளனர் / வருகின்றனர் என்பதை அறியலாம். திரு. ஸ்ரீவிஜயபாலன் அவர்களின் திருப்பறம்பூர் சமணர்கள் பற்றிய ஒட்டு மொத்த விளக்கம் இதற்கு ஒரு சான்றாகும். அவர் கூறுவதுபோல் பெரும்பாலோர் வெவ்வேறு ஊர்களில் இருந்து இங்கு குடிவந்தவர்களாகக் கருத வாய்ப்புள்ளது. அவர்களின் பூர்வீக ஊர்களின் பெயரிலேயே (குடும்பப்பெயர் (அ) பட்டப் பெயர்) அவர்களின் குடும்பமும் அழைக்கப்படுகிறது. எனவே திருவோத்தூர் (செய்யார்) திருவத்தூர், குண்ணத்தூர், எறும்பூர், மேச்சேரி, ஆட்சி கட்டாமூர், காஞ்சிபுரம், கூரானூர், பெருங்கட்டூர், நேந்தம்பாக்கம் ஆகிய ஊர்களைச் சார்ந்த குடும்பங்கள் அவ்வூரின் பெயரிலேயே அழைக்கப்பட்டு வந்துள்ளனர். திருவதிவூரார், எறும்பூரார், (குண்ணத்தூரார்...) இப்பட்டப் பெயருடைய குடும்பத்திலுள்ள அனைவருக்கும் ஒரே கோத்திரம் ஆகும். ஒரே கோத்திரத்தைச் சார்ந்தவர்களிடையே திருமணம் நடைபெறாது. இந்த நடைமுறை ஒரு சமுதாய மறுமலர்ச்சிக்கு ஓர் அறிவியல் பூர்வமான செயல்பாடாகும்.

திருப்பறம்பூரைச் சார்ந்த சில குடும்பங்களின் மரபுவழியிலான அட்டவணையை திரு. ஸ்ரீவிஜயபாலன் அவர்கள் அளித்துள்ளார். அவரின் இந்த ஆய்வு, ஒரு சமுதாயத்தின் மரபணு ஆய்வு செய்வோர், மேலும் ஆய்வு மேற்கொள்ளத் தூண்டுதலாகும்.

மரபு வழியிலான அட்டவணை செவி வழி அறிந்ததை குறிப்பிட்டுள்ளோம். இதில் விடுபட்டு இருந்தால் முறைப்படி அறிந்தவர்கள் தெரிவித்தால் அதனை வரவேற்று மறுபதிப்பில் இணைக்க ஒத்துழைப்பு தருமாறு வேண்டுகிறோம்.

# ஆட்சி கட்டார் வீடு குடும்பங்கள்
## ('ஸ்ரீ'யும், திரு'வும்)




நன்றி - திரு. ஸ்ரீ விஜயபாலன்

# திருப்பறம்பூர் கூரா வீட்டு குடும்பங்கள்




நன்றி : தி.மு. ஸ்ரீவிஜயபாலன்

# திருப்பறம்பூர் மேச்சேரியார் குடும்பங்கள்



# 10 . இந்திய விடுதலைப் போராட்ட களத்தில் திருப்பறம்பூர்

ஒத்துழையாமை இயக்கம் இந்திய தேசிய இயக்கத்தின் முதல் வேள்விக்களம் ஆகும். 1921ல் தொடங்கிய ஒத்துழையாமைத் தத்துவங்களை நாடெங்கும் பரப்பிய காந்தியடிகள், ஸி.ஆர். தாஸ், கவிஞர் சரோஜினி நாயுடு, பண்டித ஜவஹர்லால் நேரு முதலிய தலைவர்கள் இந்தியா முழுவதும் சுற்றுப் பயணம் செய்து மக்களிடையே ஓர் எழுச்சியை உண்டாக்கினர். (அப்பாதுரை கா. 2001). காங்கிரஸ் இயக்கத்தில் மிகவும் ஈடுகொண்டு திரு. டி.எஸ். ஸ்ரீபால் அவர்கள் 1922-23ஆம் ஆண்டுகளில் வேலூர் குப்புசாமி முதலியார், சிதம்பரம் நயினார் பிள்ளை ஆகியோரை கிராமத்திற்கு அழைத்துச் சொற்பொழிவு ஆற்றச் செய்து பல இளைஞர்களைக் காங்கிரஸ் இயக்கத்தில் சேர்த்து சுதந்திர போராட்டம் பற்றி ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினார்.

மகாத்மாகாந்தி அவர்கள் சிறையிடப்பட்ட காலத்தில் திரு. ஸ்ரீபால் அவர்கள் மகாத்மா காந்தியின் உருவப்படத்தை ஊர்வலமாகக் கொண்டு சென்று கிராம மக்களை ஒன்று திரட்டினார். திரு. மே. இராமச்சந்திரநயினார், திரு. தேவபால நயினார், திரு. துரைசாமி நயினார், திரு. சாந்தி நயினார், திரு. அ. செல்வராக நயினார் ஆகியோர் ஊர்வலத்தில் உடன் இருந்தனர். காவல்துறை அதிகாரியின் எச்சரிக்கையையும் மீறி வெற்றிகரமாக ஊர்வலத்தை நடத்திக் காட்டினர்.

ஒத்துழையாமை இயக்கம் தீவிரம் அடைந்து இருந்த சமயத்தில் மக்கள் வெளிநாட்டுத் துணிகளையும் ஆலைத் துணிகளையும் தலைவர்கள் முன்னிலையில் மலைபோல் குவித்து எரியூட்டினர்.

திருப்பறம்பூர் கோயில் தெருவைச் சார்ந்த திரு. ஓதலவாடி சாந்தி நயினார், அவரது சகோதரர் திரு. அப்பாண்டை நயினார், திரு. எம்.ஏ. இராமசாமி நயினார் மற்றும் பலர் திருப்பறம்பூர் ஆலமரம் அருகே கூடி வெளிநாட்டுத் துணிகளையும், ஆலைத் துணிகளையும் குவித்து எரியூட்டினர். தேசிய விடுதலை இயக்கத்தில் இவ்வாறு பங்கேற்ற இவர்கள் இனிமேல் சட்டை எதுவும் அணியமாட்டோம் என்று சபதம் ஏற்றனர். அவ்வாறே அவர்களின் வாழ்நாளின் இறுதிவரை அக்கொள்கையைக் கடைபிடித்து வந்தனர்.



# 11. பின்னிணைப்பு

ஸ்ரீ சைலபுரமென்னும் திருப்பறம்பூரிலுள்ள தருமசாகர
சுவாமிகள் சத்சங்கத்தில் தருமசீலன் பத்திராதிப
ரும் ஜெயினாகெஜட் பத்திராதிபரும் உபந்யா
சம் புரிந்த சமயத்தில் அவர்களுக்
காகப் படிக்கப்பட்ட

தருமசீலன்.

## வந்தனோபசாரப் பத்திரிகை.

ஆதிகாலத்தில் ஜைனமதம் என்னும் கடலில் கல்வியாகிய தண்ணீர் நிறைந்திருந்தது. கல்விநீர் நிறைந்த இந்த ஜைன சமுத்திரத்தில் பவளக்கொடியும், சிப்பியும்போன்ற வித்வான்களும் உற்பத்தியாகி, முத்துப்வளம்போன்ற பல அரிய பெரிய தமிழ், கிரந்த புஸ்தகங்களைத் தோற்றுவித்தார்கள். காலவித்தியாசத்தினால், நம் தமிழ்நாட்டுஜைன போதகர்களாகிய மழைகுறைந்துபோகவே கல்வியாகிய தண்ணீர் குறைய, அதில் தோன்றும் வித்வான்களாகிய பவளக்கொடிகளும், சிப்பிகளும், பவளங்களும், முத்துக்களும் தோன்றாதொழிந்தன. ஆயினும், வடநாட்டிலுள்ள ஜைனமத சமுத்திரத்தின் மேலே ஜெகமந்தர்லால் ஜெயின் எம். ஏ., எம். ஆர். ஏ. எஸ்., பாரீஸ்டர் அட்லா, இந்தூர் ஹைகோர்ட் ஜட்ஜி, பண்டிட் அஜித் ப்ரஸாதா. எம், ஏ. எல். எல், பி, நம் தென்னாட்டினராகிய C. S. மல்லிநாத் ஜெயின் முதலிய மேகங்கள்தோன்றி ஜெயினாகெஜட் முதலிய பல பத்திரிகாபிரசுரங்களாகிய மாரிகளை ஆங்காங்கே சொரிந்து பரப்பி வருதலாலே ஆங்குள்ள ஜைனமத சமுத்திரம் வளங்குன்றாதிருக்கின்றது.

இத்தென்னாட்டிலுள்ள ஜைனமத சமுத்திரத்திற்கோ, ஜைனர்செய்த புண்ணியத்தினால் இப்போது ஸ்ரீ. ஆதிநயினார் என்னும் முகில்தோன்றி சுமார் இரண்டுவருஷகாலமாய் தருமசீலன் என்னும் தண்மாரிபொழிந்துவருகின்றது. இதனால், இனி தென்னாட்டு ஜைனமதக் கடல் வளமுடைத்தாய் விளங்குமென்பது திண்ணம். வடநாட்டில் கல்கத்தாவில் பிரமபுத்திராநதியும் கங்காநதியும் சேர்ந்து வங்காளக்குடாக்கடலில் பாய்வதைப்போல் இத்திருப்பறம்பூரின்கண் இன்று தருமசீலன் பத்திராதிபரவர்களும், ஜெயினாகெஜட் பத்திராதிபரவர்களும் ஸ்ரீ தருமசாகர சுவாமியார் புஸ்தகாலயம் திறக்கும் சமயத்தில் சேர்ந்தனர்

ஆதலால் அந்நதிகளால் சிறப்படையும் வங்காளக்குடாக்கடலைப்போல, இனி இப்புத்தகாலயமும், இதைச்சார்ந்த சங்கமும் சிறப்படையுமென்பதில் யாதொரு ஆக்ஷேபனையுமில்லை. ஆனதால், அவர்களிருவருக்கும் இச்சங்கத்தார் மனப்பூர்வமாக திரிகரண சுத்தியுடன் வந்தனம் செலுத்துகிறோம்.

இங்ஙனம்

தருமசாகர சுவாமியார்

சத்சங்கத்தின் அங்கத்தினர்.

ஸ்ரீ சைல புரமென்னும் திருப்பறம்பூரின்கண்
தருமசாகர சுவாமிகள்

# புத்தகாலயத் திறப்பு.

(4-12-1919)

சித்தார்த்தி௵ கார்த்திகை௴ 19உ குருவாரம் சென்னையிலிருந்து வந்த தருமசீலன் பத்திராதிபர் ஸ்ரீமாந். தி. ஆதிநயினார் அவர்களும், ஜைநகெஜட் பத்திராதிபர்-ஸ்ரீமாந்-மல்லிநாத் ஜெயின் அவர்களும், நம் தருமசீலனுக்கு ஆவலுடன் உழைத்துவரும் இராயபுரம்-ஸ்ரீமாந்-வஜ்ஜிரபாகு நயினார் அவர்களுடனும், காஞ்சை திருப்பறம்பூர் கிராமங்களிலுள்ள சகல ஸ்ராவக, ஸ்ராவகிகளுடனும் ஜிநாலயஞ் சார்ந்து பகவான் புஷ்பதந்த தீர்த்தங்கருக்கு விசேஷ அபிஷேகம் செய்து ஆகமங்களுக்கு அர்ச்சனை புரிந்து ஆகமங்களுடன் கோயிலை வலம்வந்து சாந்தி மண்டபத்தில் புஸ்தகசாலையை ஸ்தாபித்தார்கள். அப்போது "தருமசாகர சுவாமியார் சத்சங்கம்" என்னும் சபையின் முதல் கூட்டம் கூடியது. அக்கூட்டத்திற்கு சபையோர்களால் ஸ்ரீமான் ஸ்ரீயாம் தேவராஜ நயினார் அவர்கள் அக்ராசனாதிபதியாக நியமிக்கப் பட்டார்கள். சபையோர்களின் அனுமதியின்படி, ம-ா-ா-ஸ்ரீ. ஸ்ரீபால நயினார் அவர்கள், தருமசீலன் பத்திராதிபரவர்கட்கும், ஜைநகெஜட் பத்திராதிபரவர்கட்கும் வந்தனோபசாரப் பத்திரிகை வாசித்தார்கள். இராயபுரம்-ஸ்ரீமான்-வஜ்ஜிரபாகு நயினார் அவர்கள் நல்லொழுக்கம் என்பதைப்பற்றி வெகு தெளிவாக உபந்யாசித்தார்கள்.

ஸ்ரீமாந் - மல்லிநாத் ஜெயின் அவர்கள் "நம்முடைய வேலை" என்னும் விஷயத்தை எடுத்துக்கொண்டு அதில், "(1) மதகலாசாலை ஏற்படுத்துவதும் (2) சங்கங்கள் கூடுவதும் (3) புஸ்தகசாலை முதலியவைகளை ஏற்படுத்துவதும் நமது கடமைகளாம்" என்று மிகவிளக்கமாகப் பேசினார்கள்.

தருமசீலன் பத்திராதிபர். ஸ்ரீமாந் - ஆதிநயினார் அவர்கள் "நட்பும், ஒற்றுமையும், விடா முயற்சியும், சௌக்கியமும்" என்னும் விஷயங்களை மிகவிரிவாக உபந்நியாசித்தார்கள்.

ஸ்ரீமாந். ந. அகஸ்தியப்ப நயினார் அவர்கள் ஊக்கம் என்னும் விஷயத்தைப் பற்றி மிக அருமையாகப் பிரசங்கித்தார்கள். கடைசியில் அக்ராசனாதிபதி அவர்கள் முடிவுரையாக தருமசாகர சுவாமியார் பாடசாலை நியமிக்கவேண்டுமென்பதைப் பற்றிப் பேசினார்கள்.

தி. மே. புஷ்பநாதன்.
திருப்பறம்பூர்.

## பாடசாலையின் நோக்கம்.

ஜைன சமாஜத்தில் ஜாக்ரதையும் தேஜஸ்ஸையும் கர்த்தவ்ய ப்ரதானத்தையும் ஜைனதர்மத்தின் ஸ்வரூப பரிசயத்தையும், ஸதாசாரத்தையும், நல்ல விவஸாயத்தையும், தேசப்ரேமத்தையும் அக்ஞானந்தகாரத்தை விலக்கி ஜைனதர்மஞானப்பிரகாசத்தைச் செய்யவும், வியவஹாரிகபாரமார்த்திக ஜீவனத்தின் உபாயத்தைத்தெரிவிக்கிறதற்கும் இந்த பாடசாலை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

## வியவஸ்தை.

இந்த பாடசாலையின் ப்ரதிகாரியமும் கீழே எழுதி இருக்கும் மெம்பர்களினால் ஆகிய ஒரு சங்கத்தின் மூலமாகவேநடைபெற்று வருகிறது.

### அந்த சங்கத்தின் மெம்பர்கள் 19 பெயர்கள்.

ஸ்ரீமான்கள் A. ஸ்ரீபதி நயினார், பிரசிடெண்டு & காஷ்யர்.
(கவர்ன்மெண்டு பென்ஷனர்)

### செகரிடெரிகள்.

1. G. அம்ருதலால் ஜீ குலாப் சந்தஜீ, காஞ்சீபுரம். (மார்வாட்)
2. T. ஆதி நயினார், சென்னை.
3. K. சூரியகோட்டி நயினார், கரந்தை.

### மெம்பர்கள்.

1. ஸ்ரீமான் ஸ்ரீதர நயினார் திருப்பனமூர் (Land Lord)
2. ,, S. அப்பாண்டை நயினார் M.A., L.T., சென்னை பச்சையப்பன் காலேஜ் பிரபஸர்
3. ,, ஜெயராவ் நயினார் கரந்தை V. M.
4. ,, க. ஆதிராஜு நயினார் ,,
5. ,, ச. பொன்னுசாமி நயினார் ,,
6. ,, A. ஆதி நயினார் ,,
7. ,, ந. அப்பாவு நயினார் திருப்பனமூர் V. M.
8. ,, ந. அய்யாதுரை நயினார் ,, ஹெட்மாஸ்டர் போர்டு ஸ்கூல்
9. ,, ந. அகஸ்தியப்ப நயினார் திருப்பனமூர்
10. ,, எ. இராமச்சந்திர நயினார் ,,
11. ,, ஓ. சாந்திநாத நயினார் ,,
12. ,, T. A. ஜனகுமார நயினார் ,,
13. ,, T S. சமந்தபத்ர நயினார் B.A. ,,
14. ,, அ. பலதேவ நயினார் ,,
15. ,, ச. அய்ய நயினார் ,,
16. ,, சொர்ணபத்ர நயினார் டீச்சர் ,,

இந்த பாடசாலையில் பாலர் வகுப்பிலிருந்து பிரவேசிகாவகுப்பு வரைக்கும் 5 வகுப்புகள் இருக்கின்றன.

திரு. வி. நாராயணசாமி என்பவர் செப்டம்பர் மாதம் 1977-ஆம் ஆண்டு கரந்தை திருப்பறம்பூர் ஆலயங்களையும், நூல் நிலையங்களையும்,சிலைகளையும், ஓவியங்களையும் கண்டு களித்து 'சண்டே ஸ்டாண்டர்டு' எனும் ஆங்கில இதழிலும் (25.9.77) **'தினமணி சுடர்'** எனும் தமிழ் இதழிலும் (9.10.77) ஒரு கட்டுரை எழுதி வெளியிட்டுள்ளார். அக்கட்டுரையில் இருந்து ஒரு பகுதி.

Sunday Standard

25.9.77 Page-10

## MURALS OF KARANDAI

By. V. Narayanaswami

A few yards father off north is another temple dedicated to Pushpadantha, the Ninth Thirthankara. A tall, elegant granite Monolithic Manasthamba in the forecourt is a unique design. The square base becomes a circular tapering shaft, rises up with 4, 8, 16 and 32 facets to terminate in a tower. A library with old Jain books and a admirable rare look of reproductions in colour of scarec jain nature cloth paintings is an added attraction.

## தினமணி சுடர்

9.10.1977

... வி. நாராயண ஸ்வாமி

.... *சமண மதக் கொள்கைகளைப் பரப்பியதில் முதன்மை* ஸ்தானம் வகித்தவர் ஆசாரியர் குந்த குந்தர் எனும் யதீந்திரர். அவருக்கு பின்முறையே உமாஸ்வாமி, பாலகபிஞ்சர், சமந்த பத்ரர் (கி.பி. 138) சிம்மநந்தி, அகளங்கர் (கி.பி.788). இமசீதளன் என்னும் அரசன் அவையில் பௌதர்களை வாதத்தில் வென்று தன் பெருமையை நிலை நாட்டிய ஆசாரியர் அகளங்கர். இவர் உருவர் தர்மதேவி கோயில் நுழைவாயிலில் மேலே வடிக்கப்பட்டுள்ளது.

சிறிது தள்ளி வடக்கே உள்ளது 9வது தீர்த்தங்கரர் புஷ்பதந்தரின் ஆலயம் ஒரேக் கல்லில் செதுக்கப்பட்டு, 4, 8, 16, 32 என்று பட்டை தீட்டப்பட்டு ஓங்கி எழுந்து கூம்பி வளர்ந்த மானஸ்தம்பம் முன் சதுக்கத்திலுள்ளது. இடதுபுறம் தர்மசாகர், சுதர்மசாகர் என்னும் இரு சமணப் பெரியார்கள் சல்லேகனம் நோன்பு ஏற்று வாழ்நாளை முடித்துக் கொண்ட பெருமையை கல்லில் வடித்த இரு பாதங்கள் பறை சாற்றுகின்றன. இக்கோயிலுள் பல அபூர்வ விக்ரகங்கள் உண்டு. அதில் தனித்தன்மை வாய்ந்தது மகுடத்தில் அனல் ஜ்வாலையாக எழுப்பும் அமைப்புடன் சந்திரபிரபா என்னும் 8வது தீர்த்தங்கரரின் யக்ஷியான ஜ்வாலாமாலினி.

## 12. துணை நின்ற நூல்கள்


கரந்தை எஸ்.ஏ. அப்பாண்டை, 1980 அமரர் ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் நினைவு அஞ்சலி அகளங்கதேவர் அருங்கலை மன்றம், கரந்தை.

அம்பை மணிவண்ணன். கோயில் ஆய்வும் நெறிமுறைகளும் ஜெ.ஜெ. பப்ளிகேஷன்ஸ், மதுரை.

அப்பாண்டைராசன் ஜெ. (தெளிவுரையாசிரியர்) 2009 - சீவசம் போதனை. ஜைன இளைஞர் மன்றம், சென்னை

அஜிததாஸ், கனக. 2006 தமிழ்ச் செம்மொழியாய் வளர்த்த திராவிட திகம்பர சமண தமிழ்த்துறவிகளும் உலகிற்கு அவர்கள் வழங்கிய அருள்நெறியும். ஜைன இளைஞர் மன்றம், சென்னை.

அஜிததாஸ், க.வி. 2006. சமண தத்துவச் சொற்பொருள் களஞ்சியம். ஆசாரிய ஸ்ரீவித்யாசாகர் தர்ம பிரபாவனா சங்கம், சென்னை-600 053.

அருணவசந்தன், பூசை ச.2001. ஜைன ஆலயத் திருமேனிகள் சிவசுந்தரி கலைக் கூடம், சென்னை - 600 018.

அறவாணன். க.ப. 1993. சமணம் வளர்த்த தமிழ். சமணாலயம் புதுச்சேரி.

ஆதிநாதர் பிள்ளைத் தமிழ். 2009 ஜைன இளைஞர் மன்றம், சென்னை.

இராசு. செ. 2007. ஈரோடு மாவட்ட வரலாறு கொங்கு ஆய்வு மையம், ஈரோடு

இராசு. செ. 2005. கொங்கு நாடும் சமணமும். கொங்கு ஆய்வு மையம், ஈரோடு

இராசு. செ.2008. கொங்குகுல மகளிர். கொங்கு ஆய்வு மையம், ஈரோடு.

இராசு பவுன்துரை 2004. தமிழகக் கோயிற் கட்டடக் கலைத் தொழில் நுட்பம்-ஆதிட்டானம். மெய்யப்பன் பதிப்பகம் சிதம்பரம்

இராசு பவுன் துரை, 2004. தமிழகக் கோயிற் கட்டடக் கலை மரபு -மயன் அறிவியல் தொழில் நுட்பம். மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம்.

இராமநாதன் பி. 2008. தமிழர் வரலாறு பண்டு முதல் இன்று வரை. தமிழ் மண் பதிப்பகம், சென்னை-17.

ஏகாம்பரநாதன். ஏ. 1985, 2009. சித்தாமூர் வரலாறு ஜினகாஞ்சி மடம், சித்தாமூர்.

1988, திருநறுங்கொண்டை வரலாறு, ஜைன இளைஞர் மன்றம், சென்னை-17.

ஏகாம்பரநாதன். ஏ. 1991. தொண்டை நாட்டுச் சமணக் கோயில்கள் ஜைன இளைஞர் மன்றம், சென்னை-17

ஏகாம்பரநாதன். ஏ. 1991. ஸ்ரீமுனிகிரி (கரந்தை) திகம்பர திருத்தள வரலாறு திருப்பணிக் குழு, ஸ்ரீ முனிகிரி திகம்பர ஜிநாலயம் கரந்தை - 604 410.

ஏகாம்பரநாதன். ஏ. 2008. சமணம் போற்றும் சல்லேகனை. முக்குடை 19-21, நவ- 2008.

ஏகாம்பரநாதன் ஏ. 2008. தமிழகத்தில் சமணம் - ஓர் தொல்லியல் கண்ணோட்டம், முக்குடை ஏப்ரல் ப.17-19.

சோழர் ஆட்சியில் சமண சமய வளர்ச்சி, ஏகாம்பரநாதன். ஏ. 2002 சமண சமயத்தில் யகஷி. முக்குடை ஜூன், ஜூலை, ஆகஸ்ட் ப.9, ப.8, 8-10.

ஏகாம்பரநாதன், 2005 காஞ்சிப் பகுதியில் சைனம்முக்குடை நவம்பர் 2005. ப.3-10.

கஜபதி ஜெயின். எஸ். - 1977. திருப்பறம்பூர் ஸ்ரீதர்மசாகர சுவாமிகள். நூல்நிலைய வரலாறு. திருப்பறம்பூர் சிராவக சிராவிகள்.

கஜபதி ஜெயின். எஸ். 1995. அறம் பறப்பிய ஆசாரியர்கள். ஆசாரிய குந்த குந்தர் கல்வி நிறுவனம். குந்த குந்த நகர் 604 505.

நடன காசிநாதன், மா. சந்திரமூர்த்தி. 2006. வேலூர் மாவட்டத் தடயங்கள். மெய்யப்பன் பதிப்பகம். சிதம்பரம்.

கிருட்டிணமூர்த்தி. கோ. 1994-2005. செஞ்சிப் பகுதியில் சமணம். சேகர் பதிப்பகம், சென்னை-78.

காசிநாதன், நடன; மா. சந்திரமூர்த்தி 2005. சமணத் தடயம். மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

கந்தையா பிள்ளை ந.சி. 1947, சிந்துவெளித் தமிழர். முத்தமிழ் நிலையம்.சென்னை.

கோவைகிழார் 2002. சமணர் வாழ்வியல் சிந்தனைகள். செல்லம் பதிப்பகம், தஞ்சாவூர்.

கரந்தை திருப்பறம்பூர் ஸ்ரீ அகளங்க ஸமஸ்கிருத பாடசாலை. 3-ஆம் ஆண்டு நிறைவு அறிக்கை கி.பி. 1940.

சிம்மசந்திர ஜைன் சாஸ்திரியார்; க.வி. அஜிததாஸ் 2004. சமாதி மரணப் பெருவிழா. ஆசாரிய ஸ்ரீ வித்யாஸாகர் தர்ம பிரபாவனா சங்கம், சென்னை-53.

அக்ஷய திருதியை. சம்யக்ஞான பிரசார சங்கம், சென்னை.

சதுர்விம்சதி தீர்த்தங்கரர் களந்தாதி 1998. காஞ்சிபுரம் ஜைன இளைஞர் மன்றம். காஞ்சிபுரம்.

சுகுமாரன். அ. 2006, 2007. ஜைனம், ஸ்ரீநேமிநாதர் பதிப்பகம், சென்னை-82.

சந்திரா. சி. 2008. சமணர் வாழ்வியல் சிந்தனைகள். செல்லம் பதிப்பகம், தஞ்சாவூர்.

சந்திரமூர்த்தி. மா.ஆர். வசந்த கல்யாணி 2005. சோழநாட்டில் சமண சமயம்.

கிரியா கலாபம் (நந்தீசுவர பக்தி). ஐந்தாம் தொகுதி. 1995 சௌ. பத்மவதி - மந்திரிகுமார், காஞ்சிபுரம்.

சதாசிவம் பண்டாரத்தார். தி.வை. 2007. பிற்காலச் சோழர் சரித்திரம் அமுத நிலையம். அறக்கட்டளை, சென்னை- 14

தெய்வநாயகம். கோ. 2002. தமிழர் கட்டிடக் கலை, உலக தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை.

தரணேந்திரன். ஜி. 1983, 1982 பழம்பெறும் சமணப் பாடல்கள் ஜி. தரணேந்திரன். திருப்பறம்பூர்.

தண்யகுமார். சிரே கலைமகள் வழிபாடு, முக்குடை 4-6.

திருப்பறம்பூர் தன்யகுமார். சிரே 2005. மால்கெட் இராட்டிரகூடர் வரலாறும் ஜைனமும். ஜைன இளைஞர் மன்றம் சென்னை.

தன்யகுமார் சிரே. 2007. ஜைனவியல் கட்டுரைத் திரட்டு. ஜைன இளைஞர் மன்றம், சென்னை தருமசீலன் பதிப்பாசிரியர் திரு. ஆதிநயினார் மாத இதழ் ஏப்ரல் 1919, பிப்ரவரி 1920.

நடராசன். அ.லெ. 1968, 2006. பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு. அம்ருதா பதிப்பகம், சென்னை

நீலகேசி. அ. 2006. வாழும் வரலாறு. காஞ்சி ஜைன இலக்கிய மன்றம். காஞ்சிபுரம்.

இரா. நாகசாமி, இரா. மா. சந்திரமூர்த்தி 2009. தமிழகக் கோயிற் கலைகள். தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை.

பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரி 1995. அநேகாந்தமும் ஸ்யாத்வாதமும். ஸ்ரீஅகளங்க தேவர் அநேகாந்த மன்றம், சென்னை-15.

பரத சக்ரவர்த்தி ஜெயின் சாஸ்திரியார். பகவான் ஆதிநாதர் துதியும் சென்னை தி. ஆதிநயினார் வரலாறும். பரமாத்ம தத்துவ பிரசார நிலையம். சென்னை.

பாலசுப்பிரமணியன், குடவாயில் 2004. கோபுரக்கலை மரபு, கோயிற் களஞ்சியம். (வரலாறு மற்றும் கலையியல் ஆய்வு மையம்) தஞ்சாவூர்.

பிள்ளை .கே. 2002. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். தரமணி, சென்னை.

பொன்னிய குமார் வி.ஜி. 1993. ஸ்ரீ 1008 ஆதிபகவன் வாழ்க்கை வரலாறு. அன்னை சாந்தா பதிப்பகம், வந்தவாசி.

ரமேஷ். த. 2005. நடு நாட்டுச் சமணக் கோயில்கள். மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம்.

முக்குடை. 108 ஸ்ரீ கஜபதி சாகர் நினைவு சிறப்பிதழ், முக்குடை, திசம்பர் 88.

முக்குடை. திருப்பறம்பூர் ஜீவபந்து சந்தனம் ஸ்ரீபால். அக்டோபர், 2002 ப.16.

மல்லிநாத் ஜெயின் சாஸ்திரியார் 2001. அர்த்தமுள்ள ஜைன தர்மம். திருமதி சரோஜா சாஸ்திரி சென்னை- 15.

மணிவண்ணன், அம்பை. கோயில் ஆய்வும் நெயிமுறைகளும் ஜே.ஜே. பப்ளிகேஷன்ஸ், மதுரை

மூவோ துப்ருயல், 1999. தமிழாக்கம், முரளி அரூபன். திராவிடக் கட்டளைக் கலை. ரிஷபம் பதிப்பகம், சென்னை - 600 078.

விஜயன். ஆர். 2005. அறிவழி தாங்கி. பக்கம் - 111-115, சமண தடயம் நடன காசிநாதன். மா. சிந்திரமூர்த்தி, மணிவாசகர் பதிப்பகம், சென்னை

வேங்டகசாமி, மயிலை சீனி 2004. சமணமும் தமிழும். நாம் தமிழர் பதிப்பகம், சென்னை.

வேங்கடசாமி, மயிலை சீனி - 2008. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள் பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை.

வேலாயுதராஜா. ப. 2008. திருப்பத்தூர் வரலாறு பாவை பப்ளிகேஷன்ஸ் வெளியீடு. சென்னை.

வேங்கடேசன். ந.2004. நடுநாட்டில் சமணம். திருமுடி பதிப்பகம், புதுவை.

ஸ்ரீபால். டி. எஸ். 1967. அருகப் பெருமானைப் போற்றும் இன்னிசைப் பாடல்கள். ஜைன இலக்கிய ஆராய்ச்சி மன்றம் சென்னை-1.

ஸ்ரீபால். டி.எஸ். - 1979. நற்காட்சியாளர் துதிப்பாடல் வி.டி. தேவராஜ் நயினார் விப்பேடு.

ஸ்ரீபால். டி.எஸ். 1980. நற்காட்சியின் மாட்சி. வேலூர் ஜைன சங்கம் வேலூர் 6.

ஸ்ரீபால். டி.எஸ். 1973. திருப்பறம்பையும் முனிபரம்பரையும். நல்லறம் நவ.1973.

ஸ்ரீபால். சு.2008. ஸ்ரீ சுபார்சுவநாத தீர்த்தங்கரர் முக்குடை. நவம்பர், ப.7-9.

ஸ்ரீபால். சு 2008. ஸ்ரீவாஸுபூஜ்ய தீர்த்தங்கரர். முக்குடை. டிசம்பர், 7-8

ஸ்ரீபால். சு 2009. ஸ்ரீ சாந்திநாதர், முக்குடை ஜனவரி 8-9.

ஸ்ரீபால் சு.2010. விழுக்கம் தந்த விழுமிய கொடை முக்குடை மார்ச் ப.13-14.

ஸ்ரீசந்திரன் ஜெ. 2002. அறநெறிச்சாரம். மூலமும் விளக்கவுரையும். வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-17.

ஸ்ரீபால வர்ணி 1948 நோன்புக் கதைகள், மஹாவீரர் அண்டு கம்பெனி, சென்னை.

ஜம்புகுமாரன். தோ. 2007-2008 சமணம் வாழ்கிறது. உதவும் உள்ளங்கள், மாத இதழ், சென்னை-53.

ஜம்புகுமாரன். தோ 1995. தமிழக ஜைன க்ஷேத்திர மாலை ஸ்ரீ அகளங்கர் அனேகாந்த மன்றம், சென்னை-12.

ஜம்புகுமாரன். தோ. 2010. விதான மஞ்சரி. பகவான் 1008 ஸ்ரீ விஜய பார்சுவநாதர் ஜினாலயம். சென்னை.

ஜெயராஜ். சு. 2002. அநேகாந்தமும், சியாத்வாதமும். ஜீவன் விக்யான் அகாடமி,காந்தி ஸ்ரீ யூகிய வளாகம், மதுரை.

Ekambaranathan, A.2002. Jaina Iconography in Tamilnadu, Shri Bharatvarshiya Digamber Jain (Teerth Sanrakshini) Mahasabha, Lucknow

Shah. U.P., M.A. Dhaky 1975. Aspects of Jaina Art and Architecture. Gujarat State Committee on the Celebration of 2500th Anniversary of Bhagavan Mahavira Nirvana, Ahmedabad.

Achievement of Sri Jeevabandu Sripal. The South Indian Human League, Madras.

Mackenzie Manuscripts, 1972. Vol.I Edition T.V. Mahalingam. University of Madras.



# ஸ்ரீதசலட்சண தரும பூஜா விதான யந்திரம்




## அறங்கள் பத்து

(தச தர்மம்)

அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று (குறள். 49)

இல்வாழ்வில் பிறர் பழிக்கு ஆளாகாமல் அறவழியில் வாழ பத்து அறங்களை (தச தர்மங்களை) அறிவுறுத்தியுள்ளது சமணம். அதை தெளிவாக எடுத்துரைக்கும் முனைப்பாடியாரின் அறநெறிச்சாரப் பாடல் (12) :-

மெய்ம்மை பொறையுடைமை மென்மை தவம்அடக்கம்
செம்மை ஒன்று இன்மை துறவுடைமை – நன்மை
திரும்பா விரதம் தரித்தலோடு இன்ன
அறம்பத்தும் ஆன்ற குணம்.

வாய்மையும், பொறுமையும், மென்மையும், தவமும், அடக்கமும், நிடுநிலைமையும், தன்னலம் இல்லாதிருத்தலும், ஆசைகளைத் துறத்தலும், துறவை மேற் கொள்ளுதலுமான அறங்கள் பத்தும் மேன்மையான ஒழுக்கமாகும்.